

# நாளுக்கு நாள் அதிக தெளிவான, எழிலோங்கும் சருமம்




கலந்த ரெக்ஸோனு இந்த அற்புத வேலையைச் செய்யட்டும்.



ரெக்ஸோனுவின் கேடில் கலந்த நுரையை உங்கள் சருமத்தில் மெதுவாகத் தேய்த்து, பிறகு கழுவுங்கள். உங்கள் சருமம் நாளுக்கு நாள் அதிக மழமழப்பும், தெளிவும் பெறுவதைக் காண்பீர்கள். அதனுல் புதுப்பொலிவுடன் விளங்குவீர்கள்.



# ரெக்ஸோனு

## கேடில் கலந்த சோப் இதுவென்றே




* சருமத்திற்கு ஊட்டமளித்து பிருதுவாக்கும் எண்ணெய்களின் பிரத்தியேகக் கலவையின் ரெஜிஸ்டர் செய்யப்பட்ட பெயர்.

RP. 118-50 TM

ரெக்ஸோனு ப்ரொப்ரைட்டரி லிமிடெட்டுக்காக இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி பொருளடக்கம்

மலர் 13 | 1954 மே 30 | ஜய ஹு
இதழ் 44 | | வைகாசி 17



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 13 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 44

# சலோ புதுச்சேரி!

மூர்ச்சை அடைந்திருந்த நோயாளியைப் பரிசோதனை செய்த டாக்டர் அவன் இறந்து விட்டதாகத் தீர்ப்புக் கூறி விட்டார்.

டாக்டர் சென்ற பின் நோயாளி மூர்ச்சை தெளிந்து கண்களைத் திறந்தான்; எழுந்திருக்க முயன்றான். பக்கத்தில் இருந்தவர்கள் அவனை எழுந்திருக்க விடவில்லை.

"நீ இறந்து விட்டதாக டாக்டர் முடிவு செய்திருப்பதால், கண்களைத் திறக்கவோ, எழுந்திருக்கவோ உனக்கு உரிமை இல்லை" என்று வாதாடினார்கள்.

"நான் உயிருடன் இருக்கிறேனே" என்று அலறினான் நோயாளி.

"டாக்டர் வந்து சொன்னாலொழிய நாங்கள் அதை நம்ப முடியாது" என்று சொல்லி விட்டார்கள் பக்கத்தில் இருந்தவர்கள்.

அன்னிய ஆதிக்கமாகிற நோயினால் உணர்ச்சி இழந்து கிடந்த பிரஞ்சு இந்திய மக்கள், இப்போது மேற்படி நோய் தீர்ந்து ஒளியும் உணர்ச்சியும் பெற்று விட்டார்கள்; வீறு கொண்டெழுந்து சுதந்திரப் போரை நடத்தி வருகிறார்கள்.

ஆனால், பிரஞ்சுக்காரர்களோ கண்முன் காணும் இந்த உண்மையை நம்ப மறுக்கிறார்கள். பொதுஜன வாக்கு எடுப்பு சோதனையில் அவர்கள் தேறினாலன்றி, அவர்கள் உயிர் பெற்றதாகத் தாங்கள் கருத முடியாது என்று சாதிக்கிறார்கள்.

பொதுஜன வாக்கு எடுப்பில், பிரஞ்சிந்தியப் பிரதேசங்கள் இந்தியாவுடன் ஐக்கியம் அடைவதை ஆதரித்து, நூற்றுக்கு ஐம்பத்தொன்று பேர்கள் வீதம் வோட்டுக் கொடுத்தால் போதுமானது.

ஆனால், இப்போதோ பிரஞ்சு இந்தியாவைச் சேர்ந்த தொண்ணூற்று ஒன்பது சத விகிதம் பேர் ஏகோபித்துப் பிரஞ்சு ஆதிக்கத்தை ஒழித்து விட்டார்கள்.

அவ்வாறு பிரஞ்சு ஆட்சியிலிருந்து விடுதலை பெற்ற பிரதேசங்களைச் சேர்ந்த பிரதிநிதிகள் அடங்கிய மகாநாடு சில தினங்களுக்கு முன் மதுக்கரை என்ற இடத்தில் வெகு குதூகலமாக நடந்தது. விடுதலை பெற்ற அறுபது கிராமங்களைச் சேர்ந்த முந்நூறு பிரதிநிதிகள் அதில் கலந்து கொண்டார்கள்.

பிரஞ்சு இந்திய முன்னாள் மந்திரி ஸ்ரீ குபேரின் தலைமையில் நடந்த அம்மகாநாட்டில், புதுச்சேரி மாஜி மேயர் ஸ்ரீ முத்துப்பிள்ளை முதலிய தலைவர்கள் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டு, மகாநாடு வெற்றி பெறச் செய்தார்கள்.

பிரஞ்சு ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்ற பிரதேசங்களில் சட்டம், சமாதானம், ஒழுங்கு முதலியவற்றைப் பாதுகாக்கவும், ஜனங்களுக்குக் கல்வி, வைத்தியம், போக்கு வரத்து முதலிய துறைகளில் வசதி செய்து கொடுக்கவும் பத்தொன்பது பிரமுகர்கள் அடங்கிய நிர்வாக சபையையும் நியமித்தார்கள்.

'பிரிட்டிஷாரே! இந்தியாவிலிருந்து வெளியேறுங்கள்' என்று காந்தி மகான் தலைமையில் பாரதநாட்டு மக்கள் பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்துக்குச் சில ஆண்டுகளுக்கு முன் இறுதி எச்சரிக்கை விடுத்தார்கள் அல்லவா?

அது போலவே, மதுக்கரை மகாநாட்டிலும் 'பிரஞ்சுக்காரர்களே! வெளியேறுங்கள்' என்று பிரஞ்சு இந்தியப் பிரதிநிதிகள் ஏகோபித்து இறுதி எச்சரிக்கை விடுத்தார்கள்.

நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் நிறுவிய இந்திய தேசியப் படை வீரர்கள் 'சலோ டில்லி' என்று கோஷம் செய்தது போல, பிரஞ்சு இந்திய தேசபக்தர்களும் 'சலோ புதுச்சேரி' என்று கோஷம் செய்து வருகிறார்கள்.

பிரஞ்சு இந்தியாவின் ஆதிக்கத்தி லிருந்து புதுச்சேரியையும் மீதியுள்ள இடங்களையும் மீட்போம் என்று கர்ஜித்து வருகிறார்கள்.

புதுச்சேரியில் உள்ள பிரஞ்சு இந்திய சர்க்கார் காரியாலயத்தில், பாரதத் தாயின் மணிக்கொடி கம்பீரமாக ஒளி வீசிப் பறக்கும் காலம் அதிக தூரத்தில் இல்லை என்று எட்டுத் திசையும் அதிர முழக்கம் செய்து வருகிறார்கள்.

டிருப்பது ஊமைத் துரையின் உற்று நோக்கும் கண்களுக்குத் தெரிந்து விட்டன!

ஊமைத் துரையின் இதயம் துடித்தது; கால்கள் துடித்தன; கரங்களும் துடித்தன! கண்கள் மாலைச் சூரியனைப் போன்றாயின!

ஓசைப் படாமல் பாய்ந்து ஓடினான். இரும்பொத்த தன் கரத்தினால் சார்லஸைப் பற்றினான். மறு கணம்—மறு கரத்தால் சார்லஸின் தோளிலே சாய்ந்திருந்த துப்பாக்கியைத் தட்டி விட்டான்! தள்ளிய அந்தத் துப்பாக்கி சுவரின் ஓரத்திலே விழுந்தது! இவை யாவும் கண நேரத்தில் நிகழ்ந்தன!

ஊமைத் துரையின் உருவத்தைக் கண்ட சார்லஸ் நடுங்கிப் போனான். அவன் உள்ளம் பயங்கர மென்னும் படு பாதாளத்தில் விழுந்தது! இதயம் விரிந்து சுருங்குவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது! மேனி சிலிர்த்தது!

வீரத் தமிழனை ஊமைத் துரையின் கண்கள் கனலைக் கக்கின. ஒளியும் உத்தரவின்றி நுழைய முடியாத வீரத் தமிழனின் கோட்டையில் ஒரு ஒற்றன்! அதுவும் ஆங்கிலேயன்! அவன் வாய் முணகிற்று. 'கோபக் குன்றின்மீது ஏறி நின்றான். ஒற்றனான சார்லஸின் சிரத்தை நோக்கித் தன் உடைவாளை ஓங்கினான்.

சார்லஸ் கண்முன் ஊமைத் துரையின் உருவம் சுழன்றது! கார் மேகத்திடையே தோன்றும் மின்னலைப் போன்று அந்தக் கத்தி மின்னியது. கழுத்தை நோக்கி விரைய ஆரம்பித்தது, ஒளி வேகத்தில்!

அடுத்த கணம்!

ஒரு பெண்ணின் அலறும் குரல் பயங்கரமாகக் கேட்டது! அழுகையால் மூடப்பட்ட அந்த அலறல் நிலவறையின் நிசப்தத்தைக் கிழித்தது.




திரும்பிப் பார்த்த ஊமைத் துரை திகைத்து நின்றான். திகைப்பின் எல்லையைத் தாண்டி நின்றான்! சார்லஸின் கழுத்தை நோக்கி வந்துகொண்டிருந்த அந்தக் கத்தி கண நேரத்தில் நின்றது.

நீர் வழியும் நயனங்களுடன், விம்மும் மார்பகத்துடன் ஒரு வனிதை காட்சி அளித்தாள்! ஆம்; ஆங்கிலேய மாது ரோஸினாதான்.

ஓடி வந்தாள்; ஊமைத்துரையின் அருகே வந்து நின்றாள். இரு கரங்களையும் விரித்து வீரத் தமிழன் முன் மண்டியிட்டாள். தன் காதலன் சார்லஸின் உயிர்ப் பிச்சையை வேண்டினாள். அவள் மன்றாடிக் கதறிய குரல் அந்த அறை முழுவதும் சோகமாக ஒலித்தது!

ஆனால் அந்தக் கதறலினால் எல்லாம் ஊமைத் துரையின் உள்ளம் கரைந்து உருகி விடவில்லை!

"எண்ணற்ற தமிழர்கள் இறந்தனர். ஏன்? வீரத் தமிழர் சேனையில் அநேக மதிப்பில்லா மாணிக்க வீரர்கள் மறைந்தனர்! ஏன்? எல்லாம் பரங்கியர் பட்டாளத்தின் பலி வேட்கை! வஞ்சகம் நிறைந்த அந்த வீணர்களின் கூட்டத்துக்குக் கொஞ்சமும் இரக்கம் காட்டலாகாது! துரோகம் நிறைந்த அந்தத் தூர்த்தர்களின் கூட்டத்துக்குத் துளியும் அன்பு காட்டலாகாது!"

மேற் கூறியவாறு ஊமைத் துரையின் உள்ளத்திலே பல குரல்கள் மாறி மாறி ஒலித்தன. இதனால் அவன் கண்கள் முன்னிலும் சிவந்தன! பற்கள் நெறிந்தன! தோள்கள் துடித்தன!

மறுபடியும் வாளை ஓங்கினான் ஊமைத்துரை. அவள் முன்னிலும் வேகமாக, உரக்கக் கதற ஆரம்பித்தாள். சார்லஸின் வதனத்திலே பீதி திரையிட்டிருந்தது; பேச முடியவில்லை! கண்கள் கருணையை வேண்டி நின்றன.

"சுதந்திர மஞ்சத்திலே தவழும் தமிழனை அடிமை விலங்கை அணியச் சொல்கின்றீர்கள்! தமிழ்த் தாயின் மடியிலே தவழும் எங்களை உங்கள் பாதங்கள் முன் பணியவா சொல்கின்றீர்கள்! வஞ்சகத்தின் வடிவங்களே! உங்களிடமா இரக்கம் காட்டுவது!" என்று [illegible] வேங்கைப் புலியாக உறுமினான் ஊமைத் துரை.

காரணம்; அங்கு வங்காளிகளான கிழக்கு பாகிஸ்தான் முஸ்லிம்களும் வங்காளிகளல்லாத மேற்கு பாகிஸ்தான் முஸ்லிம்களும் வெகு ஆக்ரோசத்துடனும் மிருகத்தனமாகவும் ஒருவரை யொருவர் தாக்கி, மிகுந்த உயிர்ச் சேதத்தை உண்டு பண்ணினார்கள் என்று ஜனாப் பஸ்லுல் ஹக் உண்மையை அம்பலப்படுத்தி யிருக்கிறார்.

ஜனாப் பஸ்லுல் ஹக்கும் கிழக்கு பாகிஸ்தான் மந்திரி சபையில் உள்ள அவரது சகாக்களில் நால்வரும் கராச்சிக்குச் சென்று டாக்கா கலகத்தை ஒட்டிப் பாகிஸ்தான் மந்திரிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தி வருகிறார்கள்.

இதன் மத்தியில், கிழக்கு பாகிஸ்தான் மந்திரி சபையை விலக்கிவிட்டு, கவர்னர் ஆட்சியை ஏற்படுத்தப் பாகிஸ்தான் சர்க்கார் விரும்புவதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. அவ்விதம் செய்தால் பாகிஸ்தானிலே பெரும் உள்நாட்டுக் கலகம் மூளும் என்று ஜின்னா அவாமி லீக் தலைவர்கள் கடுமையாக எச்சரித்துள்ளனர்.

•• •• ••

மேற்கு பாகிஸ்தானுக்கும் கிழக்கு பாகிஸ்தானுக்கும் உள்ள உறவு நாளுக்கு நாள் மோசமாகி வருகிறது. துவேஷத் தீ எந்த விநாடியிலும் ஜ்வாலை விடலாம் என்ற நிலைமை உண்டாகி யிருக்கிறது. உருதுவும் கிழக்கு பாகிஸ்தான் மக்களின் பொது பாஷையான வங்காளியும் பாகிஸ்தான் தேசிய பாஷைகளாக இருக்க வேண்டும் என்று சில தினங்களுக்கு முன் பாகிஸ்தான் அரசியல் நிர்ணய சபை முடிவு செய்தது. அந்த நியாயமான முடிவை மேற்கு பாகிஸ்தான் தலைவர்கள் கண்ணியமாக ஏற்றுக் கொண்டிருந்தால் மேற்கு, கிழக்கு பாகிஸ்தான் உறவில் ஓரளவு அபிவிருத்தி ஏற்படுவதற்கு வழி பிறந்திருக்கும். ஆனால் அந்த முடிவை ஆட்சேபித்து மேற்குப் பாகிஸ்தானில் உண்டாகி யுள்ள கண்டனக் கிளர்ச்சி கிழக்குப் பாகிஸ்தானியரின் ஆத்திரத்துக்குத் தூபம் போட்டது போலாகி யிருக்கிறது.

எனவே, பாகிஸ்தான் மத்திய சர்க்காரின் அதிகார மமதை காரணமாகக் கிழக்கு பாகிஸ்தானில் நெருக்கடி ஏற்படுமாயின் அதனால் ஆசியாவிலேயே பெரும் அரசியல் உற்பாதம் உண்டாகலாம். மேற்படி உற்பாதத்தினால் இந்தியாவுக்கும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படலாம். மேற்கு பாகிஸ்தானும் கிழக்கு பாகிஸ்தானும் ஒற்றுமையுடனும் நேர்மையுடனும் நடந்து கொண்டால்தான் இந்தியாவுக்கு நல்லது; ஆசியாவின் க்ஷேமத்துக்கும் உலகத்தின் க்ஷேமத்துக்கும் நல்லது. அவ்விதமின்றி மேற்கு பாகிஸ்தானுக்கும் கிழக்கு பாகிஸ்தானுக்கும் உள்ள பகை முற்றி விடுமாயின், அதன் விளைவாகப் பாகிஸ்தானின் ஒரு புறத்தில் அமெரிக்கர்கள் பிரவேசிப்பதற்கும் மற்றொரு புறம் ருஷ்யர்கள் பிரவேசிப்பதற்கும் வழி ஏற்பட்டு விடுமே என்று கவலைப்படுகிறோம்.

# உருப்படாத யோசனைகள்

குட்டை குழப்ப ஒரு கமிட்டி என்பது ஆந்திர ராஜ்ய சர்க்காரின் கொள்கையாக இருந்து வருகிறது. ஏற்கெனவே அவர்கள், இப்போது அமுலில் இருந்து வரும் மதுவிலக்கைப் பற்றிப் பரிசீலனை செய்வதற்காக ஒரு கமிட்டியை நியமித்திருந்தார்கள். அந்தக் கமிட்டியார் கூறியுள்ள ‘அபூர்வ’ யோசனைகள் ஆந்திர ராஜ்ய அரசியல் கட்சிகளிடையே பெரும் குழப்பத்தை உண்டாக்கி, ஆந்திர சர்க்காரையும் தர்ம சங்கடத்துக்கு உள்ளாக்கி யிருக்கிறது.

மேற்படி கமிட்டியால் ஏற்பட்ட புயல் அடங்குவதற்குள் ஆந்திர சர்க்கார் மற்றொரு கமிட்டியை நியமித்தார்கள். ஆரம்பக் கல்விப் பிரச்னையைத் தீர்ப்பதற்குரிய யோசனைகளை அலசி ஆராய்ந்து கூறுவதற்காக அக்கமிட்டி நியமிக்கப்பட்டது. அந்தக் கமிட்டியின் சிபார்சுகள் இப்போது வெளியாகி யிருக்கின்றன.

ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் ஐந்து மணி நேரம் வகுப்புகள் நடைபெற வேண்டும்.

அதில் இரண்டரை மணி நேரம் புத்தகப் படிப்புக்குச் செலவழிக்கப்பட வேண்டும்; பாக்கி இரண்டரை மணி நேரத்தைப் பொது அறிவு வளர்ச்சிக்கான விஷயங்களிலும் விளையாட்டுகளிலும் செலவிட வேண்டும்.

பெற்றோரின் இஷ்டத்துக்கு இணங்க, குழந்தைகள் புத்தகப் படிப்புக்காக ஒரு வேளை மாத்திரம் பள்ளிக்கூடத்துக்கு வர விரும்பினால் அப்படியே செய்யலாம்.

ஆரம்பக் கல்விச்சாலைப் பாடப் புத்தகங்களை ராஜ்ய சர்க்காரே பிரசுரிக்க வேண்டும்.—இப்போது தனிப்பட்டவர்களின் நிர்வாகத்திலுள்ள ஆரம்பப் பள்ளிக் கூடங்களையும் சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும். இவை போன்ற எண்பது சிபார்சுகளை மேற்படி கமிட்டியார் செய்திருக்கிறார்கள். ஆரம்பக் கல்வி ஆசிரியர்களின் சம்பளம், கிராக்கிப் படி சம்பந்தமாகவும் அவர்கள் யோசனை கூறி யிருக்கிறார்கள்.

தேசத்தின் முன்னுள்ள மகத்தான ஆரம்பக் கல்விப் பிரச்னையை அக் கமிட்டியாரின் சிபார்சுகளின் மூலம் எவ்விதம் தீர்க்க முடியும் என்பது தான் தெரியவில்லை.

தற்போது அறுபது சத விகிதக் குழந்தைகள் பள்ளிக்கூடங்களுக்குப் போகாமலே இருக்கிறார்கள். அவர்கள் யாவரும் படிப்பதற்கு உடனடியான வழி என்ன என்பதே இன்றைய முக்கியப் பிரச்னையாக இருந்து வருகிறது. இந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்குக் கமிட்டி திட்டமான யோசனை எதுவும் கூறவில்லை.

முக்கியமான அம்சத்தை விட்டுச் சில்லறை விஷயங்களில் கவனம் செலுத்தி உருப்படாத யோசனைகளை ஆந்திரக் கமிட்டி சொல்லி யிருக்கிறது. அந்தச் சிபார்சுகளை ஆந்திர சர்க்கார் நடத்தி வைக்கப் போவதில்லை. பணமில்லை, வசதியில்லை என்ற காரணங்களைச் சொல்லிக் காலந் தள்ளிக் கொண்டு போகப் போகிறார்கள். இதற்கு முன் எத்தனையோ கல்விக் கமிட்டிகள் செய்த சிபார்சுகளின் கதியையே இந்தச் சிபார்சுகளும் அடையப் போகின்றன.

கல்வித் துறையில் ஈடுபட்டவர்களிடம் கல்விச் சீர்திருத்தத்துக்கு யோசனை கேட்டால் காரிய சாத்தியமற்ற உருப்படாத யோசனைகளைத் தான் சொல்லிக் கொண்டிருப்பார்கள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

# சிந்தித்துப் பார்ப்பார்களாக!

தனி ஒருவனுக்கு உணவு கிடைக்கவில்லை என்றால் உலகத்தையே நாசம் செய்து விடுவோம் என்று முழங்கினார் கவிச் சக்கரவர்த்தி பாரதியார். இன்று அவர் இருந்தால், பரீட்சை தேறவில்லை என்பதற்காக வருஷா வருஷம் மாணவர்கள் தற்கொலை செய்து கொள்ளும் விபரீதத்துக்குக் காரணமாக இருப்போருக்கு எத்தகைய கடுமையான தண்டனை விதிப்பாரோ! தனி ஒருவனை உணவின்றித் தவிக்க விடும் சமுதாய அமைப்பைக் காட்டிலும், பரீட்சையில் தேறவில்லை என்பதற்காக மனம் துடித்துச் சிறுவர்களான மாணவர்கள் உயிரையே மாய்த்துக் கொள்ளும்படி செய்யும் கல்வி முறை அதிகக் கொடுமையானது அல்லவா!

சேலத்தைச் சேர்ந்த ஆத்தூரில் நாலாவது பாரத்தில் படித்துக் கொண்டிருந்த மாணவன் மூன்றாம் வருஷமும் பரீட்சையில் தேறவில்லை என்பதற்காக இந்தப் பாழும் உலகிலிருந்து மறைந்து விட்டான்; பரீட்சையில் தேறாததற்காகத் தனக்குத் தானே தண்டனை விதித்துக் கொண்டு விட்டான்; ரயில் வண்டியின் முன் விழுந்து உயிரை மாய்த்துக் கொண்டான். உலக விவரம் அறியாத அந்தப் பாலகனின் அகால கோர மரணத்துக்கு யார் காரணம்! அவர்களுக்குத் தண்டனை ஒன்றும் கிடையாதா!

பரீட்சையில் தேறுவது என்பது பெரும்பாலும் லாட்டரியில் வெற்றி பெறுவது போலத்தான். எனவே, அதைக் கொண்டு மாணவனின் திறமையை அளவிட முடியாது. முப்பது வயதுக்கு உள்ளேயே உலகப் பிரசித்தி பெற்ற கணித மேதாவி ராமானுஜம் கல்லூரிப் பரீட்சையில் தோல்வி அடைந்தான். அமெரிக்காவிலே ஜனாதிபதி பதவி வகித்தவர்களில் பலர் பரீட்சையில் தேற முடியாமல் பள்ளிக்கூடப் படிப்புக்கு முழுக்குப் போட்டுவிட்டு வெளியே வந்தவர்கள் தான். உலக அரசியல் மேதாவிகளின் அணியில் முதல் ஸ்தானத்தை வகிப்பவரும் இலக்கியத்தில் நோபல் பரிசு பெற்றவருமான பிரிட்டிஷ் பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சில், மூன்றாவது பாரத்தில் மூன்று தடவை தோல்வி அடைந்தார். மற்றும் பல தடவை பரீட்சைகளில் தோல்வி அடைந்த சர்ச்சில், தமது வாழ்க்கையில் தாம் அடைந்த ஈடு இணையில்லா வெற்றிக்கு மேற்படி தோல்விகளே காரணமாக அமைந்தன என்று குறிப்பிட்டுள்ளார்! பரீட்சைகளில் தேறவில்லை என்பதற்காக அவர்கள் உயிரை மாய்த்துக் கொண்டிருந்தால், அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் எத்தகைய மகத்தான நஷ்டம் ஏற்பட்டிருக்கும்!

எனவே, பாழும் பரீட்சையில் தேறவில்லை என்பதற்காக மாணவர்கள் தற்கொலை செய்து கொள்வது, அவர்களுடைய குடும்பத்துக்கும், தேசத்துக்கும் பெரும் நஷ்டம் என்று கூறுவது மிகையாகாது. இத்தகைய நஷ்டத்துக்குக் காரணமான கல்வி முறையைக் காலதாமதமின்றி ஒழித்துக் கட்ட வேண்டியது அவசியம் அல்லவா என்பதை, இளைஞர் குலத்தின் க்ஷேமத்தில், நாட்டின் எதிர்கால முன்னேற்றத்தில் கருத்துக் கொண்ட யாவரும் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

# மனமாற்றம் நீடிக்குமா?

இப்போது புது டில்லியிலிருந்து அதிசயமான செய்தி கிடைத்திருக்கிறது. சென்ற வருஷம் மே—ஜூன் மாதங்களில் சிம்லாவிலே அகில இந்தியத் தலைமை ஆசிரியர்கள் மகாநாடு நடந்தது. இந்தியாவிலுள்ள சகல மாகாணங்களிலிருந்தும் மேற்படி மகாநாட்டுக்குத் தலைமை ஆசிரியர்கள் விஜயம் செய்திருந்தார்கள். அவர்கள் கல்வி முறையைச் சீர்திருத்துவதற்கான பல யோசனைகளை இந்திய சர்க்காரிடம் சமர்ப்பித்தார்களாம். எஸ். எஸ். எல். ஸி. பொதுப் பரீட்சையை ஒழித்து விட்டு, பள்ளிக்கூடத்திலே மாணவர்கள் வகுப்பிலும் சில்லறைப் பரீட்சைகளிலும் வாங்கும் 'மார்க்கு'களைக் கொண்டு அவர்களை மேல் வகுப்புக்கு மாற்ற வேண்டும் என்பது தலைமை ஆசிரியர்கள் கூறிய யோசனைகளில் ஒன்று என இந்திய சர்க்கார் கல்வி இலாக்கா வெளியிட்டுள்ள பிரசுரத்திலிருந்து தெரிகிறது.

எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையை ரத்து செய்து விடவேண்டும் என்று தலைமை ஆசிரியர்கள் சிபார்சு செய்திருப்பதை வரவேற்காதவர்கள் இருக்க முடியாது. மாணவர்களின் தற்கொலைக்குக் காரணமாக இருக்கும் பரீட்சைகளை ஒழிப்பதை விவேகமுள்ள யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆனால், மேற்படி பரீட்சை விஷயமாகத் தலைமை ஆசிரியர்கள் தங்கள் மனத்தை மாற்றிக் கொள்ளாமல் இருப்பார்களா என்று உறுதியாகச் சொல்வதற்கில்லை.

எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களுக்கு 'செலக்ஷன்' பரீட்சை கூடாது என்ற பலமான கிளர்ச்சி ஏற்பட்டது. அதற்கிணங்க சென்னை சர்க்கார் செலக்ஷன் பரீட்சையை ரத்து செய்தார்கள்.

அவ்விதம் ரத்து செய்ததால் எவ்வித ஆபத்தும் ஏற்பட்டு விடவில்லை. சிற்சில இடங்களில், எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்குச் செல்லத் தகுதியற்றவர்கள் என்று ஆசிரியர்கள் கருதிய மாணவர்கள் கூடப் பரீட்சையில் தேறினார்கள்! மேற்படி பரிசோதனையைச் சில வருஷங்களாவது ஆசிரியர்கள் அனுஷ்டித்துப் பார்த்திருக்கலாம். ஆனால் அதற்குள் அவர்களுக்கு அவசரம் தாங்கவில்லை. தலைமை ஆசிரியர்கள் கூட்டம் கூடி செலக்ஷன் பரீட்சை இருக்கத்தான் வேண்டும், இல்லாவிட்டால் குடி முழுகிப் போய்விடும் என்று கூக்குரலிட்டார்கள். எனவே, போன செலக்ஷன் பரீட்சை மறுபடியும் வந்து சேர்ந்தது.

செலக்ஷன் பரீட்சையை மறுபடியும் அமுலுக்குக் கொண்டு வருவதற்காக அவ்வளவு பாடுபட்ட தலைமை ஆசிரியர்கள் இப்போது எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சையே வேண்டாம் என்று கூறியிருப்பது ஆச்சரியம் அல்லவா!

இவ்விதம் தங்கள் மனசே தங்களுக்குத் தெரியாமல் காரியங்களைச் செய்யும் தலைமை ஆசிரியர்களின் சிபார்சுகளை நம்பி என்ன செய்ய முடியும்! அடிக்கடி மனம் மாறும் ஆசிரியர்களின் விசித்திரப் போக்கு, கல்வி சம்பந்தமான சீர்திருத்தங்களைப் பற்றிய பரிசீலனையைக் கல்வி இலாகா சம்பந்தமற்ற அறிஞர்களிடம் விடுவதே உசிதம் என்பதை வலியுறுத்துகிறது.

# திருவள்ளுவர் திருநாள்

கொழும்பு, மே மீ 21உ

இலங்கையின் தலைசிறந்த தமிழ்ப் புலவரும் தமிழ் மொழியையும் சைவத்தையும் இந்நாட்டில் வளர்க்க அரும் பெரும் பணியாற்றிய பேரறிஞருமான நாவாலியூர் சோமசுந்தரப் புலவருக்கு ஒரு ஞாபகச் சின்னம் எழுப்புவதற்காக இவ்வாரம் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரி மண்டபத்தில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீ வி வீரசிங்கம் கூட்டத்துக்குத் தலைமை வகித்துப் பேசுகையில் தமிழுக்கும் சைவத்துக்கும் புலவர் செய்த சேவைகளைப் பாராட்டுவதற்காக அவருக்கு ஒரு ஞாபகச் சின்னம் நிறுவுவது அவசியமென்பதை வலியுறுத்திவிட்டு ஏற்கெனவே ஒரு சைவ சித்தாந்தப் பாடசாலையை ஸ்தாபிப்பதற்கு நடந்த முயற்சி தோல்வியுற்றதையும் இம் முறையேனும் பொருத்தமான ஞாபகச் சின்னம் ஏற்படுத்தத் திட்ட வட்டமான நடவடிக்கை எடுக்கப்பட வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். கூட்டத்தில் பேசியவர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரியான ஞாபகச் சின்னங்களைக் கூறியபடியினால் அவற்றை ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வர ஒரு உப கமிட்டி நியமிக்கப் பட்டது.

*  *  *

இவ்வாரம் வைகாசி அனுஷத்தில் திருவள்ளுவர் திருநாள் தமிழ் மறைக் கழகத் தலைவர் பண்டிட் கா. பொ. இரத்தினம் அவர்களின் வேண்டுகோளுக் கிணங்க நாடெங்கும் பிரமாதமான உற்சாகத்துடன் கொண்டாடப்பட்டது. நாவலப்பிட்டி இந்து வாலிபர் சங்க ஆதரவில் தமிழ் மறைக் கழகத்தினர் திருவள்ளுவர் திருநாளை மூன்று நாள் தமிழ் விழாவாக நடத்தினார்கள். கொழும்பிலும் வட இலங்கையிலும் இவ்விழா விசேஷ அக்கறையோடு இவ்வருடம் கொண்டாடப்பட்டது. நீதி மந்திரியின் பார்லிமெண்டரிக் காரியதரிசியான ஸ்ரீ வி. குமாரசுவாமி நாவலப்பிட்டி விழாவைத் தொடங்கி வைத்துப் பேசியபொழுது, இலங்கையின் இரு பிரதான மொழிகளில் ஒன்றான தமிழ் மொழியைப் புறக்கணிக்கச் சதிகள் நடப்பதைக் குறிப்பிட்டு இந்தச் சதிகாரர்கள் படுதோல்வியடைவது நிச்சயமென்று எச்சரித்தார்.

*  *  *

சோறுமுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை என்று தமிழில் ஒரு பழமொழியுண்டு. அதைப்போலிருக்கிறது இலங்கை அரசாங்கத்தின் போக்கு. ஏதோ ஒரு வெறியில் சுமார் ஆறு லட்சம் இந்தியர்களை அடுத்த நான்கு ஆண்டுகளுக்குள் ஒழித்துக் கட்டிவிட முதலில் திட்டமிட்டார்கள். பிறகுதான் நாட்டின் பொருளாதாரம் சீர்குலைந்து சோற்றுக்குத் தாளம் போட வேண்டிய கதியேற்படுமே யென்ற ஞானோதயம் ஏற்பட்டது போலிருக்கிறது. தேசப் பொருளாதாரத்துக்கு முதுகெலும்பைப் போலிருக்கும் தோட்டத் தொழிலாளர்களை மட்டும் வைத்துக் கொண்டு மற்ற இந்தியர்களை முதலில் வெளியேற்றப் பார்ப்பதென்றும் தோட்ட வேலைகளுக்குச் சிங்களவர்களைப் பயிற்சி செய்த பின் இந்தியத் தொழிலாளர்களை நாடு கடத்துவதென்றும் இப்பொழுது முடிவு செய்திருக்கிறார்களாம்.

இதைக் கவனிக்கையில் இந்தியாவைக் "கூலியாட்களை விநியோகம் செய்யும் டிப்போவாகவே" இலங்கை இன்னும் மதித்து வருகிறதென்பதும் இந்தியர்களுக்கு இந் நாட்டில் எவ்வித உரிமையிருப்பதாகவும் அரசாங்கம் அங்கீகரிக்கத் தயாரில்லையென்பதும் வெளியாகிறது. இந்த நிலைமையில் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் கருதுவது போல, உரிமைபெறப் போராட்டம்நடத்துவதைத் தவிர வேறு வழி யிருப்பதாகத் தெரியவில்லை. ஒரு பிரம்மாண்டமான போராட்டம் நடத்தப் பத்து லட்ச ரூபாய் நிதி திரட்டுவதென்று காங்கிரஸ் தீர்மானித்து அதற்காக ஒரு கமிட்டியையும் நியமித்திருக்கிறது.

*  *  *

வட இலங்கையில் கீரிமலை க்ஷேத்திரத்தில் இவ்வாரம் அகில இலங்கை சைவ இளைஞர்கள் மகாநாடு ஒன்று நடைபெற்றது. அதில் தபால் மந்திரி ஸ்ரீ எஸ். நடேசன் பேசியபொழுது பக்திப் பண்பின் சிறப்பை எடுத்துரைத்து ஆசை இருளை நீக்கச் சைவமே சிறந்த வழி யென்றார்.

வட இலங்கையில் மன்னார்ப் பகுதியிலிருப்பவர்களுக்கு மீன் பிடித் தொழிலே ஜீவாதாரமான தொழில். நூற்றுக்கணக்கான இந்தியச் செம்படவர்களை வருடந்தோறும் அழைத்து, மீன் பிடிக்கச் செய்து இலங்கை முழுவதும் மீன்களை அனுப்பி ஜீவனம் நடத்தும் குடும்பங்கள் பல. இந்தியர்கள் மீது கொண்ட துவேஷத்தினால் இலங்கை அரசாங்கம் இந்தியச் செம்படவர்களின் வருகையைத் தடுத்துப் பல குடும்பங்களின் வயிற்றில் அடித்து விட்டது. இவ்வாரம் உதவி மீன் பிடி மந்திரி இப் பகுதிக்கு விஜயம் செய்தபொழுது மீன் பிடித் தொழிலாளர்கள் அவரிடம் முறையிட்டுக் கொண்டதின் பேரில் அவர் மந்திரி ஆர். ஜி. சேனநாயகாவிடம் தெரிவித்து ஆவன செய்வதாகக் கூறினார்.

இந்திய ஹை கமிஷனர் ஸ்ரீ வி. வி. தேசாய் யாழ்ப்பாணக் குடா நாட்டில் நான்கு தினங்கள் வரையில் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டு நேற்று கொழும்புக்குத் திரும்பி யிருக்கிறார். சாவகச்சேரியில் பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீ வி. குமாரஸ்வாமி அளித்த வரவேற்பில் ஸ்ரீ தேசாய் பேசிய பொழுது, சில தினங்களுக்கு முன்னர் பாரதப் பிரதமர் நேருவுக்கும் இலங்கைப் பிரதமர் ஸர் ஜான் கொத்தலாவலைக்கும் இலங்கை இந்தியர் நிலைமையைப் பற்றி நடந்த அந்தரங்கப் பேச்சுகளின் சில விவரங்களை வெளியிட்டார்.

இலங்கையைச் செல்வம் கொழிக்கும் நாடாக்கிய இந்தியத் தோட்டத் தொழிலாளருக்கு ஒரு ஞாபகார்த்தச் சிலையை எழுப்பும் நாள் வெகு சீக்கிரத்தில் வருமென்று ஸர் ஜான் கொத்தலாவலையிடம் நேருஜி உருக்கமாகச் சொன்னாராம்.

"இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பாரத நாடு இலங்கைக்குப் புத்த மதத்தை அளித்தது. அசோகச் சக்கரவர்த்தி தமது மைந்தனையே இலங்கைக்கு அனுப்பிப் பௌத்த மதத்தை இங்கு பரப்பினார். இதில் இந்தியா பெருமையடைகிறது. இதே போல சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்னால் தொழிலாளர்களை இலங்கைக்கு அனுப்பிக் காடுகளை வெட்டிப் பொன் கொழிக்கும் பூமியாக இலங்கையை மாற்றியதிலும் நாம் பெருமை கொள்கிறோம்" என்று தேசாய் கூறினார்.—ரஜனி.

# பெரம்பூரில் கான மழை!

சென்னை நகரில் கோகலே மண்டபத்தில் சங்கீதக் கச்சேரி என்றால், அதற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. சங்கீத ரஸிகர்கள் ஆர்வத்துடனே கச்சேரி கேட்டுக் கரகோஷ ஆரவாரங்கள் செய்து சங்கீத வித்வான்களை உற்சாகப் படுத்துவார்கள். கச்சேரிகளும் அதற்குத் தக்கபடி நன்றாக அமையும். கோகலே மண்டபத்தின் இந்தச் சிறப்பை இனிப் பெரம்பூர் சங்கீத ரஸிகர்கள் கவர்ந்து கொண்டு விடுவார்கள் என்று தோன்றுகிறது.

கடுங்கோடை காலத்தில் அனல்காற்று அடித்து வாட்டும் நாட்களில் பெரம்பூர் சங்கீத சபையார் ஸ்ரீ தியாகப் பிரம்ம உற்சவம் ஆரம்பித்து நடத்தி வருகிறார்கள். (ஒரு சிறிய பள்ளிக்கூடக் கட்டடத்தில் உற்சவக் கச்சேரிகளை நடத்த வேண்டி இருப்பதால் பள்ளிக்கூட விடுமுறை நாட்களிலேயே நடத்தவேண்டி வருகிறது. மற்றக் காலத்தில் இந்த இடமும் கிடைப்பதில்லை.) ஆனாலும் வேனிற் காலத்து வெப்பத்தையோ இட வசதிக் குறைவையோ சிறிதும் பொருட்படுத்தாமல் சங்கீத ரஸிகர்கள் திரளாக வந்து கேட்கிறார்கள். வித்வான்களும் உற்சாகமாகக் கச்சேரி செய்கிறார்கள். உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது.

சென்னைப் பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்கள் பெரம்பூர் சங்கீத சபையின் ஆதரவில் நடக்கும் ஸ்ரீ தியாகப் பிரம்ம உற்சவத்தை மே மீ 14உ ஆரம்பித்து வைத்தார்.

16உ மகாராஜா சுவாதித் திருநாள் அவர்களின் உருவப் படத்தைப் பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் திறந்து வைத்துப் பொருள் பொதிந்த உபன்யாசம் செய்தார்.

முதல் நாள் 14உ மாலை சங்கீத கலாநிதி காரைக்குடி சாம்பசிவ ஐயர் அவர்கள் தமது தமையனாரின் பேத்தியான குமாரி ராஜேஸ்வரியுடன் அற்புதமான வீணைக் கச்சேரி செய்து உற்சவக் கச்சேரிகளைத் தொடங்கினார். அன்று இரவு ஸ்ரீ அண்ணாசாமி பாகவதர் அவர்களின் காலக்ஷேபம் நடைபெற்றது.

மறுநாள் 15உ முதல் 21உ சனிக்கிழமை வரையில் முறையே ஸ்ரீமதி எம். எல். வஸந்தகுமாரி, ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள், ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர், ஸ்ரீ செம்மங்குடி சீனிவாச ஐயர், ஸ்ரீ மகாராஜபுரம் விஸ்வநாத ஐயர், ஸ்ரீ அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார், ஸ்ரீ மதுரை மணி ஐயர், ஆகியவர்களின் கச்சேரிகள் நடைபெற்றன. ஒவ்வொரு வித்வானும் அவர்களுடைய பாணியில் அமோகமாகக் கச்சேரி செய்தார்கள்.

மேலும் தொடர்ந்து பல கச்சேரிகள் நடைபெற்று வருகின்றன.

சென்னையில் வேறு எந்தச் சங்கீத விழாவிலும் இல்லாதபடி பதினாறு தினங்களுக்கும் பெரம்பூர் சங்கீத சபையார் தொடர்ந்து கச்சேரிகளை ஏற்பாடு செய்து நடத்தி வருகிறார்கள்.

சங்கீத வித்வான்கள், பக்க வாத்திய வித்வான்கள் அனைவருடைய ஒத்துழைப்பும் அவர்களுக்குப் பரிபூரணமாகக் கிடைத்திருக்கிறது.

"பெரம்பூர் ரஸிகர்கள் ரொம்ப நன்றாகக் கச்சேரி கேட்கிறார்கள்!" என்று வித்வான்கள் சொல்லிப் பூரிப்பு அடைகிறார்கள்.

சில ஆண்டுகளுக்கு முன்பு காரைக்குடி மகா வித்வான் சாம்பசிவ ஐயர் அவர்கள் பெரம்பூரில் வந்து தங்கினார். அவரிடம் பக்தி கொண்ட சில சங்கீத அன்பர்கள் பெரம்பூர் சங்கீத சபையைத் தொடங்கி நடத்தி வருகிறார்கள். ஸ்ரீ சாம்பசிவ ஐயர் அவர்களின் ஆசி பலத்தினால்தான் பெரம்பூர் சங்கீத சபையார் எவ்வளவோ பிரதிகூலமான நிலைமையில் இவ்வளவு சிறப்பாகச் சங்கீத உற்சவம் நடத்தி வருகிறார்கள் என்று கருதலாம்.

29உ ஸ்ரீ ராஜரத்தினம் பிள்ளை அவர்களின் நாதஸ்வரக் கச்சேரியுடன் கூடிய ஊர்வலத்துடன் உற்சவம் பூர்த்தியாகிறது.

நல்ல முறையில் நடைபெற்று வரும் பெரம்பூர் சங்கீத சபைக்கு மேலும் ஊக்கம் அளிக்கவும், சொந்த இடம் முதலிய வசதிகள் ஏற்படுத்திக் கொடுக்கவும் சென்னை சங்கீத ரஸிகர்கள் முன் வருவார்கள் என்று நம்புகிறோம்.















# பொன்னியின் செல்வன்

கல்கி

## முடிவுரை

நேயர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மூன்றரை ஆண்டு காலம் "பொன்னியின் செல்வன்" கதையைத் தொடர்ந்து படித்து வந்ததில் நேயர்கள் காட்டிய பொறுமையையும் ஆர்வத்தையும் அன்பையும் போற்றி வணங்குகிறேன். கதை ஆரம்பித்துச் சில மாதங்கள் வரையில் நேயர்களிடையே இது இவ்வளவு ஆர்வத்தை உண்டாக்குமென்று தோன்றவில்லை. பழந் தமிழ் நாட்டுச் சரித்திரப் பெயர்கள் சிலருக்குப் பெரிதும் தலைவேதனை உண்டாக்கி வந்ததாகத் தெரிந்தது. போகப் போக, அந்தத் தலைவேதனையை நேயர்கள் எப்படியோ போக்கிக் கொண்டார்கள். இதற்கு முன்னால் எந்தத் தொடர் கதையையும் நேயர்கள் இவ்வளவு ஆர்வத்துடன் படித்ததில்லை யென்று சொல்லும் நிலைமை வெகு விரைவில் ஏற்பட்டது. அதே ஆர்வம் தொடர்ந்து நிலைபெற்று இருந்து வந்தது.

கதை ஆரம்பித்த மறு வருடம் ஆடிப் பதினெட்டாம் பெருக்கு தினத்தில் பரமக்குடியிலிருந்து பல நண்பர்கள் கையெழுத்திட்டுப் "பொன்னியின் செல்வன்" கதைக்குத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். "பொன்னியின் செல்வன்" முதல் அத்தியாயம் பதினெட்டாம் பெருக்குத் திருவிழா வன்று வீர நாராயண ஏரிக் கரையில் தொடங்குகிறது அல்லவா?

பின்னர் அடிக்கடி பல நேயர்கள் கடிதம் எழுதித் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்தப் பாராட்டுதல்களை யெல்லாம் கதையின் ஆசிரியருக் குரியவையாக நான் கருதவில்லை. பழந் தமிழ் நாட்டின் சரித்திரத்துக் குரிய பெருமையாகவே கருதினேன். உண்மையிலேயே, தமிழ் நாட்டின் பழைய வரலாறு தமிழர்கள் மிகவும் பெருமிதம் கொள்ளக் கூடிய வரலாறுதான். சென்ற சில ஆண்டுகளாகத்தான் தமிழகத்தின் பழைய சரித்திர ஆராய்ச்சி முறையாக நடைபெற்று வருகிறது. கல் வெட்டுக்களும் செப்புப் பட்டயங்களும் படிக்கப்பட்டு வருகின்றன. வரலாற்று ஆராய்ச்சியாளர் அந்த ஆதாரங்களை வைத்துத் தமிழகத்தின் சரித்திரத்தை அங்கங்கே பகுதி பகுதியாக நிர்மாணித்து வருகிறார்கள்.

சரித்திரத்தின் எந்த ஒரு காலப் பகுதியைப் பற்றியும் பரிபூரணமாகவும் ஐயந்திரிபுக்கு இடமின்றியும் வரலாறு எழுதப்பட்டுவிட்டதாகச் சொல்வதற்கில்லை.

ஆயிரத்து நானூறு வருடங்களுக்கு முன்னால் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு நீடித்து அரசு புரிந்த பல்லவ சக்கரவர்த்திகளின் வரலாறு ஓரளவு ஆராயப்பட்டிருக்கிறது. அந்த இரு நூறு ஆண்டுகளைப் பற்றிய சரித்திர வரலாற்று விவரங்கள் நன்கு தெரிய வந்திருக்கின்றன.

பின்னர், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் தொடங்கி முந்நூறு ஆண்டு புகழுடன் விளங்கிய விஜயாலய சோழ பரம்பரையின் காலத்து நிகழ்ச்சிகளும் ஓரளவு ஆராயப்பட்டிருக்கின்றன. இக்காலத்து நிகழ்ச்சிகளைப் பற்றித் திட்டமாக நிர்ணயிக்க முடியாதபடி பல ஐயப்பாடுகள் தோன்ற இடமிருக்கிறது. ஆயினும், சில சரித்திரச் சம்பவங்கள் மறுக்க முடியாத தகுந்த ஆதாரங்களுடன் நிர்ணயிக்கப் பட்டிருக்கின்றன.

இவற்றுள் எல்லாம் மிக முக்கியமானது, தமிழகத்துக்கு இணையற்ற பெருமையை அளிக்கக் கூடியது, உலக சரித்திரத்திலேயே ஒப்பற்ற சம்பவம் என்று கொண்டாடுவதற்குத் தகுதியானது ஒன்று உண்டு. சுந்தர சோழ மன்னரின் இரண்டாவது திருக்குமாரராகிய அருள்மொழி வர்மன், (பிற்காலத்தில்

இராஜ ராஜ சோழன் என்று புகழ் பெற்ற பேரரசன்,) இளம் பிராயத்தில் தான் எளிதில் பெற்றிருக்கக் கூடிய சோழ சாம்ராஜ்யத்தை வேண்டாம் என்று மறுத்து, உத்தம சோழனுக்குப் பட்டம் கட்டி வைத்ததுதான்.

"சுந்தர சோழனுக்குப் பின்னர் அவனுடைய மகன் அருள்மொழி வர்மனே சோழ சிங்காதனம் ஏறி அரசாள வேண்டும் என்று சோழ நாட்டு மக்கள் பெரிதும் விரும்பினார்கள். ஆயினும் அருள்மொழி வர்மன் தன் பெரிய பாட்டனாகிய கண்டராதித்தனுடைய புதல்வனும் தனக்குச் சிறிய தகப்பன் முறையிலிருந்தவனுமான உத்தம சோழனுடைய உரிமையை மதித்து அவனுக்கு முடிசூட்டி வைத்தான்" என்று திருவாலங்காட்டுச் செப்பேடுகள் அறுதியிட்டு உறுதி கூறுகின்றன!

இந்த நிகழ்ச்சியை மற்றும் பல செப்பேடுகளும் கல்வெட்டுக்களும் அந்தக் காலத்தில் அறிஞர்கள் பலரால் எழுதப்பட்ட நூல்களும் உறுதிப்படுத்துகின்றன.

அருள்மொழி வர்மன் திரு முடி சூட்டிக் கொள்ள வேண்டுமென்று இராஜ்யத்தின் மக்கள் விரும்பினார்கள்; உற்றார் உறவினர் விரும்பினார்கள்; அக்காலத்தில் மிக்க வலிமை பெற்றிருந்த சோழப் பெரும் படையின் வீரர்கள் அனைவரும் விரும்பினார்கள்.

அவ்வாறு எல்லாவித ஆதரவும் அநுகூலங்களும் அருள்மொழி வர்மனுக்கு இருந்தும், அவன் சாம்ராஜ்யத்தை உத்தம சோழனுக்கு அளித்துப் பட்டம் கட்டுவித்தான்.

உலக சரித்திரத்திலும் காவிய இதிகாசங்களிலும் இதற்கு ஒப்பான இன்னொரு அரும் பெரும் செயலைக் காணுதல் அரிது.

அசோக சக்கரவர்த்தி கலிங்க நாட்டுப் போரில் மகத்தான வெற்றி அடைந்த பிறகு, "இனி யுத்தமே வேண்டாம்" என்று முடிவு செய்ததைத் தான் அருள்மொழி வர்மனின் தியாகத்துக்கு இணையாகக் கூறலாம்.

"பொன்னியின் செல்வன்" கதையில் சிகரமான சம்பவம் அருள்மொழி வர்மனின் ஒப்பற்ற தியாகமே யாகும். கதையில் வரும் சகல நிகழ்ச்சிகளும் இந்த மகத்தான சம்பவத்தை நோக்கியே சென்று கொண்டிருக்கின்றன. அதனாலேயே இக்கதையின் ஐந்தாவது பகுதிக்குத் "தியாக சிகரம்" என்று பெயர் தரப்பட்டது.

இக்கதையின் சிகரமான நிகழ்ச்சி பொன்னியின் செல்வன் செய்த சாம்ராஜ்ய தியாகந்தான் என்பதைக் கதையைப் படித்து வந்த நேயர்கள் அனைவரும் உணர்ந்திருப்பார்கள் என்றே நம்புகிறேன். யாராவது அதை அறியவில்லை யென்றால், அதற்குக் காரணம் ஆசிரியருடைய ஆற்றல் குறைவு என்றே சொல்ல வேண்டும். அந்தக் குறையைக் கதை ஆசிரியர் தாழ்மையுடன் ஒப்புக் கொண்டு நேயர்களிடம் மன்னிப்புக் கோர வேண்டியதுதான்.

* * *

"பொன்னியின் செல்வன் கதை வெளியாகி வந்த போதெல்லாம் நேயர்கள் ஒப்பற்ற ஆர்வம் காட்டி வந்தார்கள். பலர் பாராட்டிக் கடிதங்கள் எழுதி உற்சாகப் படுத்தியும் வந்தார்கள். நேயர்களிடமிருந்து வந்த கடிதங்களில் அப்போதெல்லாம் கருத்து வேற்றுமையே காணப்படவில்லை.

கதை முடிவடைந்த பிறகும் நூற்றுக் கணக்கான கடிதங்கள் வந்திருக்கின்றன. இக் கடிதங்களில் பெரிதும் கருத்து வேற்றுமை காணப் படுகிறது. பாதிப் பேர் கதையைப் பாராட்டிக் கதையின் முடிவையும் பாராட்டி யிருக்கிறார்கள். இன்னும் பாதிப் பேர் கதை முடிந்த விதத்தைக் குறை கூறி யிருக்கிறார்கள். சட்டென்று முடித்து விட்டதற்காகவும் பல கதாபாத்திரங்கள் பின்னால் என்ன ஆனார்கள் என்று சொல்லாமலே கதையை முடித்து விட்டதற்காகவும் வருந்தியிருக்கிறார்கள். காரசாரமாகக் கண்டனங்கள் எழுதியிருப்பவர்களும் உண்டு.


சுந்தர சோழர்


செம்பியன் மாதேவி


பெரிய பழுவேட்டரையர்


அநிருத்தப் பிரம்மராயர்


சின்னப் பழுவேட்டரையர்


ஆழ்வார்க்கடியான்

கண்டனமாகவும் குறை சொல்லியும் எழுதி யிருப்பவர்கள் அனைவரும் கதையை இன்னும் வளர்த்தி எழுதி யிருக்கலாம் என்றே அபிப்பிராயம் தெரிவித்திருப்பதை எண்ணி ஒருவாறு திருப்தி அடைகிறேன். மூன்றரை ஆண்டு தொடர்ந்து வெளியாகி வந்த கதையைக் குறித்து அலுப்பு அடைந்து "எப்போது முடிக்கப் போகிறீர்?" என்று கேளாமல், "ஏன் இப்படித் திடுதிப்பென்று முடித்து விட்டீர்? ஏன் மேலும் வளர்த்தி எழுதியிருக்கக் கூடாது?" என்று நேயர்கள் கேட்பது ஒருவாறு மகிழ்ச்சி அடைவதற்குரிய நிலைமைதான். ஆயினும் நேயர்களில் ஒரு பெரும் பகுதியினரைத் திருப்தி செய்ய முடியாமற் போனது பற்றி வருந்துகிறேன்.

"பொன்னியின் செல்வன்" கதையை இப்போது முடித்திருப்பது போல் முடித்ததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு.

(1) முன்னமே குறிப்பிட்டது போல், கதையில் சிகரமான நிகழ்ச்சி பொன்னியின் செல்வன் தன் கையில் கிடைத்த மகா சாம்ராஜ்யத்தைத் தியாகம் செய்து இன்னொருவருக்கு முடி சூட்டியதே யாகும்.

ஆகையால், அந்தப் பெரு நிகழ்ச்சிக்குப் பிறகு கதையை வளர்த்திக் கொண்டு போவது ஆங்கிலத்தில் சொல்லப் படுவது போல், 'கிளைமாக்ஸு'க்குப் பிறகு 'ஆண்டி கிளைமாக்ஸு'க்குப் போவதாக முடியும்.

நேயர்கள் பலர் இப்போது சீக்கிரம் முடித்து விட்டதற்காகக் குறை சொன்னாலும், இந்தக் கதை மேலும் வளர்ந்தால் விரைவில் அதே நேயர்கள் வேறு விதமாகக் குறைப்பட நேரிடும். "எப்போது முடிக்கப் போகிறீர்?" என்று ஆசிரியரை நேயர்கள் கேட்கும் நிலைமை விரைவில் வந்து விடும்.

(2) பொதுவாக 'நாவல்கள்' எழுதுவதற்கும், முக்கியமாகச் 'சரித்திர நவீனங்கள்' எழுதுவதற்கும் சட்ட திட்டங்கள் ஏற்பட்டிருக்கவில்லை. (அப்படி ஏற்பட்டிருந்தால் அவற்றை நான் படித்ததில்லை.) ஆசிரியர்கள் ஒவ்வொருவரும் தமக்குரிய முறையை வகுத்துக்கொண்டு எழுதுகிறார்கள்.

ஆயினும், முழுதும் கற்பனையாக எழுதப் படும் சமூக வாழ்க்கை நவீனங்களுக்கும், சரித்திர சம்பவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதும் நவீனங்களுக்கும் ஒரு வேற்றுமை அவசியம் இருந்து தீருகிறது.

முற்றிலும் கற்பனை செய்யப்பட்ட கதைகளில் வரும் பாத்திரங்களில் எல்லாருக்கும் கதை ஆசிரியர் சுலபமாக முடிவு சொல்லி விடலாம். கதாநாயகனும் கதாநாயகியும் கலியாணம் செய்து கொண்ட பிறகோ, அல்லது கதாநாயகன் தூக்கு மேடை ஏறியும் கதாநாயகி கடலில் விழுந்தும் இறந்த பின்னரோ, கதையில் வரும் மற்றப் பாத்திரங்களை ஒரு பாராவில் சரிப்படுத்தி விடலாம். கலியாணம் செய்து கொண்ட தம்பதிகள் பிள்ளை குட்டி பேரர்களைப் பெற்று நெடுங் காலம் சுகமாக வாழ்ந்தார்கள் என்றும், மற்றக் கதா பாத்திரங்களில் நல்லவர்கள் எல்லாரும் சுகமடைந்தார்கள் என்றும், கெட்டவர்கள் எல்லாரும் பல கஷ்டங்கள் பட்டுச் செத்தொழிந்தார்கள் அல்லது தக்க தண்டனை அடைந்தார்கள் என்றும் கூறிக் கதையைத் திருப்திகரமாக முடிக்கலாம்.

சரித்திரக் கதைகளை இந்த விதத்தில் முடிப்பது அவ்வளவு எளிய காரியமும் அன்று; உசிதமும் ஆகாது.

சரித்திரக் கதைகளில் வரும் பாத்திரங்களில் இறந்து போனவர்களைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் பிற்காலத்திலும் பற்பல காரியங்களில் ஈடுபடுவார்கள்: வெற்றியோ தோல்வியோ சுகமோ துக்கமோ அடைவார்கள். அவற்றைக் குறித்து முன்னதாகவே சொல்லி விடுவது முறையாகுமா? அல்லது ஆதாரங்களுடன் கூடிய விவரங்கள் இல்லாமல் முடிவான நிகழ்ச்சிகளைப் பற்றி மட்டும் சொல்லுவதுதான் உசிதமாகுமா?

கதையை எந்தக் காலத்தில் முடிக்கிறோமோ, அந்தக் காலத்தில் பாத்திரங்கள் இருந்த நிலைமையிலேயே விட்டு விடுவது தான் முறையென்று கருதினேன். ஆனால் இது பல நேயர்களுக்குத் திருப்தி அளிக்கவில்லை யென்பதைக் காண்கிறேன். ஓரளவேனும் அவர்களைத் திருப்தி செய்விக்க வேண்டியது அவசியம் என்று உணருகிறேன்.

பல நேயர்கள் அறிந்து கொள்ள விரும்பும் விவரங்களைக் கேள்விகளின் ரூபத்தில் இதோ கோவைப் படுத்தித் தந்திருக்கிறேன் :—

1. வந்தியத் தேவர் இளவரசி குந்தவைப் பிராட்டியை மணந்தாரா ?

2. கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையர் என்ன ஆனார் ?

3. வீர வைஷ்ணவனான ஆழ்வார்க்கடியான் என்ன செய்தான் ?

4. பொன்னியின் செல்வரின் பிரயாணம் என்ன ஆயிற்று ?

5. பழைய மதுராந்தகரும் சின்னப் பழுவேட்டரையரின் மகளும் என்ன ஆனார்கள் ?

6. நந்தினியினால் முடிசூட்டப்பட்ட இளம் பாண்டியனைப் பற்றிய விவரம் என்ன ?

7. நந்தினியின் கதி என்ன ?

8. வானதி விஷயமாகக் குடந்தை சோதிடர் கூறியவை பலித்தனவா ?

9. ஆபத்துதவிகள் என்ன செய்தார்கள் ?

மேற்கூறிய கேள்விகள் பலவற்றுக்குப் பதில் தமிழ்நாட்டுச் சரித்திரம் படித்தவர்கள் தாங்களே அறிந்து கொள்வார்கள். ஆயினும் அனைவருக்கும் திருப்தி அளிக்கும் பொருட்டு மேற்கண்ட கேள்விகள் எல்லாவற்றுக்கும் பதில் தந்து விடுகிறேன்.

1. மேலும் பல இடையூறுகளைத் தாண்டிய பிறகு குந்தவையும் வந்தியத் தேவனும் மணம் செய்து கொள்கிறார்கள். இருவரும் சோழ சாம்ராஜ்யத்தில் மிக மதிக்கப்படுகிறார்கள். தஞ்சைப் பெரிய கோவிலில் உள்ள கல்வெட்டு ஒன்றில், "இராஜ ராஜ தேவரின் திருத் தமக்கையார், வல்லவரையர் வந்தியத் தேவரின் மகாதேவியார், ஆழ்வார் பராந்தகர் குந்தவையார்" என்று பொறிக்கப் பட்டு விளங்குகிறது.

2. இரும்பு மனிதராகிய சின்னப் பழுவேட்டரையர் உயிர் பிழைத்துப் பல கஷ்டங்களை அநுபவித்த பிறகு ஊருக்குத் திரும்பி வருகிறார். சோழ சாம்ராஜ்யத்துக்குப் பல அரிய சேவைகள் புரிகிறார்.

3. வீர வைஷ்ணவன் ஆழ்வார்க்கடியான் தனது ஒற்றறியும் வேலையை மேலும் நடத்திக் கொண்டிருக்கிறான். நந்தினியும் பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளும் செய்யும் சதித் திட்டங்களை அறிந்து வந்து சொல்கிறான்.

4. பொன்னியின் செல்வர் வந்தியத் தேவனுடன் பெரிய கடற் படை தயாரித்துக் கொண்டு கடற் கொள்ளைக் காரர்களை அடக்கிச் சோழ சாம்ராஜ்யத்தைக் கடல்களுக்கு அப்பால் உள்ள நாடுகளில் நிலைநாட்டுகிறார்.

உத்தம சோழருக்குப் பட்டம் கட்டிப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு அவர் இறந்ததும், பொன்னியின் செல்வர் சிங்காதனம் ஏறுகிறார். 'இராஜ ராஜ சோழன்' என்ற பட்டத்துடன் நீண்ட காலம் சோழ சாம்ராஜ்யத்தை ஆளுகிறார்.

5. பழைய மதுராந்தகன் ஆபத்துதவிகளின் தூண்டுதலாலும் ஈழ மன்னன், சேர மன்னன் உதவி கொண்டும் பாண்டிய நாட்டைக் கவர்ந்து முடி சூடிக் கொள்ள முயல்கிறான். அவனுடைய முயற்சி பெரிதும் பலம் பெறுகிறது. இராஜ ராஜ சோழர் பட்டத்துக்கு வந்த பிறகு அமரபுஜங்கன் நெடுஞ்செழியனைப் போரில் வெல்கிறார். அவன் வீர சொர்க்கம் எய்துகிறான்.

6. திருப்புறம்பயம் காட்டில் முடிசூட்டப் பட்ட இளம் பாண்டியனும் பாண்டிய ராஜ்



அருள்மொழிவர்மன்



வந்தியத்தேவன்



குந்தவைப் பிராட்டி



ஆதித்த கரிகாலன்



நந்தினி



மதுராந்தகத் தேவன்

யத்துக்கு உரிமை கொண்டாடுகிறான். அவன் போர்க்களத்திலிருந்து தப்பிச் சென்று மறுபடியும் நாட்டைப் பெறச் சதி செய்கிறான். இவன் பிற்காலத்தில் இராஜேந்திர சோழனால் போரில் முறியடிக்கப்படுகிறான்.

7. நந்தினி அமரபுஜங்கன் இறந்த பிறகு தானும் உயிர் துறக்கிறாள். அதற்கு முன்னால் அவளை இராஜ ராஜ சோழர் சந்திக்கிறார். அவரிடம் தன் பிறப்பைக் குறித்த உண்மையையும் கரிகாலனின் மரணத்தைப் பற்றிய உண்மையையும் கூறிவிட்டு இறக்கிறாள்.

8. குடந்தை சோதிடரின் கூற்றுக்கள் வானதியின் விஷயத்தில் பலிக்கின்றன. (சோதிடர் சாஸ்திரம் பார்த்துச் சொன்னாரா, ஊகத்தினால் சொன்னாரா, நாம் அறியோம்.) வானதிக்குப் பிறக்கும் குழந்தையான இராஜேந்திரன் 'கங்கையும் கடாரமும் கொண்ட சோழன்' என்று பிற்காலத்தில் சரித்திரத்தில் புகழ் பெறுகிறான்.

ஆனால் வானதி தன் சபதத்தை நிறைவேற்றி விட்டு உயிர் துறக்கிறாள். இராஜ இராஜனுடன் சோழ சிங்காதனம் ஏறுகிறவள் 'உலக மகாதேவி' என்னும் திருநாமம் கொண்ட இன்னொரு ராணியாவாள்.

9. ஆபத்துதவிகள் பாண்டிய ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் முயற்சிகளில் மேலும் ஈடுபட்டு வருகிறார்கள். நந்தினி உயிரோடு இருந்த வரையில் ஆதித்த கரிகாலனுடைய அகால மரண இரகசியத்தைப் பற்றி விசாரிக்கப் படவில்லை. அதில் நந்தினியின் பெயரும் வரும் என்ற காரணத்தினால் தான். நந்தினியின் மரணத்துக்குப் பிறகு, இராஜ ராஜ சோழன் ரவிதாஸன் முதலிய ஆபத்துதவிகளைக் கைப்பற்றித் தண்டனை விதித்து அவர்களுடைய சொத்துக்களைப் பறிமுதல் செய்யவும் கட்டளை பிறப்பிக்கிறான்.

நேயர்கள் அவ்வளவாகக் கவனிக்கப்படாத இன்னும் சில கதா பாத்திரங்களைப் பற்றிய விவரங்களையும் கூறி விடுகிறேன்.

சுந்தர சோழர் காஞ்சி பொன் மாளிகையில் மூன்று ஆண்டு காலம் வசித்து விட்டு அங்கேயே உயிர் துறந்து 'பொன் மாளிகைத் துஞ்சிய தேவர்' என்று பெயர் பெறுகிறார். அவருடைய அருமை மனைவி வானமாதேவி, — மலையமானுடைய மகள், — அவருடன் உடன்கட்டை ஏறிச் சொர்க்கம் அடைகிறாள்.

பார்த்திபேந்திரன் குந்தவை தன்னை நிராகரித்து விட்ட கோபத்தினால் காஞ்சியில் சுதந்திர பல்லவ ராஜ்யத்தை நிலைநிறுத்தப் பார்க்கிறான். அதில் தோல்வி யடைந்து சந்ததி யில்லாமல் மாண்டு போகிறான்.

கந்தமாறன் பாலாற்றின் வட மேற்கில் புதிய மாளிகை கட்டிக் கொண்டு சோழ சாம்ராஜ்யத்துக்குத் தொண்டு செய்து வாழ்கிறான். அவனுக்குப் பின்னால் சம்புவரையர் குலம் மிகப் பிரசித்தி அடைகிறது.

நேயர்களைத் திருப்திப் படுத்துவதற்காகவே மேலே கண்டவற்றை எழுதினேன். உண்மையில், இவை யெல்லாம் இன்னும் ஒரு பெரிய சரித்திரக் கதைக்கு ஆதாரமாகக் கூடிய முக்கிய நிகழ்ச்சிகளாகும்.

உத்தம சோழருக்குப் பின்னால் சிங்காதனம் ஏறிய இராஜராஜன், இராஜேந்திரன், இராஜாதி ராஜன், வீர இராஜேந்திரன், குலோத்துங்க சோழன் முதலிய சோழப் பேரரசர்களின் காலத்திய மகோந்நத நிகழ்ச்சிகள் 'பொன்னியின் செல்வன்' கதையைப் போல் பல சரித்திரக் கதைகள் புனைவதற்கு ஆதாரமாகக் கூடியவை.

இந்தக் கதையின் ஆசிரியரைக் காட்டிலும் அறிவிலும் ஆற்றலிலும் ஆராய்ச்சியிலும் மிக்கவர்கள் வருங் காலத்தில் சோழ சரித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட பல மகோந்நதமான நவீனங்களை எழுதித் தமிழகத்துக்கு மேலும் மேலும் தொண்டு செய்வார்கள் என்று நம்புகிறேன்.

# சிந்தனைச் சிற்பி ஸ்ரீ அசோக மேத்தா

**வி. ஆர். ராதாகிருஷ்ணன்**

சுதந்திர இந்தியாவில் நடந்த பொதுத் தேர்தலுக்குப் பிறகு, இந்தியப் பார்லிமெண்டில் நல்ல, உருப்படியான எதிர்க்கட்சி ஒன்று உருவாகவில்லை. ஜனநாயகத்திலும் தேசியத்திலும் நம்பிக்கையில்லாதவர்கள் பலர், ஆளும் கட்சிக்கு எதிராக வெற்றி பெற்றனர். ஜனநாயகத்தில் நம்பிக்கை இல்லாதவர்களும், தேசிய சுதந்திரத்திலும் ஐக்கியத்திலும் பற்றில்லாதவர்களும், மக்களால் மற்ற பல காரணங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டால் அவர்கள் சட்டசபைகளில் பொறுப்புணர்ச்சியோடு, மக்களின் நலனுக்காகப் போராடுவார்கள் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

தேசிய சுதந்திரப் போராட்டத்தில் பங்கு கொண்டு தியாகம் செய்தவர்களும், ஜனநாயக முறைகளில் அசைக்கமுடியாத ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர்களுமான ஆச்சார்யா கிருபளானி, ஸ்ரீ அசோக மேத்தா, ஸ்ரீமதி கமலாதேவி போன்றவர்கள் சென்ற பொதுத் தேர்தலில் வெற்றி பெறவில்லை. பார்லிமெண்டில் அதனால் சரியானதொரு எதிர்க் கட்சியும் அமையவில்லை. நல்லகாலமாக பீஹாரில் நடைபெற்ற உப தேர்தலில், ஆச்சார்ய கிருபளானி தேர்ந்தெடுக்கப்பட்டு பார்லிமெண்டுக்குச் சென்றார். சென்ற வாரம் மத்தியப் பிரதேசத்தில் பந்தாராவில் நடைபெற்ற உப தேர்தலில் இருபத்தையாயிரம் வாக்குகளுக்கு மேல் அதிகமாகப் பெற்று, ஸ்ரீ அசோக மேத்தா டில்லி மக்கள் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இனி பார்லிமெண்டில் பொறுப்புணர்ச்சியோடு கூடிய எதிர்க் கட்சி உருவாகுமென்ற நம்பிக்கையும் உண்டாகிறது.

பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியின் முன்னணித் தலைவர்களுள் குறைந்த வயதுள்ளவர் ஸ்ரீ அசோக மேத்தா. அவருக்கு இப்பொழுது வயது நாற்பத்தி மூன்றுதான் ஆகிறது. பி. ஏ. ஹானர்ஸ் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும் போதே கல்லூரியை விட்டு மகாத்மாஜி 1931ல் துவக்கிய சுதந்திரப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை புகுந்தார். இளம் வயதிலேயே தாய் தந்தையரை இழந்த அசோக மேத்தா அவரது உறவினர்களால் பராமரிக்கப்பட்டார். கல்லூரியில் படிக்கும் போதே, காலஞ்சென்ற யூஸப் மேஹரலியுடன் கூட பம்பாய் இளைஞர் இயக்கத்தை நடத்தினார். காங்கிரஸில் சேர்ந்து தொண்டராகப் பணியாற்றி வந்தார்.

1934-ல் காசிக் சிறையில் ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண், ஸ்ரீ அச்சுத் பட்டவர்த்தன், ஸ்ரீ எம். ஆர். மஸானி, ஸ்ரீ எஸ். எம். ஜோஷி இவர்களுடன் சேர்ந்து முதன் முதலில் காங்கிரஸ் — சோஷலிஸ்ட் கட்சியை நிறுவுவதற்கு வித்திட்டார் ஸ்ரீ அசோக மேத்தா. அன்று முதல் காங்கிரஸ் சோஷலிஸ்ட் கட்சியிலும், பிறகு சோஷலிஸ்ட் கட்சியிலும், இப்பொழுது பிரஜா சோஷலிஸ்ட் கட்சியிலும் அவர் இடைவிடாது சோர்வில்லாது உழைத்துப் பாடுபட்டு வருகிறார்.



ஸ்ரீ அசோக மேத்தா

பம்பாயிலிருந்து வந்த காங்கிரஸ் சோஷலிஸ்ட் என்ற வாரப் பத்திரிகையைப் பல ஆண்டுகள் அதன் ஆசிரியராக இருந்து சிறப்பாக நடத்தி வந்திருக்கிறார் ஸ்ரீ அசோக மேத்தா. நாவன்மை பெற்ற அவர் தெளிவாக எழுதவும் சக்தி பெற்றுள்ளார். ஸ்ரீ அசோக மேத்தா சிறையிலிருந்த போது ஆயிரக்கணக்கான புத்தகங்களுக்கு மேல் படித்து ஆராய்ந்திருக்கிறார். புத்தகங்களின்மேல் அவருக்கு விசேஷ மோகம். அவருடைய மேஜையின் பேரில் எப்பொழுதும் பல புத்தகங்கள் இருந்து கொண்டுதான் இருக்கும். தினம் குறைந்த பட்சம், மூன்று மணி நேரமாவது நல்ல நூல்களைப் படிப்பதில் செலவிடுவார்.

இதுவரையில் பல அரிய அரசியல் நூல்களை எழுதியிருக்கிறார். "இந்தியக் கப்பல் வியாபாரம்" "இந்தியா யாருக்குச் சொந்தம்!" "1857-சுதந்திரப் போர்" என்ற புத்தகங்கள் கல்லூரி மாணவர்களுக்கு விசேஷ பரீட்சைகளில் தேறுவதற்குப் பாடபுத்தகங்கள்போல் அமைந்துள்ளன.

அவர் எழுதியுள்ள "ஜனநாயக சோஷலிஸம்", என்ற புத்தகம் இஸ்ரேல் நாட்டில் லத்தீன் பாஷையில் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இப்புத்தகத்தின் இரண்டாம் பதிப்புகூட சமீபத்தில் வெளியாகி இருக்கிறது. ஜனநாயக சோஷலிஸ இயக்கத்துக்கு இப்புத்தகம் தனிச் சிறப்பளிக்கக் கூடியதாயிருக்கிறது என்று இப்புத்தகத்தின் முன்னுரையில் ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் கூறுகிறார்.

"திட்டமிட்ட பொருளாதாரத்தின் அரசியல்" என்ற அருமையான ஆராய்ச்சியோடு கூடிய அரிய புத்தகம் ஒன்றைச் சமீபத்தில் ஸ்ரீ அசோக மேத்தா எழுதியிருக்கிறார். நாட்டின் அபிவிருத்தியில் நாட்டம் கொண்டவர்கள் இதில் உள்ள விஷயங்களைப் பற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் இல்லாத ஏழ்மை நிலையிலுள்ள நாடுகளில், ஆளும் கட்சியினரும் எதிர்க் கட்சியினரும், தேச அபிவிருத்தித் திட்டங்களில் ஒன்றுபட்டு ஒருமுகமாக ஒத்துழைக்க வேண்டுமென்று ஸ்ரீ அசோக மேத்தா அபிப்பிராயப்படுகிறார். பதவியில் உள்ள கட்சி ஏராளமான பொருள் செலவில் ஒரு திட்டத்தை உருவாக்குகிறார்கள். பொதுத் தேர்தலில் அக் கட்சி தோற்று விடுகிறது. எதிர்க் கட்சியினர் அதிகாரத்தைப் பற்றுகின்றனர். ஏற்கெனவே இருந்த கட்சியின் திட்டத்தை ரத்து செய்து விடுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது ஏற்படும் பொருள் நஷ்டங்களுக்கு யார் பொறுப்பாளி? பொது ஜனங்கள்தானே பாதிக்கப் படுவார்கள்! ஆகவே ஆளும் கட்சியும், எதிர்க்கட்சியும் சேர்ந்து திட்டமிட்டுப் பொருளாதாரத்தை

அபிவிருத்தி செய்யும்போது பரஸ்பரம் கலந்து ஆலோசித்துக் குறிப்பிட்ட விஷயங்களில் ஒத்துழைப்பது அவசியம் என்று தக்க ஆதாரங்களுடனும் மேற்படி புத்தகத்தில் எழுதியிருக்கிறார்.

குஜராத்தில் "பார்தி" என்ற இடத்தில் நெல் விளையும் நிலங்களைப் பெரிய மிராசுதார்கள் புல் விளைய விட்டு விட்டார்கள். அதனால் ஆயிரக் கணக்கான விவசாயிகள் வேலை இல்லாது தவித்தனர். 'நிலத்தை வாரத்துக்கு விட்டு விவசாயிகளுடன் என்ன போராட்டம் வேண்டியிருக்கிறது! இவர்கள் வயிற்றிலடித்தால் விவசாயிகள் சரியாகப் போய் விடுவார்கள்' என்று நினைத்து மிராசுதார்கள் அவர்கள் நிலங்களைத் தரிசு போட்டு விட்டனர். "உணவு உற்பத்தியை அதிகரித்துப் பஞ்ச நிலைமை ஏற்படுவதைத் தவிர்க்க வேண்டும். வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க வேண்டும்" என்று சர்க்காரும் தலைவர்களும் சொல்லி வருகின்றனர். ஆயிரக் கணக்கில் வேலையில்லாதவர்கள் ஒருபுறம். ஆயிரக் கணக்கான ஏக்கர் தரிசு நிலங்கள் மற்றொரு புறம். இந்த அநீதியை அரசாங்கத்துக்கு எடுத்துக் காட்டினார் ஸ்ரீ அசோக மேத்தா. மிராசுதார்கள் மனமிரங்கி விவசாயிகளுக்கு வாழ வசதி செய்து தரவேண்டுமென்று கேட்டார். யாரும் இணங்கவில்லை. இறுதியாக அண்ணல் காந்தி சென்ற வழியில் சத்தியாக்கிரகப் போரைத் துவக்கினார். சிறைக்குச் சென்றார். அமைதியாக ஆயிரக் கணக்கான விவசாயிகளும் சிறை சென்றனர். அரசாங்கமும் மிராசுதார்களும் பணிந்தனர். இந்திய விவசாயிகளின் சரித்திரத்தில் பொன் எழுத்துக்களால் பொறிக்கப் படவேண்டிய இந்த அற்புத சம்பவமும் இவருடைய தலைமையில்தான் நடந்தது.

ஸ்ரீ அசோக மேத்தா ஒரு குஜராத்திக்காரர். சுதந்திரப் போராட்ட காலத்தில் பல ஒப்பற்ற தேச பக்த சிகாமணிகளைத் தந்துள்ளது குஜராத் மாகாணம். தேசத் தந்தை மகாத்மாவே குஜராத்திக்காரர்தானே! அவரது வலது கரமாக விளங்கிய ஸ்ரீ வல்லபாய் படேலும் குஜராத்தி விவசாயக் குடும்பத்தில் பிறந்தவரன்றோ! அந்த தேசபக்தப் பரம்பரையில் தோன்றிய உத்தமர் ஸ்ரீ அசோக மேத்தா. மகாத்மாவின் நேர்மையும், அன்பு உள்ளமும், சர்தாரின் அசைக்க முடியாத உறுதியும், அஞ்சா நெஞ்சமும், ஸ்தாபனத்தைக் கட்டிக் காக்கும் திறமையும் ஒருங்கே பெற்றவர் ஸ்ரீ அசோக மேத்தா என்று சொல்லலாம்.

1942—ம் ஆண்டு இயக்கத்துக்குப் பிறகு 1946-ல் மறுபடியும் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடந்தது. அதை நடத்தி வைக்கும் பொறுப்பைப் பம்பாய்ராஜ்ய காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ எஸ். கே. பாடீல் ஸ்ரீ அசோகமேத்தாவிடம் ஒப்படைத்தார். ஸ்ரீ பாடீலுக்குக் காங்கிரஸ் சோஷலிஸ்டுகளைக் கண்டால் கொஞ்சமும் பிடிக்காது. அவர்களை வேப்பங்காயாக வெறுத்தார். ஆனால் அவசரமாகக் காரியங்களைச் செய்யவேண்டியிருந்தது. அப்பொழுது திறமையோடு காரியங்களைப் பொறுப்பாக நிறைவேற்றும் ஆற்றலும், உற்சாகமும் ஸ்ரீ அசோக மேத்தாவுக்குத்தான் உண்டு என்பதை உணர்ந்திருந்த ஸ்ரீ பாடீல் அவரிடத்திலேயே பொறுப்புகளை ஒப்படைத்தார்.

யுத்த காலத்தில் ஸ்ரீ யூஸப் மேஹராலியும் ஸ்ரீ அசோகமேத்தாவும் சேர்ந்து பம்பாயில் தற்காப்பு தொண்டர் படையை ஸ்தாபித்தனர். ஆயிரக் கணக்கான வாலிபர்கள் இத்தொண்டர் படையில் சேர்ந்தனர். பம்பாய் சர்க்கார் ஏ. ஆர். பி தொண்டர்படை சேர்க்கச்செய்த முயற்சி தோல்வியுற்றது. பிறகு வேறு வழியில்லாமல் ஸ்ரீ அசோக மேத்தாவிடத்திலேயே ஏ. ஆர். பி. வேலைகளையும் சர்க்கார் அன்றைக்கு ஒப்படைக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. இதை அறிந்திருந்த ஸ்ரீ பாடீல் வேறு வழி தேடாமல் ஸ்ரீ அசோகமேத்தாவிடத்தில் பம்பாய் மகாநாட்டை நடத்தி வைக்கும் பொறுப்பை விட்டு விட்டார் என்பதில் என்ன ஆச்சரியம்!

1947-ம் ஆண்டு டிஸம்பர் 27-ம் தேதி இந்திய தொழிற் சங்க இயக்கத்திலே மகத்தான தினம். பம்பாயில் பஸ்கள் ஓடவில்லை; டிராம்கள் ஓடவில்லை; ஹோட்டல்கள் திறக்கவில்லை; பாங்கிகள் மூடப்பட்டன; சைக்கிள் ரிக்ஷாக்கள் கூடக் கிடைக்கவில்லை; மின்சாரம் கிடையாது; கடைகள் மூடப்பட்டன. ஆனால் நகரில் பரிபூரண அமைதி நிலவியது. பத்து லக்ஷம் தொழிலாளர்கள் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர். தொழிலாளர்களின் நலனுக்கு எதிரான சட்டங்கள் செய்யச் சர்க்கார் துணிந்ததை எதிர்த்து இந்த மாபெரும் வேலை நிறுத்தம் நடந்தது. அதை நடத்தியவர் ஸ்ரீ அசோக மேத்தாதான். இதைப் போல் அமைதியான ஓர் வேலைநிறுத்தம் இது வரையில் நடந்ததே கிடையாது.

1947 ம் ஆண்டில் திருவிதாங்கூர் எல்லைக்குள் பிரவேசிக்கக் கூடாது என்று ஸ்ரீ அசோக மேத்தாவுக்குத் திருவாங்கூர் சர்க்கார் தடை உத்தரவு போட்டனர். இந்தத் தடை உத்தரவை மீறி ஸ்ரீ அசோக மேத்தா திருவிதாங்கூருக்குப் புறப்பட்டார். அப்பொழுது அவருடன் செல்லும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் செங்கோட்டையைத் தாண்டியவுடன் திருவாங்கூர் போலீஸார் ஸ்ரீ அசோக மேத்தாவையும், அவருடன் சென்ற அவரது சகோதரி ஸ்ரீமதி வசந்தி ஷராபையும், என்னையும் கைதுசெய்து நள்ளிரவில் தென்காசியில் கொண்டு விட்டு விட்டனர். அந்த இரவே முடிவு செய்தார் ஸ்ரீ அசோக மேத்தா. "ஆயிரம் தொண்டர்களுடன் இன்னும் பதினைந்து தினங்களில் மீண்டும் திருவாங்கூரில் பிரவேசிப்பேன்" என்று அறிவித்துவிட்டுத் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து விட்டுச் சென்னைக்கு வந்தார். அதற்குள் அவர் மீதிருந்த தடையை ரத்து செய்துவிட்டனர்.

அப்பொழுதிருந்தே ஸ்ரீ அசோக மேத்தாவுக்குத் தமிழ் நாட்டின் மீது தனியான மதிப்பும் அன்பும் உண்டு. கோவில்பட்டியிலிருந்த போது தமிழ் நாட்டைத் தட்டி எழுப்பிய பாரதி பிறந்த எட்டையாபுரத்துக்குச் சென்று பாரதி மணி மண்டபத்தைப் பார்த்துத் தலை வணங்கி மரியாதை செய்து மகிழ்ந்தார். சமீபத்தில் நடந்த அவர் தேர்தலுக்காகத் தமிழ் நாட்டிலிருந்து பல நண்பர்கள் அவருக்குப் பொருள் உதவி செய்தார்கள். தேர்தலில் வெற்றியும் பெற்றார்.

பார்லிமெண்ட் அங்கத்தினர்களுக்கு வேண்டிய அத்தனை குணாதிசயங்களும் ஸ்ரீ அசோக மேத்தாவிடம் இருக்கின்றன. ஆழ்ந்த ஆராய்ச்சி, சீரிய பொறுப்புணர்ச்சி, நன்கு பேசும் ஆற்றல், எந்த இக்கட்டான நிலைமையையும் சமாளித்துப் பணிச் சென்று பதிலளிக்கும் திறமை யாவும் ஸ்ரீ அசோக மேத்தாவிடம் காணலாம். பார்லிமெண்ட் விவாதங்களும் இனி தனி சோபை பெற்று விளங்கும். சிந்தனைச் சிற்பி ஸ்ரீ அசோக மேத்தாவின் திறமையையும் உலகம் அறியச் சந்தர்ப்பம் கிடைக்கும்.

வாழ்க ஸ்ரீ அசோக மேத்தா!

## ஒரு அரிய பொக்கிஷம்

வாழ்நாள் உள்ளளவும்

சங்கீதம்... தீப அலங்காரம்... கேளிக்கை... சிருங்காரம்! ஆம், திருமண வைபவம் இரண்டு மானிட உள்ளங்களுக்கு மிகவும் முக்கியமான நாள்! இந்த வைபவத்தை வாழ்நாள் உள்ளளவு மிருக்கும் ஒரு வெகுமதி மூலம் பூர்த்தி செய்யுங்கள் — ஒரு பேவர் - லூபா கடிகாரம்... பொறுக்கி யெடுக்கப் பலவித மாடல்கள் இருக்கின்றன.

கேட்லாக்குக்கு எழுதுங்கள் :

**FAVRE-LEUBA & CO. LTD.**

பேவர்-லூபா & கோ., லிமிடெட்

பம்பாய் :: கல்கத்தா



# சக்கரவர்த்தித் திருமகன்



## 2. சந்தத்தைக் கண்டார்!

ஒரு நாள் காலை வால்மீகி ரிஷியின் ஆசிரமத்துக்கு நாரத முனிவர் வந்தார். வால்மீகி ரிஷி அவரை உபசரித்து வணங்கி, "சகலமும் தெரிந்த நாரதரே, இந்த உலகத்தில் வீரர்களுக்குள் எல்லா நற்குணங்களும் அறிவும் பெற்ற உத்தம புருஷன் யார்?" என்று கேட்டார்.

ஞான திருஷ்டியால் நாரதர், எதற்காக வால்மீகி ரிஷி இதைக் கேட்கிறார் என்று தெரிந்து கொண்டு, "சூரிய வம்சத்தில் பிறந்த ராமன் அயோத்தியில் அரசு புரிந்து வருகிறான். நீர் கேட்கும் உத்தம வீரன் அவன்தான்" என்றார்.

இப்படிச் சொல்லி விட்டு ராம சரித்திரத்தைச் சுருக்கமாக விளக்கிச் சொன்னார். அதைக் கேட்ட வால்மீகி ரிஷி மிகவும் மகிழ்ச்சி யடைந்தார். நாரதர் விடைபெற்றுச் சென்ற பிறகும் அதைப் பற்றியே தியானித்துக் கொண்டிருந்தார். பிறகு நதிக் கரைக்குப் போனார்.

குளிப்பதற்காக முனிவர் இடம் பார்த்துக் கொண்டு ஆற்றங் கரையில் உலாவிக்கொண்டிருந்த அந்தச் சமயம் மரக் கிளையில் ஆணும் பெண்ணுமாக விளையாடிக் கொண்டிருந்த இரண்டு கிரௌஞ்ச பட்சிகளுள் ஒன்று எங்கேயோ நின்ற ஒரு வேடன் எய்திய அம்பு பட்டுக் கீழே விழுந்தது. பெண் பறவை, தன் காதலன் திடீர் என்று அடிபட்டுக் கீழே விழுந்து புரள்வதைப் பார்த்துக் கதறிக் கதறி அழுதது.

இந்த நிகழ்ச்சியைக் கண்ட ரிஷி, "அடே பாபீ! இப்படிச் செய்தாயே! நீ எவ்வளவு நாள் வாழ்ந்தாலும் இருக்க இடமின்றி அலையக் கடவாய்" என்று தன்னையு மறியாமல் வேடனைச் சபித்து விட்டார். அடுத்த கணம், இப்படி ஏன் செய்தேன் என்று நினைந்து நினைந்து வருத்தப் பட்டார்.

'வேடனை நான் ஏன் சபித்தேன்? எனக்கென்ன உரிமை இதற்கு? கோபாவேசத்துக்கு இடம் தந்து விட்டேனே!' என்று துக்கப்பட்டார்.

ரிஷியின் வாயினின்று வெளிப்பட்ட சாப மொழிகள் ஓர் அற்புத நாதத்தோடும் சந்தத்தோடும் அவருடைய காதிலேயே தொனித்தன. அதைக் கண்டு ரிஷியானவர் வியப்பு அடைந்தார். பறவைகளின் துக்கத்தைக் கண்டு தம் உள்ளத்தில் உதித்த கருணையும் அடங்காத மனக் கலக்கமும் சாப உருவம் கொண்டு தம்மையறியாமல் ஒரு அருமையான பாட்டாக அமைந்து விட்டதைக் கண்டு பேராச்சரியங் கொண்டார். இது எனக்கு விளங்காத ஆண்டவன் திருவிளையாடல் என்று எண்ணித் தியானத்தில் அமர்ந்தார்.

இந்நிலையில் சாட்சாத் நான்முகக் கடவுளே பிரத்யட்சமாக வந்து, "ரிஷி சிரேஷ்டரே, திகைக்காதீர்! ராம சரித்திரத்தை எழுதும் முறை உமக்குக் காட்டவே இந்த நிகழ்ச்சி நடந்தது. சோகத்திலிருந்து தோன்றிய சுலோகத்தையே வைத்து ரகுநாதரின் கதையைப் பாடி உலகத்துக்கு உதவும் திறமை உமக்கு வரமாகத் தந்தேன்" என்று சொல்லி மறைந்தார்.

அதன்மேல் வேடனைக் கோபித்துச் சொன்ன சாப மொழிகளைத் திரும்பத் திரும்ப ரிஷியும் சீடர்களுமாகப் பாடிப் பாடி அந்தச் செய்யுள் உருவத்தை மனத்தில் அமைத்துக் கொண்டார்கள். பின்னர் அந்தச் சந்தத்தில் ரிஷியானவர் ராம சரித்திரத்தைப் பூரணமாகப் பாடித் தம்முடைய சீடர்களுக்குக் கற்பித்தார். இதுவே வால்மீக ராமாயணம் என்னும் புண்ணிய நூலின் அற்புதத் தோற்றுவாய்.



மக்களின் துக்கங்களை ஈசுவரனும் ஈசுவரியும் மானிட ஜாதியில் பிறந்து தாமே நேரில் அனுபவித்து, தருமத்தை உறுதிப் படுத்திவிட்டு மறைந்த இந்தப் புண்ணிய கதையை வால்மீகி மகரிஷி ஒப்பற்ற மதுரமான முறையில் பாடி உலகத்துக்குத் தந்தார். "பூமியில் மலைகளும் ஆறுகளும் உள்ள வரையில் இந்த ராமாயணம் மக்களிடை வழங்கும். எல்லாப் பாபங்களினின்றும் விடுதலை தரும்" என்று நான்முகன் ஆசீர்வதித்துச் சொன்னது பொய்யாகாது.

• • •

கோசல தேசம் கங்கைக்கு வடக்கே சரயூ நதி பாய்ந்து செழிப்புற்ற விசாலமான தேசம். கோசல நாட்டின் தலை நகரம் அயோத்தியை. மனு என்னும் புகழ் பெற்ற சூரிய குல அரசனால் நிர்மாணிக்கப்பட்ட நகரம். மிக்க அழகும் புகழும் பெற்ற பெரிய நகரம். வால்மீகி வருணித்திருப்பதைப் படித்தால் தற்கால ராஜதானி நகரங்களுக்கு எந்த விதத்திலும் அயோத்தி குறைந்ததாகத் தோன்றவில்லை. அந்த நாட்களிலுங்கூட பாரத தேசத்தில் நகரங்களும் நகரப் பண்பாடும் மிக உன்னத நிலை அடைந்திருந்ததாகத் தெரிகிறது.

தசரத சக்கரவர்த்தி இந்த அயோத்தியா நகரத்திலிருந்து கொண்டு ராஜ்யத்தை ஆண்டு வந்தான். தசரதன் தேவர்களுக்காக யுத்தம் செய்தவன். மூன்று உலகங்களிலும் புகழ் பெற்ற அரசன். இந்திரன், குபேரன் இவர்களுக்குச் சமானமாக இருந்தான். கோசலநாட்டு ஜனங்களும் மிகச் சந்தோஷமாகவும் யோக்கியமாகவும் வாழ்ந்து வந்தார்கள். எண்ணிறந்த வீரர்களடங்கிய பெருஞ்சேனை ராஜ்யத்தை நன்றாகப் பாதுகாத்து வந்தது. சத்துருக்கள் கிட்ட நெருங்க முடியாத முறையில் தசரதன் அயோத்தி நகரத்தைப் பாதுகாத்து வந்தான். சேனுபலம், கோட்டை மதில் சுவர்கள், அகழிகள், எதிரிகளைத் தாக்கும் எந்திர அமைப்பு—இவைகளால் காக்கப்பட்ட அந்த நகரம் சத்துருக்களால் யுத்தம் செய்து பிடிக்க முடியாததாக இருந்தது. அந்த நகரத்துக்கு அயோத்யை* என்ற பெயர் மிகப் பொருத்தமாகவே இருந்தது.

தேவராஜனைப் போல் புகழும் ஐசுவரியமும் பெற்று அரசாண்டு வந்த தசரதனுக்கு மந்திரிகளும் சரியாக அமைந்திருந்தார்கள். அரசனுக்கு யோசனை சொல்வதிலும் இட்ட பணிகளை உடனே நிறைவேற்றுவதிலும் மிகுந்த சாமர்த்தியம் பெற்ற எட்டு மந்திரிகள் தசரதனுக்குச் சேவை செய்து வந்தார்கள். தர்மோபதேசம் செய்வதற்கும் பூஜை, வேள்விச் சடங்குகள் முதலிய காரியங்களை நடத்துவதற்கும், வசிஷ்டர் வாமதேவர் முதலிய ரிஷிகளும், வேறு சிறந்த பிராமணர்களும் அரசன் பக்கத்திலிருந்து வந்தார்கள்.

ஜனங்களைக் கஷ்டப்படுத்தாமல் சக்திக்குத் தகுந்தவாறு வரிகள் வசூலிக்கப்பட்டன. குற்றவாளிகளின் சக்தி, சூழ்நிலை இவற்றை உத்தேசித்து அபராதங்கள் விதிக்கப்பட்டன. ஆலோசனை சொல்லுவதில் நிபுணர்களும் ராஜ்ய காரியங்களில் சமர்த்தர்களுமான மந்திரிகளாலும் அதிகாரிகளாலும் சூழப்பட்டு ஆட்சி புரிந்த தசரதன் உதய சூரியன் கிரணங்கள் வீசி ஜொலிப்பது போல் ஜொலித்தான்.

## 3. குறை தீர்ந்தது!

ஆண்டுகள் பல நன்றாகக் கழிந்தன. ஆயினும் அரசனுக்கு ஒரு பெருங்குறை. புத்திர பாக்கியம் இல்லாத குறை. ஒருநாள் — அப்போது வசந்த ருது—அரசனுக்கு ஓர் எண்ணம் தோன்றிற்று. "அசுவமேத யாகமும் புத்திர காமேஷ்டியும் செய்வித்தேனானால் ஒருவேளை மக்கட்பேறு பெறுவேனோ?" என்று எண்ணினான். குருக்களைக் கேட்டதில் அவர்களும் ரிஷ்ய சிருங்க முனிவரைத் தருவித்து அவர் தலைமையில் இந்த வேள்வியை நடத்தத் தீர்மானித்தார்கள். தீர்மானித்தபடி மகாராஜா உத்தர விட்டுச் சகல ஏற்பாடுகளும் செய்தார்கள். அரசர்களுக்கு அழைப்பு. யாகசாலை நிர்மாணத்துக்கு வேண்டிய காரியங்கள் எல்லாம் மிகத் தீவிரமாக நடைபெற்றன.

அந்தக் காலத்தில் வேள்வி யென்றால் சாமான்யமல்ல. யாக மேடைக்கு வேண்டிய அளவுகள் எடுத்து மிக ஜாக்கிரதை

---

* 'அயோத்யா' என்றால் 'யுத்தத்தால் அடக்க முடியாத' என்று பொருள்.

யாகச் செய்ய வேண்டும். அதற்கே தனி நிபுணர்கள் உண்டு. அவர்கள் கலந்து நிச்சயித்து உத்தரவிட்டபடி வேலைக்காரர்களைக்கொண்டு எல்லாம் தயாரிக்க வேண்டும். யாக பாத்திரங்கள் செய்யும் நிபுணர்களைத் திரட்டி, அவர்களுக்கு இன்ன இன்னது செய்யுங்கள் என்று சொல்லி வேலை வாங்க வேண்டும். தச்சர்கள், சிற்பிகள், குளம் கிணறு வெட்டுகிறவர்கள், சித்திரக்காரர்கள், பாடகர்கள், வாத்திய சங்கீதக்காரர்கள், நிருத்தியக் கலைஞர்கள்—இன்னும் இம் மாதிரியான பல பேர்களைத் திரட்ட வேண்டும். விருந்தினர்கள் தங்குவதற்கு ஒரு புதிய நகரமே நிருமாணித்து ஆயிரக் கணக்கான ஜனங்களுக்குப் போஜனமளித்து, உபசரித்து, மாடுகள், துணிகள் முதலியன கொடுக்க வேண்டும். ஆட்டம், சங்கீதம், வேடிக்கை முதலியவைகளையும் ஏற்பாடு செய்து, பெருங் கூட்டத்தைத் திருப்தி செய்து அனுப்ப வேண்டும். தற்கால உலகில் ராஜாங்க ஆதரவில் நடத்தப்படும் மகா சம்மேளனங்களைப் போலவே அந்தக் காலத்தில் வேள்விகள் நடத்தப்பட்டன.

எல்லாக் காரியங்களும் சரியாகவும் மும்முரமாகவும் நடத்தப்பட்டு, யாகக் குதிரையும் அதனுடன் ஒரு வீரர் படையும் பல நாடுகள் சுற்றி வரும்படி அனுப்பப்பட்டது. ஒரு வருஷம் கழித்து எந்த இடையூறுமில்லாமல் யாகக் குதிரையும், குதிரையை அழைத்துச் சென்ற வீரர்களும் வெற்றிக் கொண்டாட்டத்துடன் நாட்டுக்குத் திரும்பி வந்தார்கள்.

அதன் மேல் யாகத்தைச் சாஸ்திரப்படி செய்ய ஆரம்பித்தார்கள். அயோத்தியையில் இது நடக்க, தேவர்களுக்குள் நடந்த யோசனையை வால்மீகி பின்வருமாறு சொல்லுகிறார்.

நான்முகக் கடவுளைப் பார்த்துத் தேவர்கள் சொன்னார்கள்: "பகவானே! உம்முடைய வரத்தைப் பெற்றுக் கொண்டு ராவணன் என்ற அரக்கன் எங்களுக்கெல்லாம் மிகுந்த தொல்லை தந்து வருகிறான். அவனை நாம் அடக்கவோ, ஜெயிக்கவோ, கொல்லவோ முடியவில்லை. உம்முடைய வரத்தினால் அவனுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டு அவனுடைய அகங்காரம் அதிகரித்து, துஷ்டனாகிப் போய், அவன் எல்லாரையும் அவமதித்தும் கொடுமை செய்தும் வருகிறான். இந்திரனைத் துரத்திவிட்டுத் தேவலோகத்தையே கைப்பற்ற எண்ணுகிறான். அவனைக் கண்டு சூரியனும் வாயுவும் வருணனுங்கூடப் பயப்பட்டு நடுங்குகிறார்கள். அவன் அகங்காரத்தை அடக்கி அவன் கொடுமையை முடிவுக்குக் கொண்டு வரும் யோசனை நீர்தான் சொல்ல வேண்டும்."

இதைக் கேட்ட பிரம்மன், "இந்த ராவணன் தவம் செய்து வரம் பெற்றிருக்கிறான். நல்ல வேளையாக வரம் கேட்கும் பொழுது, அவனே ஒரு விஷயத்தை விட்டு விட்டான். தேவ, கந்தருவ, ராக்ஷசர்களால் தனக்கு மரணம் உண்டாகக் கூடாது என்று வரம் பெற்றானேயொழிய மானிடர்களைப் பற்றிக் கேட்கவில்லை. மனித ஜாதியை மறந்தோ அலட்சியம் செய்தோ விட்டு விட்டான். ஆனபடியால் இதற்கு வழி உண்டு" என்றான்.

எல்லாருக்கும் ஒரே மகிழ்ச்சி. உடனே மகா விஷ்ணுவைச் சரணடைந்தார்கள். "லோகநாதனே, ராவணன் என்ற



துஷ்டன் பிரம்மாவினிடம் வரம் பெற்று உலகத்தை இம்சை செய்து வருகிறான். அதைப் பொறுக்க முடியவில்லை. அவன் அமரத்வம் கேட்டுப் பெற்ற வரத்தில் மனிதனால் தனக்கு மரணமில்லை என்று சேர்க்கப்படவில்லை. மறந்தோ, அலட்சியம் செய்தோ அவன் அதைக் கேட்கவுமில்லை, பிரம்மனிடமிருந்து பெறவுமில்லை. ஆனபடியால் தங்களுடைய அருள் எங்களுக்கு வேண்டும். மனித ஜன்மம் எடுத்துத் தாங்கள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்றார்கள்.

நாராயணனும் அப்படியே என்று ஒப்புக் கொண்டு, ''பூவுலகில் புத்திர பாக்கியத்துக்காக யாகம் செய்யும் தசரதனுக்கு, நான்கு குமாரர்களாக நான் அவதரித்து ராவணனைக் கொன்று உங்களுக்கு விடுதலையும் தருவேன்'' என்றான். அவ்வாறே தசரதனுடைய மூன்று மனைவிமார்களின் வயிற்றில் கர்ப்பவாசம் செய்யத் திருவுளங் கொண்டான்.

** ** **

ரிஷ்ய சிருங்கர் வேள்வித் தீயில் ஆகுதி விட்டார். நெய்யைத் தீ விழுங்கிற்று. தீயிலிருந்து பொங்கி எழுந்தது கொழுங் கனல் போன்ற ஒரு பெரிய உருவம். அதன் பிரகாசம் சூரியனைப் போல் கண்களைக் கூசிற்று.

இரு கைகளாலும் ஒரு திவ்விய தங்கப் பாத்திரத்தை ஏந்தி நின்றது. கம்பீரமான துந்துபி சுவரத்தில் சொல்லிற்று. ''தசரத மகாராஜனே! உன்னுடைய பிரார்த்தனையை ஒப்புக் கொண்டு தேவர்கள் இந்தப் பாயசத்தை உன் மனைவி மார்களுக்கென்று அனுப்பியிருக்கிறார்கள். உனக்குப் புத்திர பாக்கியம் உண்டாகும். இதைப் பெற்றுக்கொண்டு உன் பத்தினிகளுக்குத் தருவாயாக. மங்களம்!'' என்றது.

தசரதனும் அடங்கா மகிழ்ச்சியடைந்து குழந்தையைத் தூக்கியெடுப்பது போல் வெகு பிரியமாகத் தங்கப் பாத்திரத்தைப் பெற்றுக் கொண்டான். நெருப்பினின்று கிளம்பிய யக்ஞ புருஷனும் மறைந்தான்.

வேள்வி முடிந்தபின் அரசன் பாயச பாத்திரத்தை அப்படியே எடுத்துக் கொண்டு அந்தப்புரம் சென்று தனது மனைவிமார்களிடம்,

''தேவர்களின் பிரசாதம் இதோ கொண்டு வந்திருக்கிறேன். இதை நீங்கள் மூவரும் அருந்திப் புத்திரப்பேறு அடையுங்கள்!'' என்று சொன்னான்.

இந்த மகிழ்ச்சிச் செய்தியைக் கேட்டதுமே அந்தப்புரம் சரத் கால சந்திர காந்தியுடன் ஜொலித்தது. பாத்திரத்திலுள்ள பாயசத்தில் பாதி கௌசல்யா தேவி அருந்தினாள். மிகுதியில் ஒரு பாதியைச் சுமித்திரைக்கு அப்படியே தந்து அவள் அருந்தினாள். மிஞ்சிய பாயசத்தில் பாதியைக் கைகேயி அருந்தினாள். பின்னர் எஞ்சி நின்ற பாயசத்தைத் தசரதன் மறுபடி சுமித்திரைக்குக் கொடுத்தான்.

பரம ஏழை ஒருவன் பணம் நிறைந்த பானை ஒன்று புதைத்துக் கிடந்ததைத் திடீர் என்று அடைந்து பெற்ற மகிழ்ச்சியைப் போல் தசரதனுடைய மூன்று மனைவிகளும் மகிழ்ந்து மனம் பூரித்தார்கள். எதிர்பார்த்தபடி மூன்று ராஜ பத்தினிகளும் கர்ப்பம் தரித்தார்கள்.

## கம்யூனிஸ்டுகள் தேவை!

சாமுவேல் ஆசீர்வாதம்

ஸ்பெயின் தேசத்து சர்வாதிகாரியான பிராங்கோவை அமெரிக்க ஸ்தானிகர் ஒருவர் பேட்டி கண்டார். ஸ்பெயின் தேசத்தின் பலவிதமான நிர்மாண வேலைகளுக்கு அமெரிக்க டாலர்களையும் அமெரிக்க நிபுணர்களையும் கொடுத்து உதவத் தாங்கள் தயாரா யிருப்பதாகவும் ஆயுதங்களும் கொடுக்கச் சம்மதமென்றும் ஸ்தானிகர் தெரிவித்தார். சற்று நேரம் யோசித்த பின், பிராங்கோ ''சரி, நாங்களும் வாங்கிக் கொள்ளத் தயார்'' என்றார். அமெரிக்க ஸ்தானிகர் பிராங்கோவுக்கு நன்றி சொல்லிவிட்டுப் புறப்பட்டார். திடீரென்று அவருக்கு ஒரு யோசனை வந்தது. பிராங்கோவிடம் ''ஆமாம். உங்கள் தேசத்தில் கம்யூனிஸ்டுகளின் தொல்லைகள் அதிகம் உண்டல்லவா!'' என்று கேட்டார் ஸ்தானிகர். ''கம்யூனிஸ்டு வாசனையே எங்கள் தேசத்தில் கிடையாது. இருக்க ஒன்றிரண்டு கம்யூனிஸ்டுகளையும் தூக்கில் போட்டு ஒழித்து விட்டேன்'' என்று கம்பீரமாகப் பதிலளித்தார் பிராங்கோ. ஸ்தானிகர் முகத்தைச் சுளித்தார். ''அப்படியானால் அமெரிக்க உதவி உங்களுக்குக் கிடைப்பது சந்தேகந்தான்'' என்றார் ஸ்தானிகர். பிராங்கோவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. கொஞ்ச நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தார். அவருக்கு ஒரு யோசனை உண்டாயிற்று. இத்தாலியின் அயல் நாட்டு மந்திரிக்கு ''கூடிய சீக்கிரத்தில் நூறு கம்யூனிஸ்டுகளை இங்கு அனுப்பி வைக்கவும். பிரயாணச் செலவும் கிரயமும் கொடுக்கத் தயார்'' என்று தந்தி யடித்து விட்டார். இத்தாலியிலிருந்து வந்த பதில் தந்தியில், ''ரொம்ப வருந்துகிறேன். எங்கள் தேவைக்கு அதிகமான கம்யூனிஸ்டுகள் கையிருப்பில் இல்லை'' என்று கண்டிருந்தது.

(ஆங்கிலத்திலிருந்து தொகுத்தது)

ஸ்ரீ ஜகத்குரு ஆதிசங்கரர் அருளிய

# சிவானந்தலஹரீ

ஸ்ரீமான் T. K. பத்மனாபன் அவர்களால்

நாகரம், தமிழ் லிபிகளில் மூலமும், பக்தி ரஸத்துடன் எளிய தமிழில் ப்ரதி பத அர்த்தத்துடனும், ச்ருதி, ஸ்ம்ருதி, சாஸ்த்ர ப்ரமாணங்களுடன், விரிவான தத்வார்த்த தாத்பர்யத்துடனும், இப் புத்தகத்திற்கென்றே பிரத்யேகமாகத் தயாரிக்கப்பட்டுள்ள லிங்கோத்பவ மூர்த்தி முதலிய விசேஷமான 6 படங்களுடனும் கூடியது.

சுமார் 500 பக்கங்கள் விலை ரூ. 6-0-0 (தபால் செலவு ரூ. 1-4-0)

ஒரி ப்ரஸ் : திருவல்லிக்கேணி : சென்னை - 5

---

# B. I. S. N. கம்பெனி லிமிடெட்



## S. S. ரஜுலா

சென்னை - நாகப்பட்டினம் - பினங்கு - சிங்கப்பூர்

மேற்படி கப்பல் கீழ்க்கண்ட தேதி வாக்கில் புறப்படும்

சென்னையிலிருந்து 11 - 6 - 1954 - நாகப்பட்டினத்திலிருந்து 12 - 6 - 1954

மாறுதலுக்கு உட்பட்டது

ஸலூன் இடவசதி முழுவதும் புக் ஆகிவிட்டது. ஆனால் கம்பெனியின் ஏஜண்டுகளிடமிருந்து உணவுடனே அல்லது உணவு இன்றியோ பர்த் வசதி இல்லாத பிரயாண டிக்கெட்டுகள் கிடைக்கும்.

கீழ்க்கண்ட பிரயாண மற்றும் ஆரோக்கிய பத்திரங்கள் தேவையாகும்.

1. மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் கையெழுத்திடப்பட்ட அனுமதி பர்மிட்டுடன் கூடியதும் செல்லக் கூடியதுமான ஒரு பாஸ்போர்ட். பாஸ்போர்ட்டில் கையெழுத்திடப்படா விட்டால், ஒரு தனி அனுமதி பர்மிட்டோ அல்லது குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட விஸிட்டர்ஸ் பாஸை பாஸ்போர்ட்டுடன் கொடுக்க வேண்டும். அல்லது மலேயா அல்லது சிங்கப்பூரில் உள்ள குடியேற்ற அதிகாரிகளால் அளிக்கப்பட்ட ரீ-எண்ட்ரி பர்மிட்.

2. எல்லா ஸலூன் பர்த் வசதி இல்லாத பிரயாணிகளும் வருமான வரி ஆபீஸர்கள் ஒருவரிடமிருந்து (வெளி நாட்டுப் பிரிவு) முழு வருமான வரி செலுத்தியதற்கான அல்லது வரி விலக்கு சர்ட்டிபிகேட்டை, அவர்கள் வசிக்கும் வட்டாரத்து வருமான வரி ஆபீசரிடமிருந்து "ஏ" பாரம் வாங்கிக் கொண்ட பிற்பாடு பெற்று கொண்டு வரவேண்டும்.

3. காலராத் தடுப்பு ஊசி போட்டுக் கொண்டதற்காகவும், வைசூரி, அம்மை வராமலிருப்பதற்காக ஊசி போட்டுக் கொண்டதற்காகவுமான செல்லுபடி சர்ட்டிபிகேட்.

பினங், போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலான இடங்களுக்கு நேரடியாக சரக்குகளின் ஏற்றுமதி ஏற்றுக் கொள்ளப்படும். சிங்கப்பூரில் மாற்றி பாங்காக்கிற்கு அனுப்புவதற்கான சரக்குகளும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றுமதி விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதுக:

| பின்னி & கோ., (மதராஸ்) லிட். | மதுரா கம்பெனி லிமிடெட் |
|---|---|
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

# டயரில் உங்களுக்கு எது வேண்டும்?




நீங்கள் இவ்வளவையும் **Firestone**




## பயர்ஸ்டோன்

டயர்களில் காணலாம்

பயர்ஸ்டோன் ஸ்தாபனம் ஒன்றிலேயே கையாளப்படும் இந்த **சூபர் கம்-டிப்பிங்** முறை சிறப்புடைய தென்பது லாபரேட்டரி சோதனைகளில் மட்டுமின்றி இதர கூட்டுச் சோதனைகளிலும், இந்தியனு பொலீஸ் ரேஸ் முதலிய வேகப் பரிசோதனைகளிலும், நிரூபண மாகியுள்ளது. சூபர் கம்-டிப்பிங்கினால் எவ்வித அதிர்ச்சியும் தாங்கக் கூடியதாகக் கார்டுபாடி 60 சதவிகிதம் அதிக வலுவுள்ளதாகிறது. சூட்டினாலேற்படும் சிறுய்ப்புகள், நூல் பிரிதல் முதலியனவும் தவிர்க்கப் படுகின்றன.

**பயர்ஸ்டோன் ஒன்றுதான் சூபர் கம்-டிப்டு டயர்**




## 12. தந்தையும் மகளும்

பல்லக்கில் ஏற்றப்பட்ட சுமதிக்கு அரண்மனைக்குப் போய்ச் சேருகிற வரையில் பிரக்ஞை வரவில்லை. அரண்மனை அந்தப்புரத்துக்குக் கொண்டு போன பல்லக்கிலிருந்து சுமதியை மெல்ல இறக்கிக் கட்டிலில் படுக்க வைத்தார்கள். பிறகு சேடியர்கள் புடை சூழ மகாராணி வந்து சுமதியின் பக்கத்தில் அமர்ந்து அன்போடு தலையை வருடினாள். அரசனும் வந்து கட்டிலில் ஒரு பக்கத்தில் வந்து அமர்ந்தார். சேடி ஒருத்தி நறுமணங் கமழும் குளிர்ந்த நீரை அவள் முகத்தில் இலேசாகத் தெளித்தாள். சிறிது நேரத்தில் சுமதி கண் விழித்து எழுந்தாள்.

மறு விநாடி "பூபதி, பூபதி! திரும்பி விட்டீர்களா? எனக்கு மயக்கமா யிருக்கிறதே!" என்றாள்.

ராணி மெதுவாகச் சுமதியின் முகத்தைக் கைகளில் தாங்கி, "சுமதி, நீ அரண்மனைக்கு வந்து விட்டாய், அம்மா! இதோ பார், அம்மா!" என்றாள்.

சுமதி எல்லோரையும் ஒரு முறை பார்த்தாள். "பூபதி எங்கே? நான் இங்கே எப்படி வந்து சேர்ந்தேன்?" என்று திகைப்புடன் கேட்டாள்.

"சுமதி, நீ பசியோடு இருக்கிறாய். சாப்பிடு. பிறகு எல்லாம் பார்த்துக் கொள்ளலாம்" என்று கூறி மெதுவாக அவளை எழுப்பிக் கட்டிலில் உட்காரச் செய்தாள் மகாராணி.

* * *

அரண்மனையில் ஒரே உற்சாகம் குடி கொண்டிருந்தது. இரண்டு மாத காலமாய்க் கப்பற் கொள்ளைக்காரர்களிடம் சிக்கிக் காணாமற் போயிருந்த ராஜகுமாரி சுமதி தெய்வச் செயலாய்க் கடற் கரையில் கிடைத்தது பற்றி ராஜ குடும்பத்தினர் அனைவரும் கட்டுக்கடங்காத ஆனந்தத்தில் இருந்தனர்.

மகாராஜாவும் ராஜகுமாரி சுமதியும் சலவைக் கல் ஆசனத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

"அப்பா, கடற்கரையோடு பரிவாரங்களுடன் வந்து கொண்டிருந்த மந்திரி என்னைப் பார்த்துப் பல்லக்கில் வைத்துக் கொண்டு வராவிட்டால், நான் இறந்து போயிருப்பேன் என்றீர்கள், இல்லையா? அப்பா, உங்களுக்குப் பூபதி என்ற வீர வாலிபரைப் பற்றித் தெரியாது. அவர் உணவு ஏதேனும் தேடிக் கொணர்ந்து கொடுத்து என்னை நிச்சயம் காப்பாற்றி யிருப்பார். மந்திரி என்னை அவசரப்பட்டுப் பல்லக்கில் ஏற்றிக் கொண்டு வந்ததனால் பூபதியைப் பார்க்க முடியாமல் போய் விட்டது. ஐயோ! அவர் என்னை எங்கெல்லாம் தேடி யலைகிறாரோ? நான் அரண்மனைக்கு வந்து ஒரு வாரம் ஆகப் போகிறதே! இது வரையில் அவர் எங்கே சாப்பிட்டிருப்பார்! அப்பா, அந்த மகா தைரியசாலியான இளைஞர் மட்டும் நான் சிறை யிருந்த கப்பலுக்கு வந்து சேரவில்லையானால் என்னை நீங்கள் உயிரோடு பார்த்திருக்க முடியாது. அடேயப்பா! கப்பல் கொள்ளைக்காரர்களின் சதித்திட்டங்களுக்குச் சாமர்த்தியமாகத் தப்பி ஆழ் கடலில் என்னைப் படகில் ஏற்றிக் கொண்டு மலை மலையாக வந்து மோதிய அலைகளுக்குச் சிறிதும் அஞ்சாமல் துடுப்புப் போட்டாரே! அந்த முரடர்கள் எங்கள் படகைப் பார்த்து ஓயாமல் சுட்டனர். நான் மயக்கமடைந்தேன். விடிய விடியப் படகைச் செலுத்திக் கரை சேர்த்தார்......!"

"சுமதி, அந்த வீரனைத் தேடிக் கொண்டு வரும்படி அரண்மனைக் காவலர்களுக்குக் கட்டளை யிட்டிருக்கிறேன்."

"அப்பா......"

"சுமதி, ஏன் தயங்குகிறாய்? நீ என் ஏக புத்திரி. உன்னுடைய விருப்பம் எதுவோ அதுவே என் விருப்பமும். என்ன கேட்க வேண்டுமோ அதைக் கேள்!"

"அப்பா, என்னைப் பேராபத்திலிருந்து தப்புவித்துக் காப்பாற்றித் தீர நெஞ்சத்

# திருமணம்

திருநெல்வேலி டவுன் மிராசுதாரரும் குத்தகைதாரருமான ஸ்ரீ டி. வி. எக்ஞநாராயணய்யர் தம்பதிகள், தங்கள் குமாரி சௌ. ராஜலெக்ஷ்மிக்கும், கல்லிடைக்குறிச்சி பாங்கர் ஸ்ரீ சி.வி. ஆர்எம். கிருஷ்ணய்யரவர்கள் குமாரர் சிரஞ்சீவி மஹாதேவன், B. Com-க்கும் சென்ற 7-5-54ல் தெப்பக்குளத் தெருவில் தங்கள் கிரஹத்தில் நடத்திய விவாஹத்திற்கு சென்னை சிம்ஸன் கம்பெனி சேர்மென் ஸ்ரீ அனந்தராமகிருஷ்ணன் அவர்கள், பம்பாய் பிரபல டாக்டர் எஸ். எஸ். கிருஷ்ணன் அவர்கள் மற்றும் உறவினர்கள் சிநேகிதர்கள் எல்லோரும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்து தங்களை கௌரவித்ததற்கு நன்றி செலுத்திக் கொள்கிறார்கள். அன்று இரவு கச்சேரி செய்து ஆனந்திக்கச் செய்த சங்கீத வித்வான்கள் ஸ்ரீ அரியக்குடி ராமானுஜ அய்யங்கார், ஸ்ரீ லால்குடி ஜெயராமன், ஸ்ரீ மூர்த்தி ஆகியோர்களுக்கும் தங்கள் நன்றியைத் தெரிவிக்கிறார்கள்.

வாழ்க, ராஜலெக்ஷ்மி—மஹாதேவன் !



துடன் நடுக் கடலிலிருந்து கரை சேர்த்த வீரனுக்கு நல்ல மதிப்புக் கொடுத்து வரவேற்பீர்களா, அப்பா ?'' என்றாள்.

"சுமதி, அவசியம் ராஜ மரியாதைகளுடன் வரவேற்பேன். உன்னைக் காப்பாற்றிய அவன் உன்னோடு நேரே அரண்மனைக்கு வந்திருந்தால் சௌகரியமாயிருந்திருக்கும். அது இருக்கட்டும், சுமதி! உனக்கு ஏன் இச் சந்தேகம் என்மீது உதித்தது ?''

"அப்பா, அந்த வாலிபர் பூபதி...பரம ஏழை ; அரச குடும்பத்தைச் சேர்ந்தவரல்ல ; அநாதை...! ஆகையினால் அரண்மனையில் அவரை வரவேற்க நீங்கள் தயாரா யிருப்பீர்களா என்ற சந்தேகம் உண்டாகி விட்டது.''

"சுமதி, அவன் உன்னை ஆபத்தில் காப்பாற்றியவன். மேலும் அவனை வீரன் என்கிறாய். வீரன் எந்தக் குலத்தைச் சேர்ந்தவனாயினும் அவன் மரியாதைக்கு உரியவன். வீரனுக்குரிய மரியாதையோடு அவனை வரவேற்கலாம்.''

சுமதியும் அரசனும் மேற்கண்டவாறு பேசிக்கொண்டிருந்த போது ஒரு சேவகன் அங்கே வந்து, "மகாராஜா, உங்களிடம் ஒரு சமாசாரம் சொல்ல வேண்டும்......!'' என்று தயங்கினான்.

"என்ன சமாசாரம், சீக்கிரம் சொல்!'' என்றார் மகாராஜா.

"நாலைந்து நாளைக்கு முன்னால் நமது அரண்மனை நந்தவனத்தில், ஒரு வாலிபன் நுழைந்தான். இளவரசியைப் பார்த்ததும் வெறி பிடித்தவன் மாதிரி பெயர் சொல்லி அழைத்து நெருங்கி வந்தான். அவனை அப்பொழுதே கைது செய்து வைத்திருக்கிறோம்'' என்றான் சேவகன்.

உடனே சுமதி பதைபதைத்துப் போய், "அப்பா, அவர் பூபதிதான். அவர் ஒரு முறை என்னிடம் சொன்னது நினைவுக்கு வருகிறது. 'சுமதி, நீ ராஜகுமாரி! உன்னை உன் அரண்மனையில் வந்து சந்திப்பதானால் மிகவும் சிரமம், இல்லையா ? காவலர்கள் சிறைச்சாலைக்கு அனுப்பி விடுவார்கள்' என்றார். அது சரியாகி விட்டதே, அப்பா ! சிறையில் அவர் சிரமப்படுகிறாரோ ! என்னைக் கடல் விபத்தில் காப்பாற்றிய வீரருக்கு நல்ல வரவேற்பு அப்பா !'' என்று கண்ணீருக்கிடையில் சொன்னாள்.

"சுமதி, பதறாதே. விசாரணைக்கு முன் குற்றவாளியை வைக்கும் பாதுகாப்புச் சிறையில் தான் பூபதி இருக்கிறான். அவனுக்கு இப்பொழுது ஒரு சிரமமும் இருக்காது. நான் இப்பொழுதே சிறை அதிகாரிக்குச் சொல்லி அனுப்பி விடுகிறேன். அவனுக்குச் சகல வசதிகளும் செய்து தருவார்கள். ராஜ மரியாதை நடக்கும் !''

"அப்பா, அவர் குற்றவாளிதானா ?''

"அரண்மனை நந்த வனத்தில் உத்தரவில்லாமல் பிரவேசித்தது தவறுதானே ? அதற்குத் தகுந்த காரணம் அவன் கூறி

விட்டால் விட்டு விடுவார்கள். நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே, அம்மா!'' என்று அன்போடு கூறினார் மகாராஜா; பிறகு சிறையதிகாரிக்கு உத்தரவு அனுப்பினார்.

பூபதி சிறையில் இருப்பதைக் கேட்ட சுமதிக்குச் சிறிதும் இருப்புக் கொள்ளவில்லை. அவள் உடல்தான் அங்கிருந்தது; அவளது உள்ளம் பூபதியைப் பார்க்கச் சிறைச் சாலைக்குச் சென்று விட்டது.

அன்று நடு நிசியில் பூபதி தூக்கம் பிடிக்காமல் சிறைச் சாலையில் ஏக்கத்துடன் உட்கார்ந்திருந்தான். அன்று காலையிலிருந்து தனக்கு உபசாரங்கள் பலமாக நடப்பதையும், சுகமான சாப்பாடும், ஸ்நான வசதிகளும் செய்யப்பட்டிருப்பதையும் நினைத்து, அவன் அதிசயப் பட்டான்.

அச்சமயம் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. சிறையின் உட்புறமாக இருந்த சின்னக் கதவு 'கிறீச்' சென்று திறந்து கொண்டது. மறு நிமிஷம் சுமதி அங்கு தோன்றினாள்.

"சுமதி! ராஜகுமாரி!'' என்றான் பூபதி அதிசயந் தாங்காமல்.

சுமதி தன் உதட்டில் விரல் வைத்து, "பேசாதீர்கள்! வெளியில் காவலர்கள் இருக்கிறார்கள்...!'' என்றாள்.

பூபதி மெதுவான குரலில் பேசினான்: "ராஜகுமாரி, காவலர்கள் அயர்ந்து தூங்குகிறார்கள். அவர்களைப்பற்றிக் கவலையில்லை. நான் சிறையிலிருந்தாலும் நீ எதிர்பாராவிதமாக உன் பெற்றோர்களிடம் வந்து சேர்ந்து விட்டாய். எனக்கு அது போதும். இனி எனக்கு என்ன தண்டனை கிடைத்தாலும் கவலையில்லை. ராஜகுமாரி, கமல மலர் போன்ற உன் முகத்தைக் காணாமல் தண்டனைக்குள்ளாகி, தூர தேசத்தில் சிறை வைக்கப்பட்டு விடுவேனோ? என்ன நேருமோ என்றெல்லாம் மனம் வருந்தினேன். இனி அத்தகைய வேதனையில்லை. ராஜகுமாரி!''

"...பூபதி, என்னைச் சுமதி யென்றே அழையுங்கள்! நான் மன்னன் மகளானாலும் என் மனசுக்கு இனியவரான உங்களுக்கு...சுமதிதான்! என் உயிரைக் காப்பாற்றிய உங்களுக்கு நேரும் எந்தக் கதியிலும் பங்கு எனக்கும் உண்டு. அப்பாவிடம் எல்லா விவரமும் சொன்னேன். விரைவில் விசாரணை நடக்கும், அப்பொழுது உண்மையைத் தைரியமாக எடுத்துச் சொல்லுங்கள்'' என்றாள்.

"சுமதி, அப்படியே சொல்லுவேன். என்னிடம் நீ வைத்திருக்கும் அன்பு ஒன்றே போதும். இந்த அநாதை வாலிபனுக்காக ஒரு ராஜகுமாரி எதையும் செய்யச் சித்தமாயிருக்கிறாள்! ஆகா! இது எப்பேர்ப்பட்ட பாக்கியம்'' என்று கூறிப் பூபதி மேனி புளகமுறப் பரவசமானான்.

சுமதியும் தன்னை மறந்த ஆனந்த நிலையில் இருந்தாள்.

இச்சமயம் திடீரென்று சிறைச்சாலையில் பெரிய தீவர்த்தியின் வெளிச்சம் தெரிந்தது. மறு நிமிஷம் 'கடாங்' என்று ஓசையுடன் சிறைக் கதவுகள் திறந்து கொண்டன. சிறையதிகாரி காவலர்கள் சிலருடன் உள்ளே வந்தார். பூபதியும் சுமதியும் அவர்களைப் பார்த்ததும் திகைத்தனர்.

சிறையதிகாரி, சுமதியைப் பார்த்து, "ராஜகுமாரி, சிறைச்சாலைக்குள் இந்த அகாலத்தில் உங்களுக்கு நுழைய அரசரின் உத்தரவு இருக்கிறதா?" என்றார்.

சுமதி பதில் பேசாமல் விழித்தாள். உடனே சமாளித்துக் கொண்டு, "ஐயா, என்னிடம் அம்மாதிரி உத்தரவு எதுவும் இல்லை. நான் சட்டப்படி குற்றவாளி. ராஜகுமாரியாகிய என்னைக் கைது செய்யும் அதிகாரம் உமக்கு வழங்கப் பட்டிருந்தால் செய்து கொள்ளலாம்...!" என்றாள்.

"ராஜகுமாரி, உம்மைக் கைது செய்கிறேன். இதோ அரசரின் விசேஷ உத்தரவு!" என்று கூறிச் சிறையதிகாரி உறையிலிருந்து ஒரு கடிதத்தைக் காட்டினார். சுமதி அதைப்பார்த்துத் திகைத்தாள்.

உடனே, சிறையதிகாரியும் காவலர்களும் அங்கிருந்து வெளியேறினர். சிறைக் கதவுகள் மீண்டும் 'கடாங்' என்ற ஓசையுடன் சாத்தப்பட்டன. பயங்கர மௌனம் நிலவியது. பூபதியும் சுமதியும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். அவர்கள் முகங்கள் மலர்ந்தன.

(தொடரும்)

# இந்தியாவின் முதல் சூபர் கான்ஸ்டலேஷன்






ஏர் இந்தியா இண்டர் நாஷனல் ஸ்தாபனம் "எம்ப்ரெஸ் நூர்ஜஹான்" என்று பெயர் கொண்ட ஓர் புதிய சூபர் கான்ஸ்டலேஷன் விமானத்தை நீண்டதூர உல்லாச பிரயாணத்திற்காக வாங்கியிருக்கிறது. இத்தகைய விமானம் இந்தியாவிற்கு முற்றிலும் புதியது. தற்போது இந்த விமானம் ஆம்ஸ்டர்டாம் நகரில் வேலைகள் பூர்த்தியடையும் தறுவாயில் இருக்கிறது. ஏர் இந்தியா இண்டர் நாஷனல் ஸ்தாபனத்தின் ஆறாம் ஆண்டு விழா கொண்டாடும் சமயம் எம்ப்ரெஸ் நூர்ஜஹான் இந்தியாவுக்கு வருகிறது. இந்த விமானத்தில் தாராளமான இட வசதியும் பிரயாணக் களைப்பு ஏற்படா வண்ணம் வேண்டிய சகல சௌகரியங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த விமானம் மணிக்கு 375 மைல் வேகத்தில் செல்கிறது. இந்த விமானத்தின் முக்கிய அம்சமாகக் குறிப்பிடத்தக்கது அதில் நவீனமாக அமைக்கப் பட்டிருக்கும் உல்லாசப் பொழுது போக்கு அறை. மேலும் நீண்ட தூரப் பிரயாணத்தின் பொழுது பிரயாணிகளின் உணவு முதலிய வசதிகளை முக்கியமாகக் கவனிப்பதற்காக விசேஷ முறையில் ஏற்பாடுகள் செய்யப் பட்டிருப்பதுடன் 135 பேர்களுக்கு முழுச் சாப்பாடு போட வேண்டிய உணவுப் பொருள்களும் மற்றும் இதர சாமான்கள் யாவும் கொண்டு செல்ல இடம் இருக்கிறது. இத்தகைய நவீன வசதிகளுடன் கூடிய "எம்ப்ரெஸ் நூர்ஜஹான்" என்ற சூபர் கான்ஸ்டலேஷன் விமானத்தில்பிரயாணம் செய்யும்போது ஒருவர் இந்திர விமானத்தில் பிரயாணம் செய்வது போலவே தோன்றும்.



# கலைவாணிக்கு ஒரு புது ஆபரணம்

**கர்நாடகம்**

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் கோயமுத்தூர் ஜில்லாவின் கலெக்டராக இருந்தவர் யார் என்பது யாருக்காவது நினைவிருக்கிறதா! 1905-ம் ஆண்டில் யார் சென்னை இராஜ்யத்தின் கவர்னர் பதவியை வகித்தவர் என்று யாரேனும் சட்டெனச் சொல்ல முடியுமா! ஏன்! இந்தியாவின் இராஜப் பிரதிநிதிகளாகவும் கவர்னர்—ஜெனரல்களாகவும் இருந்தவர்களுடைய பெயர்களையே நமக்கு நினைவிருப்பதில்லை. சர்க்கார் காரியாலயங்களில் கட்டிப் போட்டுக் கிடக்கும் பழைய தஸ்தவேஜுகளிலே தான் அவர்களுடைய பெயர்கள் இருக்கின்றன. இன்னும் எத்தனை எத்தனையோ பெரிய பதவிகளை வகித்தவர்களும் மிகப் பெரிய தனவந்தர்களும் இந்நாட்டில் இருந்துதான் இருக்கிறார்கள். அவர்களுடைய பெயர்களை நினைவு வைத்துக்கொள்வோர் மிகச் சிலர். ஆனால் மாயூரத்தில் அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் ஜில்லா முனிசிபு உத்தியோகம் பார்த்த ஒருவருடைய பெயரை இன்று தமிழ் நாட்டில் மிகப் பலர் அறிந்திருக்கிறோம். அவருடைய பெயரை அடிக்கடி ஆயிரக்கணக்கான மக்கள் ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியமும் நேரிடுகிறது. அந்தப் பாக்கியம் செய்தவர் ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை என்பவர். மாயூரம் ஜில்லா முனிசிப் உத்தியோகம் பார்த்ததற்காக அவருடைய பெயர் இன்று விளங்கவில்லை. சென்ற நூறு வருஷங்களில் தமிழ் நாட்டில் ஜில்லா முனிசிப் உத்தியோகம் பார்த்தவர்கள் ஆயிரக் கணக்கில் இருந்திருப்பார்கள். அவர்களைப் பற்றியெல்லாம் இன்று கவனிப்போர் யார்! ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை சில அருமையான கீர்த்தனங்களின் சாஹித்யங்களை இயற்றினார். அவற்றில் ஒரு நாலைந்து கிருதிகள் பிரபலமாயின. இன்றைக்கும் நம் சங்கீத வித்வான்களில் சிலர் அவற்றைப் பாடுகிறார்கள். ஆகையினாலேயே ஸ்ரீ வேதநாயகம் பிள்ளையின் பெயர் இன்றைக்கும் பிரபலமாக இருக்கிறது. சங்கீத வித்வான் கச்சேரிகளில் அந்தக் கிருதிகளில் ஒன்றின் பல்லவியை எடுத்தவுடன், "ஆகா! இது வேதநாயகம் பிள்ளையின் கீர்த்தனம் அல்லவோ!" என்று சங்கீத ரஸிகர்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

ஒரு சில கீர்த்தனங்களை இயற்றிய சாஹித்ய கர்த்தாக்களை அமரர்களாகி விடுகிறார்கள். ஒருவர் பல கிருதிகள் இயற்றியிருக்கலாம். அவற்றில் ஒரே ஒரு கீர்த்தனம் சங்கீத அம்சத்திலும் சாஹித்ய அம்சத்திலும் ஜீவசக்தியுள்ளதாக அமைந்து அவர் காலத்திலும் பிற்காலத்திலும் வித்வான்களால் பாடப்பட்டு வந்தால், அந்த சாஹித்ய கர்த்தா சிரஞ்சீவி ஆகி விடுகிறார்!

அப்படியானால், தியாகராஜர், தீக்ஷிதர், ஶ்யாமாசாஸ்திரிகள் ஆகியோர் 'மும்மூர்த்திகள்' என்று போற்றப்படுவதில் வியப்பில்லை அல்லவா!


பேராசிரியர் சீனிவாசன்

நம்நாட்டு 'வாக்கேயக்காரர்'களில் மேற்கூறியவர்கள் மும்மூர்த்திகள். இவர்கள் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் என்று சொல்லத்தக்க மும்மூர்த்திகள் என்றால், இந்திரன், சந்திரன், சூரியன், வருணன், வாயு, முதலிய தேவர்கள் பலரும் தொடர்ந்து வரத்தானே வேண்டும்! அம்மாதிரி தென்னாட்டில் பல 'வாக்கேயக்காரர்'கள் தோன்றிச் சங்கீத-சாஹித்ய வானில் சுடர் ஒளி வீசிக் கொண்டு வருகிறார்கள். சிலர் பத்துப் பதினைந்து கீர்த்தனங்களினாலும், இன்னும் சிலர் இரண்டொரு ஜீவ சக்தியுள்ள கீர்த்தனங்களினாலும் அமரத்துவம் பெற்று விளங்குகிறார்கள்.

சாஹித்யம் இயற்ற முன்வருவோரெல்லாரும் இவ்வாறு அமரத்துவம் பெறும் ஆசையுடன் அந்தப் பணியில் ஈடுபடுவதில்லை. சங்கீத தேவதைக்குத் தொண்டு செய்ய வேண்டுமென்னும் ஆர்வம் அவர்களுடைய இதயத்தில் பொங்கிப் பெருகிச் சாஹித்யங்களாகப் பரிணமிக்கின்றன.

அந்தச் சாஹித்யங்கள் ஜீவசக்தி உள்ளனவா! நீடித்து நிலைத்து நின்று அமரத்துவம் பெறக் கூடியனவா என்று கூறுதல் எளிய காரியமன்று.

ஆயினும் ஒரு வாக்கேயக்காரரிடம் இன்னின்ன அம்சங்களும், தகுதிகளும் இருந்தால், அவருடைய சாஹித்யங்கள் பிரபலமடைந்து ஜீவசக்தியுடன் விளங்கும் என்று சொல்லலாம்.

சாஹித்யம் செய்ய முன் வருகிறவருக்கு முதன்மையாகச் சங்கீதக் கலையில் ஆர்வம் இருக்க வேண்டும்; சங்கீத சாஸ்திரத்தின் நுட்பங்களை அவர் நன்கு கற்று அறிந்திருக்க வேண்டும்; அவரே ஓரளவேனும் பாடத் தெரிந்திருக்க வேண்டும்; நல்ல சங்கீத ரஸிகராகவும் இருக்க வேண்டும்; கல்வியறிவு பெற்ற 'சொல்லின் செல்வ'ராக இருக்க வேண்டும்; இவ்வளவுக்கும் மேலாக, கற்பனாசக்தி உடையவராகவும் இருக்க வேண்டும்.

ஒரு சங்கீத வித்வானுக்குச் சங்கீதக் கலையில் எவ்வளவு மனோதர்ம வேகம் இருக்க வேண்டுமென்று சொல்கிறோமோ, அதைக் காட்டிலும் அதிகமாகச் சாஹித்ய கர்த்தாவிடம் இருக்க வேண்டும். அத்துடன் சொற்களுக்கு உயிரூட்டி உணர்ச்சி மயமாகச் செய்யக் கூடிய ஆற்றலும் இருக்க வேண்டும்.

இவ்வளவு தகுதிகளும் உடையவராக ஒருவர் இருந்தாலும் சாஹித்யம் செய்வதற்கு இயற்கையில் எழும் ஆர்வம் உள்ளத்தில் பொங்க வேண்டும்.

"கலாதாஸர்" என்ற புனைபெயர் வாய்ந்த பேராசிரியர் ஆர். சீனிவாசன் மேற்கூறிய அத்தனை தகுதிகளும் வாய்ந்தவர் என்பதை அவரைத் தெரிந்தவர்கள் அனைவரும் அறிந்திருப்பார்கள். ஆகையால் அப்பேராசிரியர் சாஹித்



சென்ற மாதத்தில் பிரம்பூரில் தேசிய ஊக்கமுள்ள இளைஞர்கள் சிலருடைய பெரு முயற்சியினால் 'தேசிய வாலிபர் காங்கிரஸ்' அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தாபனத்தின் முக்கிய நிர்வாகிகளையும் அவர்களுக்குத் துணை செய்யும் நண்பர்களையும் இப்படத்தில் காணலாம்.

யம் இயற்றிச் சங்கீத தெய்வத்துக்குப் பணிசெய்ய முன் வந்ததைக் குறித்து மகிழ்வார்கள். அவர் ஏதோ ஆத்மார்த்தமாக, தம்முடைய சங்கீத ஆர்வத்தின் வெளி உருவமாக, இயற்றிய சாஹித்யங்களைப் புத்தக ரூபத்தில் வெளியிட்டு அவருடைய குமாரி ஸ்ரீமதி கமலா கிருஷ்ண மூர்த்தி சங்கீத உலகத்துக்குச் செய்த தொண்டைப் பெரிதும் பாராட்டுவார்கள்.

பேராசிரியர் ஆர். சீனிவாசன் நீண்ட காலம் திருவனந்தபுரம் கலாசாலையில் பேராசிரியராகவும் தலைமைப் பேராசிரியராகவும் இருந்து வந்தார். அக் நாளில் அவருடைய இல்லம் ஒரு சங்கீதக் கோயிலாக இருந்து வந்தது. தமிழ் நாட்டிலிருந்து திருவனந்தபுரத்துக்குப் போகும் சங்கீத வித்வான்களுக் கெல்லாம் ஜாகை வசதியைப் பற்றிக் கவலை யில்லாம லிருந்தது. இதனால் பேராசிரியர் சீனிவாசனின் சங்கீத ஞானத்தையும் சங்கீத ரஸிகத் தன்மையையும் பற்றித் தமிழ் நாட்டுச் சங்கீத வித்வான்கள் எல்லாருக்கும் நன்கு தெரிந்திருந்தது.

ஆனால் பேராசிரியர் சீனிவாசன் கர்நாடக சங்கீதத்தின் பெரிய 'வாக்கேயக்காரர்'களில் ஒருவர் என்பது யாருக்கும் தெரிந்திருக்க முடியாது. 'கலாதாஸர்' என்ற புனை பெயரில் தமது சங்கீத—சாஹித்யப் புலமையையும் கற்பனா சக்தியையும் மறைத்துவைத்திருக்கிறார் என்பதும்தெரிந்திராது.

"கலாதாஸரின் சங்கீதக் கிருதிகள்" என்னும் புத்தகத்தின் மூலம் பேராசிரியரின் ஆற்றலைப் பற்றிய முழு உண்மையை அறிந்து கொள்ளும் வாய்ப்பு இப்போது கிடைத்திருக்கிறது.

பேராசிரியர் இந் நூலின் முன்னுரையில் கர்நாடக சங்கீதத்துக்கு ஓர் அருமையான விளக்கம் கொடுத் திருக்கிறார். கர்நாடக சங்கீதத்தின் இலட்சண இலட்சியங்கள், ராக பத்ததி, லய பத்ததி, புது ராகங்களின் அமைப்பு ஆகியவற்றைக் குறித்து எல்லாரும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய நடையில் எழுதி யிருக்கிறார். இந்த முன்னுரையைச் சங்கீதக் கலை பயிலும் மாணவ—மாணவிகள் அனைவருக்கும் பாடமாக வைத்தால், மிக்க பயன் உண்டாகும்.

கலாதாஸரின் சாஹித்யங்களில் மொத்தம் ஐம்பத் தொன்று இந்நூலில் இருக்கின்றன. எல்லாம் ஸ்வர—சாஹித்ய வடிவத்தில் அச்சிடப் பட்டிருக்கின்றன. ஐம்பத்தொரு உருப்படிகளில் முப்பத்தொன்பது கீர்த்தனைகள்; ஒன்று, ராக மாலிகை உருப்படி; நான்கு பதங்கள்; ஆறு பஜனைக் கிருதிகள்; ஒன்று மங்களம்.

கடைசியில், சுருட்டி ராகத்தில் 'மங்களம்' அச்சிடப்பட்டிருப்பதால், 'கலாதாஸ'ரின் சாஹித்யங்களுக்கே 'மங்களம் பாடி விட்ட'தாகக் கொள்வதற்கில்லை. ஏனெனில், இந்தப் புத்தகம் இவருடைய சாஹித்யங்களின் முதற் பாகம் மட்டுந்தான் என்று அறிகிறோம். இன்னும் பல பாகங்கள் வெளியாகு மென்று எதிர்பார்க்கலாம். ஒவ்வொரு பாகத்தின் முடிவிலும் ஒரு மங்களம் அச்சிடப் படுவது முறையாகும்.

சாஹித்யங்களில் இனிய தமிழ்ச் சொற்கள் உணர்ச்சி பாவத்துடன் சேர்ந்து கொஞ்சி விளையாடுகின்றன. உதாரணத்துக்கு, இதைப் பாருங்கள் :—

"அஞ்சுவயதினில் கொஞ்சி விளையாடி
வஞ்சகமா யெந்தன் சிந்தை கவர்ந்தாயே
தஞ்சம் தஞ்சமென்றுன் குஞ்சிதபாதத்தில்
கெஞ்சினேன்நெஞ்சின் சஞ்சலம்தீர்ப்பாயே !"

புத்தகத்தில் அச்சிட்டிருப்பதைப் படித்து ஒரு கீர்த்தனத்தின் சாஹித்யச் சிறப்பைக் குறித்து ஒருவாறு நிர்மாணிக்கலாம். ஆனால் அதன் சங்கீத அம்சத்தைக் குறித்து அவ்விதம் முடிவு செய்ய முடியாது. ஹார்மோனியத்தில் வாசிக்கப்படும் ஸ்வரங்களுக்கே உயிர் இல்லை என்றால், புத்தகத்

தில் அச்சிட்டிருக்கும் ஸ்வரங்களில் ஜீவ களை எப்படி யிருக்கும்! சாஹித்யத்தில் அடங்கியுள்ள ராகபாவம், சங்கதிகள்-கமகங்களின் சிறப்பு ஆகிய வற்றை எவ்வாறு அறிந்து அநுபவிக்க முடியும்!

சாஹித்யங்களைத் தக்கவர்கள் பாடிக் காட்டினால்தான் அவற்றின் சங்கீதச் சிறப்பை நன்கு அறியலாம்.

இதற்கு ஒரு வாய்ப்பைப் பேராசிரியர் ஆர். சீனிவாசன் அவர்களுடைய நண்பர்கள் ஏற்படுத்திக் கொடுத்தார்கள்.

அடையாறு கலா க்ஷேத்திரத்தில் சங்கீத கலாநிதி ஸ்ரீ மூசிரி சுப்பிரமண்ய ஐயர் அவர்களின் தலைமையில் "கலா தாஸரின் சங்கீதக் கிருதிகள்" என்னும் நூலின் வெளியீட்டு விழா நடந்தது. சங்கீத கலா நிதி ஸ்ரீ வாஸுதேவாச்சாரியார், ஸ்ரீ பாபநாசம் சிவன், ஸ்ரீ ருக்மணி தேவி ஆகியவர்கள் பேசி விழாவைச் சிறப்பித்தார்கள். இவ்வளவுக்கும் பின்னர், பேராசிரியரின் குமாரி ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்தி கலா தாஸர் கீர்த்தனங்கள் சிலவற்றைப் பக்க வாத்தியங்களுடன் கச்சேரியில் பாடிக் காட்டினார். ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்தி தமது இனிமையான குரலில் ராக பாவம் ததும்பும்படி கீர்த்தனங்களைப் போஷித்துப் பாடியபோது, கீர்த்தனங்களின் சிறப்பு பரிபூரணமாக வெளியாயிற்று.

மகான்களாகிற வாக்கேயக்காரர்கள் பழமையாக வழங்கிப் பண்பட்ட ராகங்களில் கீர்த்தனங்கள் இயற்றியதோடு சில புதிய ராகங்களைத் தாங்களே சிருஷ்டி செய்து பிரசாரப்படுத்தி யிருக்கிறார்கள். பட்டணம் சுப்பிரமண்ய ஐயர் அவர்கள் 'கதன குதூகலம்' என்னும் புது ராகத்தை அளித்தார். காயகசிகாமணி முத்தையா பாகவதர் சங்கீதக் கலைக்குப் பல தொண்டுகள் செய்ததோடல்லாமல் 'வலஜி' என்னும் புது ராகத்தில் கீர்த்தனம் செய்து புகழ் பெற்றார்.

பேராசிரியர் ஆர். சீனிவாசன் அவர்களும் 'பிரமோதினி' என்னும் புது ராகத்தைச் சிருஷ்டித்து, 'ஜோதியே!' என்று தொடங்கும் கீர்த்தனத்தின் மூலமாக அதற்கு வடிவம் அளித்திருக்கிறார். இந்த அபூர்வப் புது ராக கீர்த்தனையையும் ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்தி திறம்படப் பாடிச் சபையில் கூடி யிருந்த வித்வான்கள்—ரஸிகர்களின் நன்மதிப்பைப் பெற்றார்.

கலா தாஸரின் கிருதிகள் வருங்காலத்தில் பிரபல சங்கீத வித்வான்களாலும் பாடப்பெற்று மேலும் மேலும் பிரசாரமாகிப் புகழ் அடையும் என்று எதிர் பார்க்கலாம்.

ஸ்ரீமதி கமலா கிருஷ்ணமூர்த்தி காலஞ் சென்ற தம் அருமைத் தாயாரின் ஞாபகார்த்தமாக இந்த அருமையான சாஹித்யங்களைப் புத்தக வடிவில் வெளியிட்டுச் சங்கீதக் கலைக்குச் சிறந்த சேவை புரிந்திருக்கிறார்.

கலா தாஸரின் சங்கீதக் கிருதிகள். இயற்றியவர்: பேராசிரியர் ஆர். சீனிவாசன்; கிடைக்குமிடம் :- நெம்பர் 2, ரெங்காச்சாரி ரோட், மயிலாப்பூர், சென்னை; விலை : ரூ. 3—0—0.

## மறையாத புகழ்

"செய்தாரில் பெரியர் சிதையாதவர்" என்பது தமிழ் முதுமொழி. இதன் உண்மையை ஐம்பதாண்டுகளுக்கு முன் பார்ஸி வர்த்தகப் பிரமுகர் ஒருவர் நன்கு உணர்ந்திருந்தார். அதையே தமது புதல்வர்களுக்குப் பின்வருமாறு சொல்லி விட்டுப் போனார்.

"நம்முடைய குடும்ப கௌரவத்தை உங்களால் வளர்க்க முடியவில்லை என்றால், இருப்பதையாவது போற்றி வாருங்கள். நான் செய்துள்ள காரியங்களை இன்னும் அபிவிருத்தி செய்ய இயலவில்லை எனில், இருப்பதையாவது காப்பாற்றி வாருங்கள்" என்று கூறினார்.



அப்படிக் கூறியவர் யார்! எஃகுத் தொழில் மன்னர் என்றும், கொடை வள்ளல் என்றும் பெயரும் புகழும் பெற்ற ஜெம்ஷெட்ஜி நஸர்வான்ஜி டாட்டாதான்.

ஜெம்ஷெட்ஜி டாட்டா, அந் நாட்களிலேயே நமது கல்வி முறையின் குறையைத் தீவிரமாக உணர்ந்தார். நமது கல்லூரிகள் குமாஸ்தாக்களை உற்பத்தி செய்யும் தொழிற் சாலைகளாக இருக்கின்றனவே தவிர அறிவையும் ஆராய்ச்சிப் புலமையும் வளர்க்கும் கலைக் கழகங்களாக இல்லையே என்பதைக் கண்டார். எனவே ஆண்டு தோறும் புத்திசாலி இளைஞர்களாகப் பார்த்து இங்கிலாந்துக்குக் கல்வி பயின்று வரத் தம் சொந்தச் செலவில் அனுப்பிவைத்தார். அது தக்க பலனை அளித்ததைக் கண்டு மகிழ்ந்தார். இவரிடம் ஆதரவு பெற்றுச் சென்றவர்கள் பெரிய விஞ்ஞானிகளாவும், ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்களாகவும் திரும்பி வந்தார்கள்.

இதைப் பார்த்தவுடன், மேல் நாட்டுக்குப் பணத்தைச் செலவழித்து அனுப்புவதை விட நம் நாட்டிலேயே ஒரு பெரிய அறிவுக் கூடம், ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்துவது சாலச் சிறந்தது என்ற எண்ணங் கொண்டு முயன்றார்.

ஆனால் அதற்குள் இறைவன் திருவடியைச் சேர்ந்து விட்டார். ஆயினும் அவருடைய புதல்வர்கள் தங்கள் அருமைத் தந்தையின் விருப்பத்தை நிறைவேற்றி வைத்தனர். பங்களூரில் 'இண்டியன் இன்ஸ்டிடியூட் ஆப் ஸைன்ஸ்' என்ற ஆராய்ச்சிக் கூடத்தை நிலைநாட்டினார்கள்.

பாரத நாட்டுக்கு அருந் தொண்டு புரிந்த ஜெம்ஷெட்ஜியின் பூத உடல் மறைந்து இன்றைக்கு ஐம்பதாண்டுகள் ஆகின்றன. ஆயினும் அவர் புகழ் என்றென்றும் நிலைத்து நிற்கும்!

# சொப்பன வாழ்வு

—ராமப்ரியா—

நாராயணன் வீட்டுக்கு வரும்பொழுதே அவன் மனம் ஒரு நிலையில் இல்லாமல் தத்தளித்துக் கொண்டிருந்தது. வழக்கம்போல் குஷியாக இல்லை. வாசற் கதவை மெல்லத் தட்டும்போதே தானாகத் திறந்து கொண்டது. "வெறுமனே சாத்தி வைத்திருக்கிறாள் போலே இருக்கிறது!" என்று தனக்குள் சொல்லியவாறே உள்ளே நுழைந்தான் நாராயணன்.

முன் பக்கம் அவன் கண்கள் சாரதாவைத் தேடின. ஒருவரும் இல்லாததால் நேரே பூஜை அறைப் பக்கம் ஓசைப் படாமல் போனான்.

பூஜை உள்ளில் பஞ்சுத் திரிவிளக்கு சுடர் விட்டு எரிந்து கொண்டிருந்தது. ஊதுவத்தியின் வீடெங்கும் கம்மென்று பரவியது. கருங்கல் சதுக்கத்திலே பளிச்சென்று கோலமிட்ட இடத்திலே குத்து விளக்கு எரிந்து கொண்டிருந்ததும், அதன் எதிரே பதுமைபோல் கண்ணை மூடிக்கொண்டு கைகளைக் கூப்பிய வண்ணம் சாரதா நின்று கொண்டிருந்ததும் கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது.



மற்ற சமயமாயிருந்தால் நாராயணனும் தன்னை மறந்து பார்த்துக் கொண்டிருப்பான். சாரதாவை வம்புக்கிழுத்து மகிழ்வான். இப்பொழுது அவனுக்கு எதைப் பார்த்தாலும் கோபமும் வெறுப்பும் ஏற்பட்டது. "இதில் ஒன்றும் குறைச்சல் இல்லை!' என்று முணுமுணுத்தவாறே சப்தம் செய்யாமல் முன் பக்கம் போய் நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு தான் வந்ததை அறிவிக்கும் பொருட்டு மெதுவாகக் கனைத்தான்.

பூஜை உள்ளுக்குள்ளிருந்த சாரதாவுக்கு நாராயணன் குரல் கேட்கவே சட்டென்று அவன் இருக்குமிடம் வந்தாள்.

'என்ன! அதற்குள் வந்து விட்டீர்களா! துரை வீட்டுக்குப் போகப் போகிறேன் என்றீர்களே! போகவில்லையா! நீங்களும் வர நாழியாகும் என்று சொன்னீர்களே என்று என் பாட்டுக்குத் தை வெள்ளிக்கிழமை யாயிற்றே, சகஸ்ரநாமம் படிக்கலாமென்று படித்துக் கொண்டிருந்தேன். நீங்கள் வந்ததே தெரியவில்லை!" என்று மூச்சு விடாமல் சொல்லி முடித்தாள்.

நாராயணன் பதிலே பேசவில்லை. சாரதா ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்து, "என்னவோ பேசவே மாட்டேனென்கிறீர்களே! துரை வீட்டுக்கு நீங்கள் போகவில்லையா! நானும் வனஜாவைப் பார்த்து நாளாகிவிட்டது. ஒரு நாள் போகணும்!" என்றாள்.

"துரை வீட்டுக்குப் போய் விட்டுத்தான் வருகிறேன். வனஜாவும் துரையும் சினிமாவுக்குக் கிளம்பினார்கள். நான் வந்து விட்டேன். சரி, இங்கே ஏதாவது டிபன் உண்டா இல்லையா!" என்று சற்றுக் காரமாகவே கேட்டான்.

"நான் இன்றைக்கு இங்கே டிபன் ஒன்றும் பண்ணவில்லை. தம்பி வீட்டுக்குப் போயிருக்கிறீர்கள். டிபன் சாப்பிடாமலா வருவீர்கள் என்று இருந்து விட்டேன். நான் எனக்காக ஒன்றும் செய்து கொள்ளவில்லை. இப்போ ஒரு நொடியில் உங்களுக்கு ஏதாவது செய்து தருகிறேன்!" என்று சொல்லிவிட்டுச் சாரதா சமையலறைப் பக்கம் சென்றாள்.

"வேண்டாம் வேண்டாம்! எனக்காக ஒன்றும் வேண்டாம். ஏன்! நான் இல்லாவிட்டால் உனக்காக ஏதாவது செய்யக்கூடாதோ! சாப்பாட்டில் கூடவா தரித்திரம்! இதெல்லாம் பிறவியிலேயே ஊறின தரித்திரப் புத்தி எங்கே போகும்! அங்கே துரை வீட்டில் வேலைக்காரி கூட ஒன்றரை வயிற்றுக்குச் சாப்பிடுகிறாள். அது வனஜாவின் பெருந்தன்மை. எல்லாம் அவரவர்கள் கொடுத்து வைத்தது போலத் தானே அமையும்!" என்று வெடுவெடு வார்த்தைகளைச் சரமாரியாகப் பொரிந்துவிட்டு விர்ரென்று வாசலில் போய்விட்டான்.

வழக்கத்துக்கு விரோதமான கணவனின் இந்த திடீர் கோபத்தைக் கண்டு சாரதா அப்படியே அயர்ந்து போய் நின்று விட்டாள்.

நாராயணன் நேராகத் தன் மனக் கவலைகளையெல்லாம் ஒரு மாதிரியாக மறப்பதற்கு முயல வேண்டிக் கடற்கரைக்குச் சென்று மணலில் விச்ராந்தியாக உட்கார்ந்து கொண்டு ஏதேதோ நினைவுகளில் மூழ்கினான்.

நாராயணனுக்கு, துரை ஒரே தம்பிதான். சொற்ப வருவாயுள்ள குடும்பமானாலும் சந்தோஷமாகக் குடும்பம் நடத்திக் கொண்டிருந்தாள் நாராயணனின் தாய். காமாக்ஷி அம்மாள் தகப்பனில்லாத குறை தெரியாதபடி இரு பிள்ளைகளையும் வளர்த்து வந்தாள். தன்னைப்போலவே சுமாரான குடும்பத்திலிருந்து சாரதாவை மூத்த பிள்ளைக்குக் கலியாணம் செய்து வைத்தாள். தனக்குப் பிறகு உண்மையான வாரிசு அவன் குடும்பத்துக்கு வந்துவிட்ட திருப்தியோடு பதினைந்து வயதான துரையையும் சாரதாவிடம் ஒப்படைத்து விட்டு, "சாரதா! துரை நாராயணனுக்கு மட்டும் தம்பி இல்லை. உனக்கும் அவன் தம்பி என்ற எண்ணத்துடனேயே பார்த்துக் கொள். நீ அப்படிச் செய்வாயென்ற நம்பிக்கையும் எனக்கு உண்டு. உன் வயிற்றில் ஒரு குழந்தை பிறந்து பார்க்கவில்லையே என்ற குறையைத் தவிர எனக்கு ஒரு குறையும் இல்லை!" என்று தன் அந்திய காலத்தில் சொல்லிவிட்டுக் கண்களை மூடிவிட்டாள்.

சாரதாவும் துரையைத் தன் தம்பியை விடப் பன்மடங்கு அதிகமாகவே நேசித்து வளர்த்தாள். அவர்களுடைய வாழ்க்கை வெகு ஆனந்தமாகச் சென்றது. சாரதா செட்டும் சிறுமாகக் குடித்தனம் செய்து இல்லையென்ற வார்த்தையே இல்லாமல் துரையைப் படிக்க வைப்பதில் ஆர்வம் காட்டினாள். துரை பி. ஏ. பாஸ் செய்தாகி விட்டது. நாராயணன் தன் மனைவி எல்லா விதத்திலும் தன் தாய் மாதிரியே கௌரவமாக வாழ்க்கையை நடத்துவதில் அலாதி ஆனந்தம் அடைந்தான். துரையும் "மன்னி! மன்னி!" என்று சாரதாவிடம் தேவதா விசுவாசம் வைத்திருந்தான். சாரதாவைக் கேட்காமல் ஒரு காரியம் செய்ய மாட்டான். துரைக்கு அநேக இடங்களிலிருந்து பெண் வர ஆரம்பித்தது.

"மன்னியின் இஷ்டப்படி தான் நான் செய்து கொள்வேன். எனக்கென்று ஒரு தனி அபிப்பிராயம் ஒரு போதும் கிடையாது. மன்னியின் அபிப்பிராயம் தான் என்னுடையதும்!" என்று ஒரே வார்த்தையாகச் சொல்லி விட்டான் துரை.

மயிலாப்பூர் வக்கீல் ராஜகோபாலன் தன் பெண் ஜாதகத்தை நாராயணனிடம் கொடுத்து விட்டு, "என் மாப்பிள்ளையை மேலே வக்கீலுக்குப் படிக்க வைக்கவோ, எவ்வளவு சீர் செனத்தி கேட்டாலும் செய்யவோ தயார்!" என்று சொன்னார். எல்லாரும் பெண் பார்க்கப் போனார்கள். பெண் வீட்டார் பெரிய பணக்காரர்களாக இருந்தார்கள். பெண் வனஜாவை எல்லாருக்கும் பிடித்துவிட்டது. ஆனால் வீட்டிற்கு வந்ததும் துரை சாரதாவிடம் தனியாக, "ஏன் மன்னி! அவர்கள் ரொம்ப செல்வவந்தர்களாக இருக்கிறார்களே! உனக்குச் சரியாக அவள் இருப்பாளா என்று எனக்குச் சந்



தேகமாக இருக்கிறது!'' என்று இழுத்தாற்போல் சொன்னான். சாரதா கலகலவென்று நகைத்த வாறே ''எனக்குச் சரியாக அவள் இருக்காவிட்டால் அவளுக்குச் சரியாக நான் இருந்து கொள்கிறேன். அதைப் பற்றி நீ கொஞ்சமேனும் கவலைப்படாதே! பெண் உனக்குப் பிடித்து விட்டது. அவனும் கிளி மாதிரி இருக்கிறான். மேற்கொண்டு ஒன்றும் தடை சொல்லாதே!'' என்று ஒரே வார்த்தையில் அடக்கி விட்டாள்.

கலியாணம் வெகு விமரிசையாக நடந்தது. வனஜாவும் புக்ககத்துக்கு வந்து விட்டாள். துரையின் வக்கீல் படிப்பை எல்லாம் ராஜகோபாலன் தாம் சொன்னபடியே செலவை ஏற்றுக் கொண்டார். வனஜாவும் வீட்டு வேலைகளை வெகு பொறுப்பாகச் செய்யக் கற்றுக் கொண்டாள்.

வனஜா பழைய மாம்பலத்தில் ஒண்டுக் குடியில் சாரதாவோடு வீட்டு வேலைகளையெல்லாம் செய்து கொண்டு இருப்பது வனஜாவின் பெற்றோர்களுக்குப் பிடிக்கவில்லை. மாப்பிள்ளையைத் தங்கள் வீட்டோடுவந்து இருக்கும்படி மெதுவாகச் சொல்ல ஆரம்பித்தார்கள். துரை இதற்குக் கொஞ்சம்கூடச் சம்மதிக்கவில்லை. வனஜாவின் வீட்டார்கள் நாராயணனிடமே, ''துரை அங்கேயே இருந்தால் காரிலேயே நேராகச் சட்டக் கல்லூரிக்கும் போகலாம். அங்கேவீடு கொண்ட ஆட்கள் பணியாற்ற இருக்கிறார்கள். வனஜாவை விட்டு நாங்கள் பிரிந்ததே இல்லை!'' என்று பலவாறாக அடிக்கடி சொல்ல ஆரம்பித்தார்கள்.

நாராயணன் சாரதாவிடம் இந்த விஷயத்தைக் கூறி அவள் ஆலோசனையைக் கேட்டான். ''வனஜாவின் வீட்டார்கள் சொல்லுவதில் தப்பு ஒன்றும் இல்லை. அவள் பாவம் செல்லமாய் அருமையும் பெருமையுமாக வளர்ந்து விட்டு இங்கு எதற்காகக் கஷ்டப்பட வேண்டும்! வனஜாவின் அம்மாவே இந்தக் காற்றே இல்லாத வீட்டில் இருந்தால் உடம்புக்கு வியாதி வருமே என்று என்னையே நேரில் ஒருதரம் கேட்டார்கள். அவர்கள் பெண் இங்கு ஏழைமையில் கஷ்டப்படுகிறாளென்று அவர்களுக்கு மனசில் இருக்கிறது. துரைக்கும் மயிலாப்பூரில் இருந்தால் ரொம்பவும் சௌகரியம்தான். அவன் பிற்கால வாழ்க்கைக்கு அனுசரித்தும் பார்க்க வேண்டுமென்றால் அங்கே இருப்பதில் தப்பு ஒன்றும் இல்லை. ராஜபோகமாய் அவனுக்கும் வனஜாவுக்கும் அங்கு நடக்கும். இங்கு இந்த ஏழை அண்ணாவும் மன்னியும் வெறும் அன்பைத் தவிர வேறு என்ன செய்ய முடிகிறது! அம்மாவுக்கு வாக்குக் கொடுத்தபடி துரையை நம்மாலானது ஏதோ கொஞ்சம் முன்னுக்குக் கொண்டு வந்து விட்டோம். அவனைச் சௌகரியமாய் இருக்கச் செய்யவும் அவன் பிற்கால வாழ்க்கையை மலரச் செய்யவும் சக்தியுள்ள மனிதர்களைப் பகவானாக அவனுக்குக் கொடுத்திருக்கிறார்கள். துரை இந்த வீட்டை விட்டுப் போகச் சம்மதிக்கமாட்டான். அவனுடைய நல்லதிற்காக நாம்தான் அங்கே போயிருக்கும்படி சொல்ல வேண்டும்!'' என்றாள். அவள் கண்களில் நீர் சுரந்தது. அவள் குரலில் தாயின் அன்பு தொனித்தது.

துரை மாமனார் வீட்டோடு போயிருக்கக் கொஞ்சத்தில் சம்மதிக்க வில்லை. வனஜாவும் துரையின் தீர்மானத்தையே ஆதரித்தாள். சாரதாவும் நாராயணனுமாக ரொம்பவும் சொல்லி வனஜாவின் பெற்றோர்கள் மனம் நோகாதபடி இருப்பதற்காகக் கொஞ்ச நாள், அதாவது துரையின் இரண்டு வருஷப் படிப்பு முடிகிற வரையிலாவது வனஜாவின் பெற்றோர்கள் ஆசைக்காக அங்கு போயிருக்கும்படி வற்புறுத்திச் சொன்னார்கள்.

துரையும் வனஜாவுமாக மயிலாப்பூர் போய்ச் சேர்ந்தார்கள். துரைக்கு அங்கு கொஞ்ச நாள் வரை பாந்தமாகவே இல்லை. ஓடியோடி அண்ணா வீட்டுக்கு வந்து விடுவான். ''மன்னி! நீ சாதம் போடாமல் வயிறே நிறைய வில்லை. இன்று இங்கு சாப்பிடப் போகிறேன்!'' என்று சொல்லிக் கொண்டு வந்து விடுவான். ''இன்னமும் குழந்தை மாதிரியே இருக்கிறாயே!'' என்று மகிழ்ச்சி பொங்கச் சாரதா சொல்லி விட்டுப் பரிந்து பரிந்து சாதம் போடுவாள்.

ஒரு வருஷம் நிமிஷமாகக் கழிந்தது. கோடை காலத்தைச் சுகமாகக் கழிக்க வனஜாவின் பெற்றோர்கள் உதக மண்டலம் கிளம்பினார்கள்; பெண், மாப்பிள்ளை சகிதமாக. துரைக்கு மட்டும் தன்னை ஒரு ஆளாக்கிய அருமை அண்ணாவும் தாய்க்குச் சமமான மன்னியும் மாம்பலத்து ஒண்டுக்குடியில் கஷ்டப்படும்போது தான் மட்டும் உதகையில் சுகமனுபவிப்பதா என்று தோன்றியது. அண்ணாவையும் மன்னியையும் போய் அவர்களும் கட்டாயம் தங்களுடன் உதகைக்கு வரவேண்டுமென்று கூப்பிட்டான். நாராயணன் தனக்கு ஆபீசில் லீவு இல்லை என்று ஒரே வார்த்தையில் சொல்லி விட்டான். சாரதாவோ துரையிடம் தனியாக, ''துரை! நீ இன்னமும் எங்களிடம் ஒரே மாதிரி அன்புடன் இருப்பது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியை அளிக்கிறது தெரியுமா! உன்னோடு நாங்களும் நீலகிரிக்கு வருவது நன்றாயிராது. நீயும் வனஜாவும் சந்தோஷமாக இருந்தால் அதுவே எனக்குச் சந்தோஷம். அங்கெல்லாம் பனியும் குளிரும் ஜாஸ்தியாக இருக்கும். உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்!'' என்று பலவிதமாக அவனுக்குச் சொல்லி வடுமாங்காய் ஊறுகாயையும் துரைக்குப் பிடிக்குமே என்று கொடுத்து அனுப்பினாள்.

இரண்டு மாத காலம் உதக மண்டலத்தில் ராஜபோகமாய் இருந்து விட்டு வந்த பிறகு துரை கொஞ்சம் கொஞ்சமாக வனஜாவின் வீட்டவர்களின் செல்வத்துக்கு அடிமையாக ஆரம்பித்தான். பெரிய பங்களா வாசம், காரில் உல்லாசமாகப் போவது முதலிய வழக்கங்கள் அவன் உடம்போடு ஒட்டிக் கொண்டது. பாசம் உந்தப்பட்டு மாம்பலம் வந்து அண்ணாவையும் மன்னியையும் வந்து பார்த்து விட்டுப் போவானே தவிர மாம்பலத்தில் ஒரு நாள் தங்குவதுகூட அவனுக்கு அசௌகரியமாகப் பட்டது.

துரை அடிக்கடி மாம்பலம் வருவது நின்று விட்டதால் நாராயணன் தம்பியைப் பார்க்கும் பொருட்டு அடிக்கடி மயிலாப்பூர் போக வர ஆரம்பித்தான். மயிலாப்பூரில் துரையும் வனஜாவும் நடத்தும் ஆடம்பர வாழ்க்கை நாராயணன் மனசைக் கவர ஆரம்பித்தது. துரைக்கு அவன் மாமனாரும் மாமியாரும் கொடுக்கும் ஒரு மரியாதையும், செல்வாக்கும் சலுகைகளும் பார்த்த நாராயணனுக்குத் தன்னுடைய நிலைமை ரொம்பவும் தாழ்மையாகத் தோன்றியது.

துரைக்கு எதனால் இவ்வளவு சுகபோக வாழ்வும் ஏற்பட்டது! அவன் மனைவி பெரிய செல்வந்தர்களின் வயிற்றில் பிறந்ததால்தானே! அம்மா தன்னைப் போலவே இருக்க வேண்டுமென்று பரம தரித்திரத்தின் வீட்டுப்பெண்ணாகத் தனக்குப் பார்த்துக் கலியாணம் செய்ததால் தன்னுடைய தரித்திரம் விடியாமலே இருக்கிறது என்று மனம் புழுங்கினான். இறந்து போன தாயாரின் மேலும் இருந்து கொண்டிருக்கும் மனைவியின் மேலும் அவனுக்குத் தன்னை யறியா

மல் வெறுப்பு படர ஆரம்பித்தது. சாரதா ஒரு லட்சிய மனைவி என்று போற்றின தெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாய் அவனுடைய மனத்தை விட்டு மறைந்தது.

ஒவ்வொரு தடவையும் துரை வீட்டுக்குப் போய் விட்டு வரும்பொழுதும் நாராயணனின் மனம் சலனமடைந்தது. சாரதாவைப் போல் தரித்திரத்தை அடையாமல் வனஜாவைப் போலச் செல்வவந்தரின் பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டிருந்தால் தனக்குச் செல்வ நிலை இவ்வளவு கீழ் நிலையில் இருந்திருக்காது என்று அவன் மனம் எண்ணத் தவறவில்லை.

பலவித எண்ணங்களில் மூழ்கியிருந்த நாராயணனுக்கு நேரம் போனதே தெரியவில்லை. கடற்கரையில் வர வர மனித நடமாட்டம் குறைய ஆரம்பித்ததும் தான் திடுக்கிட்டு எழுந்து வீட்டுக்குக் கால் போனபடி நடக்க ஆரம்பித்தான். ''வீட்டுக்கு எதற்காகப் போகவேண்டும்! போன உடனே மேலே வந்து விழுந்து கொஞ்சும்படி குழந்தைகளும் கிடையாது. ஒரு விதத்திலும் சௌகரியம் இல்லாத ஜன்மமாகப் போய் விட்டோம்!'' என்று மனசுக்குள் சொல்லிக் கொண்டே வீடு போய்ச் சேர்ந்தான்.

நாராயணனுடைய இந்த மன நிலையை அறியச் சாரதாவுக்கு அதிக நாள் தேவையாக இல்லை. துரை தன் மாமனார் வீட்டுக்குப் போனதிலிருந்து நாராயணனின் மனத்தில் இருந்த உற்சாகமும் மகிழ்ச்சியும் போய்க் கோபமும் சிடுசிடுப்பும் அதிகமானதைச் சாரதா உணராமல் இல்லை.

பணம் போதவில்லை. வீட்டில் விளையாட ஒரு குழந்தை கிடையாது. அந்தக் குறை நாராயணனுக்கு மட்டும்தானா? சாரதாவுக்குக் கிடையாதா? நாளாக நாளாக இருவர் உள்ளங்களிலும் ஏதோ ஒரு குறை இருந்து கொண்டு அவர்கள் உள்ளத்தை உறுத்திக் கொண்டே இருந்தது.

கணவனின் அன்பு வெள்ளத்திலே, அவனுடைய அரவணைப்பிலே திளைத்துக் கொண்டிருந்த சாரதாவுக்கு அவனுடைய திடீர் மன மாறுதல் அவளால் சகிக்க முடியவில்லை. ஆசைக் கணவனின் வெறுப்புக்கு ஆளாகி அவனுடைய கோர மொழிகளைப் பொறுக்க முடியாமல் உடலும் உள்ளமும் ஒருங்கே உடைந்து போகும் நிலையில் இருந்த சாரதா உலகில் பணம்தானா பிரதானம் என்று எண்ணி எண்ணி ஏங்கினாள்.

தம்பதிகள் மனம் விட்டுப் பேசி மாதக் கணக்கில் ஆகி விட்டது. கணவன் காரியாலயத்தில் இருந்து வரும் சமயம் ஆகிவிட்டது என்று மனம் சந்தோஷத்தினால் துள்ளின காலம் போய், வந்ததும் எந்த விஷயத்தில் தப்பு கண்டுபிடிப்பாரோ எப்படி எரிந்து விழுவாரோ என்ற திகில் சாரதாவைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டது. சகோதரனின் ஸ்தானத்தில் வளர்ந்த துரையும் அடிக்கடி வருவதில்லை. சகோதரர்கள் இருவர் மனம் இப்படி மாறிப் போய் விட்டதே என்று சாரதாவின் மனம் புழுங்கியது.

யோசித்து யோசித்து அவள் ஒரு முடிவுக்கு வந்தாள். 'வர வர நம் கணவருக்கு நம்மைக் கண்டால் கொஞ்ச மேனும் பிடிக்கவில்லை. துரையோ அவனுடைய மாமனார் வீடே சொர்க்கம் என்று இருக்கிறான். நாராயணனுக்கும் துரைக்காகவுமாகவே இதுவரை ஒருதரம் பிறந்த வீட்டுக்குக் கூடப் போகாமல் கணவனுக்கு வரும் சிறிய சம்பளத்தில் சிக்கன வாழ்க்கை நடத்தினேனும். இப்போது வேண்டாதவளாகி விட்ட

போது இங்கே இருந்துகொண்டு தினம் பொழுது விடிந்து பொழுது போகுமளவும் கணவனின் வெறுப்புக்கு ஆளாகிச் சண்டை பூசல்களை எவ்வளவு நாள்தான் பொறுத்துக் கொண்டு போக முடியும்! பேசாமல் இரண்டொரு மாதங்களுக்குப் பிறந்தகம் போயிருக்கலாம். நமக்கும் சற்று மனத் திருப்தி ஏற்படும். அவரும் சில காலம் நம் தொந்தரவு இல்லாமல் நிம்மதியாக இருக்கலாம்.'

அன்றிரவு கணவன் வந்ததும் அவனைக் கேட்டுக் கொண்டு மறு நாள் தன் பிறந்தகத்துக்குக் கிளம்பி விடுவது என்று ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டாள் சாரதா.

மணி ஐந்தரை ஆயிற்று.

"சாரதா, சாரதா!" என்று அவசரமாகக் கூப்பிட்டுக் கொண்டு வந்தான் நாராயணன். அவன் குரலில் அமைதியான அன்பு தொனித்துக் கொண்டிருந்தது.

அவள் மனத்தை அத்தனை நாளாக அழுத்திக் கொண்டிருந்த பாரம் அகன்று விட்டது போல் தோன்றியது, அவன் குரலில் தொனித்த உற்சாகத்தைக் காணும்போது.

"சாரதா, சாரதா!" என்று வீடு முழுவதும் பரபரப்புடன் தேடினான். எங்கும் காணவில்லை. வீடுமுழுவதும் சுற்றிச் சுற்றிப் பார்த்தான். கடைசியாகக் கொல்லைத் தாழ்வாரத்தில் வயிற்றைக் குமட்டிக்கொண்டு தலையைக் கையில் பிடித்தவாறு சோர்ந்து போய் உட்கார்ந்திருந்தாள்.

"சாரதா! உனக்கென்ன உடம்பு! ஏன் இப்படி வாந்தி யெடுக்கிறாய்! சொல்லேன்!" என்றான் பரபரப்பும் கவலையும் தோய்ந்த குரலில்.

சாரதாவுக்கு நாராயணனின் குரலையும் அவன் பரபரப்பையும் கண்டு ஒரே ஆச்சரியமாக இருந்தது. இத்தனை நாளாகச் சிடு சிடுவென்றிருந்த அவன் முகம் குதூகலத்துடன் காணப் பட்டது.

சாரதா பர பரப்புடன் எழுந்து வாய் கொப்பளித்துக் கொண்டு அவனை நோக்கி வந்தாள்.



"எவ்வளவு ருசியாகச் சமைக்கிறேன். குற்றம் சொல்லுகிறீர்களே!"

"நீர் நன்றாகச் சமைப்பதுதான் குற்றம். எல்லோரும் ருசியாக இருக்கிறது என்று அரை ரூபாயைக் கொடுத்துவிட்டு இரண்டு ரூபாய்ச் சாப்பாட்டைச் சாப்பிட்டு விட்டுப் போகிறார்கள். நஷ்டப்படுகிறது யார்?"

சோர்வினாலும் பலஹீனத்தினாலும் அவளுடைய கால்கள் தடுமாறின.

நாராயணன் சட்டென்று சாரதாவைத் தாங்கிப் பிடித்தவாறு அவளை மெள்ள உள்ளே அழைத்துச் சென்று உட்கார வைத்து விட்டு, "சாரதா! உனக்கென்ன உடம்பு! சொல்லேன். நான் மகா பாவி! இத்தனை நாளாக உன்னைக் கவனிக்காமல் இருந்து விட்டேன்!" என்று ஏதேதோ சம்பந்தா சம்பந்த மில்லாமல் குழறினான்.

சாரதா பிரமை பிடித்தமாதிரி ஆச்சரியத்துடன் நாராயணனையே வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்குத் தன் கண் முன் நடப்பது எல்லாம் கனவில் நடப்பது போல் இருந்தது. பேசக்கூடத் தெரிய வில்லை. மெல்ல தன்னைச் சமாளித்துக் கொண்டு, "என்ன உடம்பு சாரதா! சொல்ல மாட்டாயா! என்மீது கோபமா! நான் இத்தனை நாளாக உன்னிடம் ஒரு மாதிரியாக நடந்து கொண்ட தெல்லாம் தப்புத்தான். எல்லாவற்றையும் விவரமாகச் சொல்கிறேன்! உனக்கென்ன செய்கிறது! டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு வரட்டுமா!" என்று எழுந்தான்.

சாரதா உடனே அவனைத் தடுத்து. "எனக்கு உடம்பு ஒன்று மில்லை. ஐம்பது நாளாச்சு ஸ்நானம் செய்து. சந்தேகமா யிருக்கிறது. இப்போது எதற்கு இது!" என்று சொல்லி விட்டு விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள்.

நாராயணனின் உடலில் அமிர்தம் பாய்வது போன்ற உணர்ச்சி தோன்றியது. "அழாதே! சாரதா! இவ்வளவு சந்தோஷ சமாசாரத்தை எனக்குச் சொல்லிவிட்டு அழாதே!" என்று பல வாறாக அவளைத் தேற்றினான்.

சாரதா விம்மியவாறே, "நீங்களும் நானும் இந்தப் பத்து வருஷத்தில் எவ்வளவோ ஆதர்ச வாழ்க்கை நடத்தினோம். நம்முடைய இன்ப வாழ்வைக் கண்டு ஊரே பொறாமைப் பட்டது. துரை என்னைத் தாயாருக்கும் மேலாக நேசித்து வந்தான். என்னைக் கேட்காமல் ஒரு காரியம் செய்யவோ, என்னைப் பார்க்காமல் ஒரு நாளோ அவன் இருக்க மாட்டான். அப்படிப் பட்ட சகோதரர்கள் இருவரையும் என்னிடமிருந்து பிரித்தது பணம்தானே! நீங்களும் என்னைக் கண்டு வெறுப்படைய ஆரம்பித்தீர்கள். என்னோடு நீங்கள் சரியாக முகம் கொடுத்துப் பேசி ஒன்றரை மாதத்துக்கு மேலாகிறது. துரையும் இங்கு வருவதை அடியோடு நிறுத்தி விட்டான். இனி நான் யாருக்காக இந்த உலகத்தில் உயிர் வாழ வேண்டும்! இந்தச் சமயத்தில் இது வேறு என்னத்துக்கு!" என்று சொல்லிக் கதறினாள். அவள் மனத்தில் வைத்திருந்ததை அப்படியே கொட்டி விட்டாள்.

சாரதாவின் மனத்தின் பாரம் சற்றுக் குறையட்டும் என்ற எண்ணத்துடன் சற்று நேரம் நாராயணன் வாளாவிருந்தான்.

சற்று நேரம் பொறுத்து அவளை அன்புடன் தடவியவாறே, 'சாரதா! என்னை மன்னித்து விடு! என் மனம் பேதலித்தது வாஸ்தவம்தான். துரைக்குக் கலியாணம் ஆகி மயிலாப்பூர் போனவுடனேயே அங்கு அவன் சுகவாசம் செய்வதைக் கண்டு என் மனம் சபலம் அடைந்தது. நாம் மட்டும் இப்படி தரித்திர நிலையில் இருக்கிறோமே என்று என் மனம் வெதும்பினேன். வீட்டுக்கு வந்து விட்டால் விளையாட ஒரு குழந்தை இல்லையே என்ற ஏக்கமும் எனக்கு உள்ளூற இருந்தது. இதே ஏக்கம் உனக்கும் இருக்காதா என்ற என்



யுத்தத்துக்குப் பின் ஐரோப்பாவில் நிலவும் அரசியல் பொருளாதார நிலைமையை அறிந்து கொள்ளவும், அவர்கள் எப்படிச் சீரமைப்புப் பெற்றார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்காகவும் பார்லிமெண்ட் அங்கத்தினர் ஸ்ரீ எச். டி. ராஜாவும், நீதிபதி என். ராஜகோபால ஐயங்காரும் இங்கிலாந்துக்குச் சென்று அங்கிருந்து இரண்டு மாத காலம் ஐரோப்பாவில் சுற்றுப் பிரயாணம் செய்யப் போகிறார்கள். மே 18உ அன்று சென்னை விமான நிலையத்தில் நண்பர்களும், பிரமுகர்களும் அவர்களுக்கு மலர் மாலை சூட்டி வழி அனுப்பி வைப்பதை மேலே படத்தில் காணலாம்.

---

ணம் எனக்கு உண்டாகவில்லை. இத்தகைய காரணங்களால் என் மனம் சலிப்படைந்தது.

"ஆனால் துரையை இன்றுதான் தனியாகச் சந்தித்தேன். அவன் உனக்கு மேலாக என்னிடம் கதறிவிட்டான். அவன் அங்கே இத்தனை நாளாக ஒரு சுதந்திரம் இல்லாமல் அடிமை வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்ததாகக் கூறினான். மாப்பிள்ளை வீட்டோடு இருக்க ஆரம்பித்ததால் அவனுக்கிருந்த மதிப்பும் குறைந்து போய் வேலைக்காரர்களுக்குக்கூட இவனிடம் மரியாதை இல்லாமல் அலட்சிய பாவம்தான் மேலோங்கி நிற்கிறதாம். நாளைக்கே வனஜாவுடன் இங்கு வந்து விடப் போவதாகச் சொல்லி 'என்னை மீண்டும் ஏற்றுக் கொள்வீர்களா!' என்று கேட்டான். சுதந்திரம் இல்லாமல் ஒரு ரூபாய்க்குக்கூட அவன் மாமனார் தயவை எதிர்பார்த்துக்கொண்டிருப்பது அவனுக்குச் சகிக்கவில்லை என்று சொன்னான். அவனுடைய இந்த மேல்பூச்சான வாழ்க்கையைக் கண்டு நான் பொறாமைப் பட்டேனே, அது வெறும் சொப்பன வாழ்வு என்ற உண்மை எனக்குத் தெரிந்தது. அதைப் பார்த்து நிஜ வாழ்வுஎன்று எண்ணிக்கிடைத்தற்கரிய மாணிக்கமாகிய உன்னையும் இத்தனை நாளாகப் புறக்கணித்தேனே! என்ன மூட்டாள்தனம்!" என்று மளமளவென்று சொல்லிமுடித்தான் நாராயணன்.

சாரதாவுக்கு இதை யெல்லாம் கேட்க ஆச்சரியமாக இருந்தது. சற்று முன்னால் பிறந்தகம் போக வேண்டுமென்ற எண்ணம் ஆவியாக மறைந்து போய்விட்டது.

"அதிருக்கட்டும்! துரைக்கு அங்கே பிடிக்கவில்லையா! இங்கே வரச் சொன்னீர்களா! என்றைக்கு அவன் வரப் போகிறான்! வனஜாவும் அவனுடன் வருகிறாளா!" என்று பல கேள்விகள் அவனிடம் கேட்டாள் சாரதா.

"நாளைக்கே இங்கு வந்து விடுவதாகச் சொன்னான். நானும் உன்னைப் போலவே வனஜா வரச் சம்மதிப்பாளா என்று துரையைக் கேட்டேன். அதற்கு அவன் என்ன சொன்னான் தெரியுமா சாரதா! 'வனஜா நான் இருக்கும் எந்த இடத்திலும் நிழல்போலத் தொடரத் தயாராக இருக்கிறாள் அண்ணா! மன்னியிடம் ஒரு வருஷப் பயிற்சி பெற்ற வனஜாவுக்கு மன்னியின் குணம் சிறிதளவாவது வந்ததால்தான் என்னை ஒரு மதிப்பில்லாமல் நடத்தும் அவளுடைய பெற்றோர்களை அவளுக்குப் பிடிக்கவில்லை. நான் ஒரு அறையில் இருந்தாலுங்கூட அதில் அவள் இருக்கவே தயாராக இருக்கிறாள்!' என்று சொன்னான். சாரதா ஏதோ போதாத காலத்தினால் நான் இத்தனை நாளாக அறிவீனனாகி விட்டேன். என் கண் திறந்து விட்டது. துரை இத்தனை நாள் கழித்துத் தான் சித்தப்பாவாகப் போவதை அறிந்தால் எத்தனை சந்தோஷப் படுவான்!" என்று கூறி ஆர்வத்துடன் அவள் முகத்தையே நோக்கினான் நாராயணன்.

சாரதாவின் முகத்தில் செம்மை படர்ந்தது. நாணத்தால் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

"எனக்குக் காப்பி ஒன்றும் கிடையாதா!" என்றான் நாராயணன். "இதோ கொண்டு வந்து விட்டேன்!" என்று உவகை பொங்கச் சொல்லிக் கொண்டே சமையல்கட்டை நோக்கி விரைந்தாள்.

அன்றலர்ந்த தாமரை போலக் களங்கமில்லாத அவள் முகத்தைப் பார்த்து நாராயணனின் மனம் களிப்படைந்தது.

அந்தச் சிறிய அன்னியோன்னிய குடும்பத்தில் மீண்டும் அன்பும் அமைதியும் நிலவப் போவதை முன்கூட்டியே அறிவிப்பது போன்று எங்கோ தூரத்தில் கோவில் மணி ஓம், ஓம் என்று ஒலித்துக் கொண்டிருந்தது.

# எல்லாம் கோடிட்டவை!



ஆம்...எமது கோடிட்ட
துணிகளால் நாங்களே
பெருமித மடைகிறோம்.
சகல ரகங்களையும்
உங்கள் வாடிக்கைக்
கடையில் காணுங்கள்.

## காலிகோ ஷர்ட்டிங்



தயாரிப்பவர்கள் :

காலிகோ மில்ஸ், அஹமதாபாத்.



போட்டிக் கதை—10.

1799-ம் வருடம். தமிழ் நாட்டின் தனிப் பெரும் வருடம்.

அப்பொழுது மாலை. வானம் மஞ்சள் கலந்த சிவப்பு வர்ணத்துடன் காட்சி யளித்தது.

எங்கும் ஒரே பிணக்காடு; பிணக் குவியல்! மாண்டு துடித்தன மனித உடல்கள்! செந்நீர் மண்ணிலே வெள்ளமாக ஓடியது! எல்லாம் வெள்ளையன் வருகையால் வந்த வினை!

ஏன்! காடோடிகளாக வந்த ஆங்கிலேயர் நாடாளும் உரிமை பெற்றதாக எண்ணிப் பாஞ்சாலங் குறிச்சி மன்னன் வீரபாண்டியக் கட்ட பொம்மனைக் கப்பம் செலுத்தும்படி கட்டளை யிட்டனர். கப்பம் கட்ட மறுத்தான் வீர பாண்டியன்! மூண்டது போர்! மாண்டனர் வீரர்கள்! எங்கும் பிணக் குவியல் எழும்பியது!

அந்தப் பிணக் குவியல்களைத் தாண்டிக் கொண்டு வேகமாக நடந்து சென்று கொண்டிருந்தாள் ஒரு ஆங்கிலேய மாது! வயது பத்தொன்பது இருக்கலாம். வட்ட சாட்டமான மஞ்சள் நிறமான உடல். அதிலே செம்மை படர்ந்திருந்தது! காவிரி ஆற்றின் சிவந்த வண்டல் மண்ணைப்போன்ற கேசங்கள்; உருண்டு திரண்ட கரங்கள்.

அந்தப் பெண்ணின் பெயர் லேடி ரோவினு. தன் காதலனை சார்லஸைத் தேடித்தான் அந்தப் பிணக் குவியல்களைத் தாண்டி வீர பாண்டியனின் கோட்டையை நோக்கி விரைந்து கொண்டிருந்தாள். காற்றும் உத்தரவின்றி உள்ளே நுழைய முடியாத வீர பாண்டியன் கோட்டையில் ஒரு வனிதை நுழைய முடியுமா!

ஆனால் ரோவினு உள்ளே நுழைந்து விட்டாள்! ஆம்; இரகசியப் பாதையைக் கண்டு பிடித்து விட்டாள்! இல்லாவிடில் நிலவறை வரையில் செல்ல முடியுமா! ஒற்றனை சார்லஸ் நிச்சயம் நிலவறைக்குத் தான் சென்றிருப்பான் என்பது அவளுக்கு நன்றாகத் தெரியும்.

தற்செயலாக நிலவறைக்கு வந்து நின்றான் வீர பாண்டியனின் சகோதரன் ஊமைத்துரை. நிலவறையில் நிசப்தம் நிலவி யிருந்தது. மாலை வேளையின் கடைசி நேரம் அல்லவா! இருள் மயமாகத் திகழ்ந்தது. பலகணி இருந்த இடங்களில் மட்டும் சற்று வெளிச்சம் ஆதிக்கம் செலுத்தியது.

சிறிது நேரம் அங்கு நின்று சுற்று முற்றும் பார்த்த ஊமைத்துரை திடீரெனத் துணுக்குற்றான்! கண்களை அகல விரித்து நன்றாகத் திறந்து பார்த்தான்! மூச்சையும் அடக்கி அந்த நிலவறையின் இருளைத் துருவிப் பார்த்தான். திகைத்து நின்றான்! சட்டென்று அவன் கரம் உடைவாளைப் பற்றியது!

காரணம்!

ஆம்; நிலவறையில் நின்று கொண்டிருந்தது ஒற்றனை ஒரு ஆங்கிலேயனே! ரோவினுவின் அருமைக் காதலன் சார்லஸே! பலகணியின் வெளிச்சத்திலே அந்தப்பரங்கியன் நின்றுகொண்



டிருப்பது ஊமைத் துரையின் உற்று நோக்கும் கண்களுக்குத் தெரிந்து விட்டன !

ஊமைத் துரையின் இதயம் துடித்தது; கால்கள் துடித்தன; கரங்களும் துடித்தன ! கண்கள் மாலைச் சூரியனைப் போன்றாயின !

ஓசைப் படாமல் பாய்ந்து ஓடினான். இரும் பொத்த தன் கரத்தினால் சார்லஸைப் பற்றினான். மறு கணம்—மறு கரத்தால் சார்லஸின் தோளிலே சாய்ந்திருந்த துப்பாக்கியைத் தட்டி விட்டான் ! துள்ளிய அந்தத் துப்பாக்கி சுவரின் ஓரத்திலே விழுந்தது ! இவை யாவும் கண நேரத்தில் நிகழ்ந்தன !

ஊமைத் துரையின் உருவத்தைக் கண்ட சார்லஸ் நடுங்கிப் போனான். அவன் உள்ளம் பயங்கர மென்னும் படு பாதாளத்தில் விழுந்தது ! இதயம் விரிந்து சுருங்குவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது ! மேனி சிலிர்த்தது !

வீரத் தமிழனான ஊமைத் துரையின் கண்கள் கனலைக் கக்கின. ஒளியும் உத்தரவின்றி நுழைய முடியாத வீரத் தமிழனின் கோட்டையில் ஒரு ஒற்றன் ! அதுவும் ஆங்கிலேயன் ! அவன் வாய் மூனகிற்று. கோபக் குன்றின்மீது ஏறி நின்றான். ஒற்றனான சார்லஸின் சிரத்தை நோக்கித் தன் உடைவாளை ஓங்கினான்.

சார்லஸ் கண்முன் ஊமைத் துரையின் உருவம் சுழன்றது ! கார் மேகத்திடையே தோன்றும் மின்னலைப் போன்று அந்தக் கத்தி மின்னியது. கழுத்தை நோக்கி விரைய ஆரம்பித்தது, ஒளி வேகத்தில் !

அடுத்த கணம் !

ஒரு பெண்ணின் அலறும் குரல் பயங்கரமாகக் கேட்டது ! அழுகையால் மூடப்பட்ட அந்த அலறல் நிலவறையின் நிசப்தத்தைக் கிழித்தது.




திரும்பிப் பார்த்த ஊமைத் துரை திகைத்து நின்றான். திகைப்பின் எல்லையைத் தாண்டி நின்றான் ! சார்லஸின் கழுத்தை நோக்கி வந்துகொண்டிருந்த அந்தக் கத்தி கண நேரத்தில் நின்றது.

நீர் வழியும் நயனங்களுடன், விம்மும் மார்பகத்துடன் ஒரு லலிதை காட்சி அளித்தாள் ! ஆம்; ஆங்கிலேய மாது ரோஸினாதான்.

ஓடி வந்தாள்; ஊமைத்துரையின் அருகே வந்து நின்றாள். இரு கரங்களையும் விரித்து வீரத் தமிழன் முன் மண்டியிட்டாள். தன் காதலன் சார்லஸின் உயிர்ப் பிச்சையை வேண்டினாள். அவள் மன்றாடிக் கதறிய குரல் அந்த அறை முழுவதும் சோகமாக ஒலித்தது !

ஆனால் அந்தக் கதறலினால் எல்லாம் ஊமைத் துரையின் உள்ளம் கரைந்து உருகி விடவில்லை !

"எண்ணற்ற தமிழர்கள் இறந்தனர். ஏன் ? வீரத் தமிழர் சேனையில் அநேக மதிப்பில்லா மாணிக்க வீரர்கள் மறைந்தனர் ! ஏன் ! எல்லாம் பரங்கியர் பட்டாளத்தின் பலி வேட்கை ! வஞ்சகம் நிறைந்த அந்த வீணர்களின் கூட்டத்துக்குக் கொஞ்சமும் இரக்கம் காட்டலாகாது ! துரோகம் நிறைந்த அந்தத் தூர்த்தர்களின் கூட்டத்துக்குத் துளியும் அன்பு காட்டலாகாது !"

மேற் கூறியவாறு ஊமைத் துரையின் உள்ளத்திலே பல குரல்கள் மாறி மாறி ஒலித்தன. இதனால் அவன் கண்கள் முன்னிலும் சிவந்தன ! பற்கள் நெறிந்தன ! தோள்கள் துடித்தன !

மறுபடியும் வாளை ஓங்கினான் ஊமைத்துரை, அவள் முன்னிலும் வேகமாக, உரக்கக் கதற ஆரம்பித்தாள். சார்லஸின் வதனத்திலே பீதி திரையிட்டிருந்தது; பேச முடியவில்லை ! கண்கள் கருணையை வேண்டி நின்றன.

"சுதந்திர மஞ்சத்திலே தவழும் தமிழனை அடிமை விலங்கை அணியச் சொல்கின்றீர்கள் ! தமிழ்த் தாயின் மடியிலே தவழும் எங்களை உங்கள் பாதங்கள் முன் பணியவா சொல்கின்றீர்கள்! வஞ்சகத்தின் வடிவங்களே ! உங்களிடமா இரக்கம் காட்டுவது !" என்று மனத்துள் வெங்கைப் புலியாக உறுமினான் ஊமைத் துரை.

சார்லஸ் நடுங்கினான்; ரோவீனா கதறினாள்! அடுத்த கணம், "தம்பி! நிறுத்து!" என்ற உறுதியான குரல் ஒன்று அந்த நிலவறை முழுவதும் ஒலித்தது.

ஓங்கிய வாள் கடினமாக நின்றது! கட்டளை ஒலி வந்த திசையை நோக்கினான், ஊமைத்துரை!

ஊமைத் துரையின் அண்ணன்—வீரத்தின் வடிவம்—தயையின் திரு உருவம்—தஞ்சம் அடைந்தோரைத் தழுவி அணைத்து அன்பு காட்டும் வீரச் சுதந்திரத் தமிழன் வீர பாண்டியக் கட்ட பொம்மன் வந்து நின்றான்.

வீரபாண்டியன் முகத்திலே அமைதி குடிகொண்டிருந்தது. அந்த அமைதி அவன் எல்லாவற்றையும் அறிந்து கொண்டு விட்டதாகத் தெரிவித்தது.

"தம்பி! பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிலே பரங்கியன் நுழைவது கடினம். நுழைந்தாலும் தப்புவது அரிது என்பதைக் காண்பித்துவிட்டாய்! உன்னை மெச்சுகிறேன்!" என்று வெகு அமைதியாகக் கூறினான். குணத்தில் உயர்ந்தவன் என்பதை எடுத்துக் காட்டும் கண்ணாடி, ஒருவனுடைய அமைதியான சொற்கள்தானே!

"ஆம்! பாஞ்சாலக் கோட்டையில் வேற்றார் நுழைந்து தப்புவது அரிதுதான்! ஆனால் தற்போது நுழைந்து நிற்கும் இவர்களுக்கு என்ன தண்டனை அளிப்பது!" என்று வினவுவது போன்றிருந்தது, ஊமைத்துரையின் வதனம்.

ஊமைத் துரை வாய் திறந்து பேச இயலாதவன். ஆம்; பெயருக் கேற்றவாறு ஊமைதான்! ஆனால் உள்ளம் ஊமையல்ல! முகம்தானே உள்ளக் கருத்தை வெளியிடும் வாய்! தம்பியின் கருத்தைப் புரிந்து கொண்டான் அண்ணன்.

"தம்பி! அவர்களுக்குத் தண்டனை அளிக்க வேண்டியதுதான்!" என்ற வீர பாண்டியன் புன்னகை பூத்தான்.

இன்னமும் தன் காதலனின் உயிர்ப் பிச்சையை வேண்டி நின்ற ரோவீனா நேராக வீரபாண்டியனை அணுகினாள். மண்டியிட்டு மன்றாடினாள்.

"அரசே! என் காதலனைக் காப்பாற்று!" என்று ஆங்கிலத்தில் அலறினாள்.

வீர பாண்டியனின் இதயம் இளகியது. ஊமைத் துரையை உற்று நோக்கினான். அப்பொழுதும் ஊமைத் துரை சார்லஸின் கரத்தை விடவில்லை. சார்லஸின் கண்களில் நீர் முத்துக்கள் நிரம்பியிருந்தன!

ஊமைத் துரையை அணுகிய வீரபாண்டியன் பருத்த அவன் தோள்களின்மீது தன் வலக் கரத்தைப் போட்டான். முத்துக்கள் சிதறுவது போன்று பேசலுற்றான். அதிலே அன்பு, கருணை, வீரம், அமைதி யாவும் நிறைந்திருந்தன.

"அருமைத் தம்பி! வீரம் என்பது வீண் கொலை அல்ல! தீரம் என்பது மன்னிப்பு வேண்டி நிற்கும் மனிதனைத் தண்டிப்பது அல்ல! ஆகையால் சரண் புகுந்து மன்னிப்பு வேண்டி நிற்கும் அந்த மனிதனை விட்டுவிடு. அதுதான் நமக்கு அழகு!"—வீர பாண்டியன் நிறுத்தினான்.

"என்னிடம் மன்னிப்புக் கோரியிருந்தால் மண்டியிட்டிருக்க மாட்டானா!" என்ற வினா ஊமைத் துரையின் வதனத்தில் தவழ்ந்தது. அதைப் புரிந்து கொண்ட வீரபாண்டியன் வெண்கல நாதத்தில் பேசலானான்.

"கரத்திலே சிக்கியவன் தப்பியோட முயலாமல் தணிந்து நிற்பதும், கண்களில் நீர்த் திரையிட கருணையை வேண்டி நிற்பதும் மன்னிப்பின் பிரதிபலிப்புகள்தானே! நன்றாக யோசித்துப் பார்! ஆங்கிலேய மாதாயிருந்தாலும் அவள் பெண். பெண் இனத்துக்கு இரங்கு! தமிழனின் தனிப் பெரும் பண்பிலிருந்து சிறிது கூடப் பிறழாதே!"

வீரபாண்டியனின் அன்பு உரைகள் ஊமைத் துரையின் இதயத்தைத் தொட்டன! அண்ணனின் ஆணையை, மேலும் அரசனின் ஆணையை மீற விரும்பவில்லை, அவன்.

"சுதந்திரத்தைப் பறிக்க முயற்சிக்கும் சுயநலக்காரர்கள்—பாரத நாட்டையே அடிமைப் போர்வையால் மூடப் பார்க்கும் பரங்கியர்கள் கூட்டத்தைச் சேர்ந்த இவர்களையா விடுவது!"

ஆம்; விட்டுத்தான் ஆக வேண்டும்! காதலி அவன் உயிருக்கு மன்றாடி, மன்னிப்பு வேண்டுகிறாள்! அரசனான அண்ணனின் ஆணை ஒரு புறம்; அந்தப் பெண்ணின் மன்னிப்புக் கண்ணீர் இன்னொரு புறம். எனவே, அவன் தன் பிடியைத் தளர்த்திச் சார்லஸின் கரத்தை விட்டான். ஆம்; பாரத நாட்டின் பண்புக்கு மெருகிட்டான்! தமிழ் நாட்டின் தனிப் பண்புக்குத் திலகமிட்டான்! வீரபாண்டியன் வதனத்திலே தவழ்ந்த புன்னகை ஊமைத்துரையைப் பாராட்டும் வகையில் அமைந்திருந்தது.

"தம்பி! இரு குதிரைகள் ஆயத்தம் செய்!" என்று கனிவுடன் பணித்தான் பாராளும் மன்னன் வீரபாண்டியன். அண்ணனின் விருப்பத்துக்கு இணங்க விரைந்து சென்றான் ஊமைத்துரை, இரு புரவிகள் ஆயத்தம் செய்ய.

ரோவீனாவின் கண்களில் நன்றிப் பெருக்கால் வெளிப்பட்ட இன்பக் கண்ணீர் கன்னங்களில் முத்துக்கள் போன்று அரும்பி நின்றன. தன் சிரத்தைத் தாழ்த்தி மண்டியிட்டு நன்றியைத் தெரிவித்துக் கொண்டாள்.

எந்த இனத்துக்கும் நன்றி ஒன்றுதான்! நிறத்தாலும், நாட்டாலும், மதத்தாலும்—எதாலும் வேறுபடாது!

இவ்வளவு நேரமும் வாய் திறந்து பேசாதிருந்த சார்லஸ் ஓரத்திலே ஒடிந்து கிடந்த துப்பாக்கியைத் தூக்கினான். நன்றி உணர்ச்சியால் நீர் நிறைந்த நயனங்களுடன் வீரபாண்டியன் முன் சென்று நின்றான். அவன் பாதங்களுக்கு முன் தன் துப்பாக்கியைப் பாங்காக வைத்தான். மண்டியிட்டுச் சிரம் தாழ்த்தி நன்றி தெரிவித்தான்.

வீரபாண்டியனின் கருணை விழிகள் அவர்களை நோக்கின. "மன்னித்தேன்! பயப்படாதீர்கள்!" என்ற சொற்கள் அவன் வாயினின்று உதிர்ந்தன.

இன்னா செய்தார்க்கு இனியவை செய்ய வேண்டும் என்ற இந்தியப் பண்பின் பெருமையை என்னவென்று சொல்வது!

## 2

மறு நாள்.

வீரபாண்டியனும் ஊமைத்துரையும் வில்லும் அம்பும் போன்று ஒத்துழைத்து ஆங்கிலேயர் சேனையை எதிர்த்தனர். வலிமை கொண்ட தங்கள் கரங்களினால் வாளைச் சுற்றி அண்டிப் பிழைக்க வந்த ஆங்கிலேயர் பட்டாளத்தை விரட்டத் தலைப்பட்டனர்.

பாஞ்சாலங் குறிச்சியிலே வீரத்தமிழர்களுக்கும் அடிமை விலங்கைப் பூட்ட வந்த ஆங்கிலேயர்களுக்கும் போராட்டம். அதே கணம், இரு ஆங்கிலேய ஜீவன்கள் வாய்ப் போராட்டம் செய்து கொண்டிருந்தன. ஆம்; சார்லஸும் ரோவீனாவும்தான்!

'உன் இதயத்திலே நன்றி சிறிதாகிலும் இருக்கிறதா!"—ரோவீனாவின் கண்டிப்பான குரல்.



# குடும்பம் முழுவதற்குமே

# உன்னத பானம்!



சிறுவர், நடுத்தர பிராயத்தினர், முதியோர்—குடும்பத்தில் ஒவ்வொருவரும் உணவு அருந்தும்போது அல்லது இடையில் ஓவல்டின் பருகி நன்மை அடைகிறார்கள். ருசி மிகுந்த இந்த பானத்தில், அன்றாட உணவில் இருக்கும் ஜீவசத்து குறைபாடுகளை நிவர்த்திசெய்ய புஷ்டியான சத்துக்கள் இருக்கின்றன: அது நோயாளிகளுக்கும், சின்னஞ் சிறுவர்களுக்கும் சுலபமாக ஜீரணமாகக்கூடியது. ஓவல்டினில் பழுத்த பார்லி மால்ட், ஆடை நிரம்பிய சுத்தமான பசும்பால், சிறந்த கொக்கோ இயற்கையான பாஸ்பேட்டுகளும், பி & டி விடமின்களும்




இருக்கின்றன. உடனே ஓவல்டின் வழங்க ஆரம்பியுங்கள். ஆனால் அது "ஓவல்டின்" தானா என்று நிச்சயப் படுத்திக் கொள்ளுங்கள். வேறெந்த உணவு பானமும் ஓவல்டின் ஆகாது!

விநியோகஸ்தர்கள் :

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.

# ஓவல்டின்

## உலகில் மிகவும் விரும்பப்படும் உணவுபானம்

OV.394



# நீங்கள் இன்று
# உங்கள் பற்களை
# மக்ளீன்
# செய்தீர்களா?



**ஆம், அதன் இரகசியம் இதுதான் . . .**

பற்களைத் தவறாமல் சுத்தம் செய்து வருவதால் அவை நெடு நாளைக்கு ஆரோக்யமாக இருக்கின்றன என்பதைத் தெளிவாக்கி விடுவோம். பிரதி தினமும், இருவேளையும் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை உபயோகிப்பதால், அதிக வெண்மையான பற்களும், உறுதியான ஈறுகளும் நறுமணமுள்ள சுவாசமும் நிச்சயமாக உண்டாகின்றன. இவ்வித்தியாசத்தை நீங்களே காணலாம். மக்ளீன்ஸிலுள்ள ஒரு ப்ரத்யேகமான பொருள் பற்களின் மேல் படிந்துள்ள மங்கலான பூச்சை மாற்றி பற்களின் மேல் இயற்கையாக ஒளிரும் வெண்மையை வெளிக்கொணர்கிறது.

"...இவ்வாச்சரியமான பற்பசையை எனக்களித்ததற்கு எனது நன்றியைத் தெரிவித்தே யாகவேண்டும்."




க்ளோரோபில் சேர்ந்தும் கிடைக்கும்.

MTY-37-TAM.

கூண்டிலே நிற்கும் குற்றவாளியைப் போன்று நின்று கொண்டிருந்தான் சார்லஸ்!

"உன் உயிரைக் காப்பாற்றிய கருணை வள்ளலை நீ பிடித்துத்தான் கொடுக்கப் போகிறாயா!" என்றபோது ரோவீனாவின் தொண்டை துக்கத்தால் அடைத்துக் கொண்டது. உணர்ச்சிப் பெருக்கால் அவன் வதனம் உதிரமெனச் சிவந்தது! கண்களில் நீர் மல்கிற்று!

நாணத்தால் குன்றிய சார்லஸின் நயனங்களில் அவமானம் எதிரொலித்தது!

"சார்லஸ்! ஏன் பேசாமல் நிற்கிறாய்! உன் காதலி வேண்டுகிறேன்......உனக்கு மன்னிப்பு அளித்த அந்த மனித குல மாணிக்கத்தைத் தலைவன் பானர்மேனிடம் பிடித்துக் கொடுக்காதே!" என்ற ரோவீனாவின் குரல் விம்மலுக்கிடையே உரக்க ஒலித்தது. அவன் கூறிய சொற்கள் கூரிய அம்புகளைப் போன்று அவன் இதயத்தைத் தாக்கிக் குத்தின!

இனியும் அவனால் பேசாமல் இருக்க முடியவில்லை. அவன் பேச ஆரம்பித்த கணமே கண்களில் நீர்த் திரையிட்டது! குரல் தழுதழுத்துத் தடுமாறியது!

"ரோவீனா!...என் அன்பே!...என்னை மன்னித்துவிடு!......ரோவீனா!......மனித உள்ளம் அற்ற மிருகம் நான்!...ஆம்; மிருகம்தான்!...... பதவி மோகம் என் அறிவை அகற்றி விட்டது! பட்ட மோகம் என் அறிவை மட்டப்படுத்தி விட்டது!......ரோவீனா என்னை மன்னித்துவிடு!

"தளபதி பானர்மேனின் பார்வையிலே—அவன் அளித்த பட்டத்திலே பகுத்தறிவைப் பறிகொடுத்து 'உயிரைக் கொடுத்தாகிலும் வீரபாண்டியனைப் பிடித்துத் தருகிறேன்!' என்று பத்திரத்திலே கையெழுத்து...இல்லை,... துரோகம்......ஆம், துரோகம் செய்து விட்டேன்!"

அவன் குரல் தழு தழுத்தது. கண்களில் நீர் வழியத் தலைகுனிந்து நின்று கொண்டிருந்தான்!

ஒருவன் விடும் கண்ணீர் தானே அவன் தன் குற்றத்தை உணர்ந்ததின் எடுத்துக் காட்டு! இனி குற்றத்தை உணர்ந்து என்ன பயன்? வயதானவன் திரும்பவும் வாலிபத்தைப் பெற முடியுமா? பத்திரத்தில்தான் கையெழுத்துச் செய்து விட்டானே! கடமை அவனைப் பிடித்துத் தள்ளுகிறதே!

ரோவீனாவின் வதனத்தில் வறண்ட புன்னகை மின்னியது. "சார்லஸ்! மன்னிப்பு!...... யார் மன்னிப்பது! நானா? நான் மன்னித்து என்ன பயன்!" என்றாள்.

சிறிது நேரம் நிசப்தம் நிலவியது!

மறுபடியும் ரோவீனாவின் வதனத்தில் புன்னகை தவழ்ந்தது. ஆனாலும் அது வெற்றிப் புன்னகை!

"சார்லஸ்!... ஒரு யோசனை......ஆம், இந்த இடத்தை விட்டே நாம் கண்காணாமல் சென்று விட்டால் என்ன!" என்ற ரோவீனாவின் குரலில் ஆர்வம் ஒலித்தது.

ரோவீனாவின் திட்டம் சார்லஸைத் திடுக்கிடச் செய்தது! பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பியைத் தன் உடல் மீது வைப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது!

"ரோவீனா! முடியாது!...முடியாது!..." என்று மெள்ளத் தலையை அசைத்த அவன் குரலில் ஜீவன் இல்லை.

"பானர்மேன் எங்கு சென்றாலும் விடமாட்டான்!...கடமையினின்று விலகுவது வீரனுக்குச் சிறிதும் அழகல்ல!" என்று சொன்ன அவனுக்கு அதற்குமேல் பேச நா எழவில்லை.

ஆம்! கடமையினின்று விலகுவது வீரனுக்கு அழகல்ல! உண்மைதான்! ஆனால் நன்றி மறப்பது வீரனின் முதற் கடமையோ! அதுதான் அழகோ! மனச் சாட்சியின் சாட்டை அது!

"சார்லஸ்! உன் கடைசி முடிவு என்ன! மன்னிப்பு அளித்து உன் உயிரைக் காத்த அந்தத் தமிழனைப் பிடித்துக் கொடுக்கும் பணிதானா!" என்ற ரோவீனாவின் குரலில் கோபம், ஆத்திரம் யாவும் தொனித்தன!

கற்சிலையாக நின்ற சார்லஸின் செவிகளில், "மன்னிப்பு!...மன்னிப்பு! நன்றி! நன்றி...!" என்ற சொற்கள் பயங்கரமாக ஒலிக்க ஆரம்பித்தன. அவனால் நிற்கவே முடியவில்லை. இதயத்தைப் பிடித்து யாரோ கசக்குவது போன்றிருந்தது.

திடீரென்று பிரமை பிடித்தவன் போல் அவ்விடத்தை விட்டு அவன் ஓட ஆரம்பித்தான்! ஓடிக் கொண்டே யிருந்தான். ரோவீனாவும் சாளரத்தின் வழியாக வான முகட்டை நோக்கியவாறு உணர்ச்சியற்று நின்று கொண்டிருந்தான்.

### 3

வஞ்சகம் எழுந்தது; துரோகம் தூண்டியது! சூழ்ச்சி துணை புரிந்தது; விதி விளையாடியது! சந்தர்ப்பம் சதி செய்தது. ஆங்கிலேயர்—கும்பனியர் பட்டாளங்கள் வீரபாண்டியனைச் சூழ்ந்து கொண்டன!

தனிமையாக நின்ற வீரபாண்டியனை நோக்கிச் சென்றனர் ஆங்கிலேய சிப்பாய்கள். கரத்திலே வாளுமின்றிச் செய்யும் வகையறியாமல் திகைத்து நின்றான் வீரத் தமிழன். சந்தர்ப்பத்தின் சதி எவ்வளவு பொல்லாதது...!

அதேகணம் ஒரு ஆங்கிலேய வீரனும் திகைத்து நின்றான்! ஆம்; சார்லஸ்!...தான் தனிமையாக நின்ற போது தஞ்சம் அளித்து, மன்னிப்பும் அளித்த வீரனுக்கு விலங்கிட வேண்டிய நிலை அவனுக்கு ஏற்பட்டு விட்டது! தளபதி பானர்மேன் விலங்குச் சங்கிலியைச் சார்லஸிடம் தான் கொடுத்திருந்தான்.

சார்லஸ் நடுங்கும் கரங்களுடன் அந்த வீர மனிதனின் கரங்களில் விலங்கிட்டான்! அவன் நன்றி எங்கே!

ஆம்; பானர்மேனின் கட்டளையிலே, அவன் அளித்த பதவியிலே, பட்டமென்னும் சேற்றிலே புதைந்து விட்டது!

தன் கரங்களுக்கு விலங்கிட வந்த சார்லஸின் முகத்தைப் பார்த்த வீர பாண்டியனின் வதனம் கருங்கிற்று! கண்கள் இரத்தமெனச் சிவந்தன!

விலங்கிட்டு முடித்த சார்லஸ் வீரபாண்டியனின் வதனத்தை நோக்கினான். அப்பொழுது அவன் கண்முன் ஆயிரக்கணக்கான வீர பாண்டியனின் வதனங்கள் தோன்றின. உடனே அவைகள் வட்டமாகச் சுற்றத் தொடங்கின. வெகு வேகமாகச் சுற்றிக் கொண்டே யிருந்தன! அந்தச் சுழற்சிக்கிடையே ரோவீனாவின் முகம் தோன்றிப் பயங்கரமாகச் சிரித்தது!

துவண்டிருந்த ரோவீனாவின் மெல்லிய தளிர் உடல் பஞ்சணையில் சஞ்சலத்துடன் படுத்திருந்தது. அப்பொழுது அங்கே நுழைந்த சார்லஸின் உடல் வெட்கத்தால் தளர்ந்து காணப்பட்டது.

அவனைப் பார்த்த ரோவீனா சட்டென்று எழுந்து பேசலானாள்:

"வீர பாண்டியனின் விலங்குச் சாவி உன்னிடம் இருப்பதாக அறிந்தேன். சிறைக்கூடத்துச் சாவி

யும் இருப்பதாகத் தெரிகிறது!" என்று அவன் கூறியபோது சார்லஸைத் தூக்கி வாரிப் போட்டு விட்டது! ஆம்; அது உண்மையே.

"சார்லஸ்! நன்றி மறப்பது மனிதகுல மாண்புக்கே இழுக்கு! அந்தச் சாவியைச் சரியாகப் பயன்படுத்தி அந்தத் தமிழனுக்கு விடுதலை கொடுத்து உன் நன்றியைத் தெரிவித்துக்கொள். உயிரைவிட நன்றி மேலானது. உயிரை விட்டாலும் உன் நன்றி உண்மையாகட்டும்! நன்றி தெரிவிக்காத வரையில் உன் காதல் என்வரை இறந்தது தான்!" என்று ஆத்திரத்துடன் உணர்ச்சி வசப்பட்டுக் கூறிமுடித்த ரோவினா தன் அறைக்குச் சென்று கதவுகளைப் படீரென்று மூடிக் கொண்டாள்.

நன்றி தெரிவிக்க விரும்பிய சார்லஸ் வீரபாண்டியனை விடுவிக்க விரும்பினான்! ரோவினாவின் காதலை விரும்பிய அவன் இதயம் அதற்கு முற்றிலும் இடமளித்தது!

ஆனால்......!

மறுகணம் பானர்மேனின் பயங்கரப் பார்வை, அவன் அளித்திருந்த பட்டம், பதவி—இவை யாவும் சார்லஸ் கண்முன் தோன்றி முன்பு தோன்றிய எண்ணத்தைச் சிதறடித்தன.

## 4

1799-ம் வருஷம். அக்டோபர் மாதம் 16-ம் தேதி. தமிழ்த் தாய் தவித்தாள்; கண்ணீர் வடித்தாள். கோழை உள்ளத்துடன் அல்ல; ஒரு உண்மை வீரனைப் பிரியப் போகிறோமே என்ற விசனத்தினால்.

கும்பினி வெள்ளையர்களின் நீதியற்ற விசாரணை முடிந்தது. பேனாவாலும் எழுத மனம் பேதலித்துக் கூசும் தூக்குத் தண்டனை அளிக்கப்பட்டது, வீரபாண்டியனுக்கு! ஆங்கிலேயர் பட்டாளத்தின் தளபதி பானர்மேன் தமிழ்த் தாய்க்குச் செய்த பணி.

சுதந்திர மாலை அணிய வேண்டிய வீரனின் கழுத்துக்குச் சுருக்குக் கயிறு! அதை நிறைவேற்றும் பணி சார்லஸுக்கு! இதுவும் பானர்மேனின் திருப்பணி. மன்னிப்பு அளித்து உயிரைக் காப்பாற்றிய உத்தமனின் உயிரைப் போக்கும் பணி சார்லஸினுடையது. அவன் இதயம் அதற்கு இடமளித்ததா!

தூக்குக் கயிறு தொங்கிய புளிய மரத்தடியிலே நின்று கொண்டிருந்தான் சார்லஸ். அவன் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. உள்ளம் மனச்சாட்சி என்னும் தீயில் வெந்து கொண்டிருந்தது!

வீரசிங்கம்—சுதந்திர வீரன்—தமிழ் நாட்டின் திலகம் வீரபாண்டியக் கட்டபொம்மன் தூக்கு மேடையை நோக்கி விரைந்து சென்றான், வறண்ட பார்வையுடன்! தூக்கு மேடையான நாற்காலியின் அருகே நின்று கொண்டிருந்த சார்லஸைச் சுட்டெரிப்பவன் போல் நோக்கினான்.

சார்லஸின் மயிர்க் கால்கள் குத்திட்டு நின்றன! அவன் சற்றே விலகினான்.

நாற்காலியின் மீது ஏறி நின்றது அந்த வீரக் களஞ்சியம்!

அங்கிருந்த எல்லோரையும் நோக்கினான். எண்ண மேகங்கள் மோதின!

"அடிமைப் படலம் தமிழன் ஆதி சரித்திரத்திலும் கிடையாது!...இன்று பரங்கியன் முன் படிந்து நிற்கிறான்...காலத்தின் கோலம்!" பரங்கியர் பட்டாளத்துக்குப் பயந்து தலைகுனிந்து நின்ற தமிழர்களைப் பார்த்துக் கூறியவையே இவை!

விலங்கிட்டு நிறுத்தப்பட்டிருந்த தம்பி ஊமைத்துரையை நோக்கினான். வீரபாண்டியன் வதனத்தில் என்றுமில்லாத புன்னகை தவழ்ந்தது!

"மடமை மடியட்டும்! கடமை ஓங்கட்டும்! கோழைகள் வீழட்டும்! வீரர்கள் வாழட்டும்!" என்பதைத்தான் அந்தப் புன்னகை அறிவித்திருக்க வேண்டும்.

அடுத்த கணம்!—தூக்குக் கயிற்றை கழுத்திலே மாட்டும்படி ஒரு கட்டளை பிறந்தது சார்லஸுக்கு! அருகே வந்த சார்லஸைத் தன் கரங்களால் தட்டி விட்டான் வீரபாண்டியன்! ஒரே கணம் அவனை உற்றுப் பார்த்தான். அப்பொழுது இதைத்தான் அவன் எண்ணியிருக்க வேண்டும்.

"மன்னிப்பு வேண்டி நிற்கும் மனிதனை மாய்க்க மாட்டான் தமிழன்! கருணை காட்டுவான்!

"மன்னிப்பு!—இதுதான் அவனிடம் இருக்கும் தனிப் பண்பு! நன்றி!—இது அவன் உதிரத்திலே உறைந்து கிடக்கும் பண்பு!

"ஆம்; சார்லஸ், உன் நன்றி எங்கே!"

மறு கணம்!......

வாளைச் சுற்றிய வலிமையான கரம், வேண்டுவோர்க்குப் பொருளை வாரிக் கொடுத்த கரம், மன்னிப்பு அளித்த மாண்பு மிக்க கரம் அந்தத் தூக்குக் கயிற்றைப் பற்றியது! ஒரே கணம் கண்களை மூடினான். இடர் வந்தபோதும் சுதந்திர அன்னையைத் தொழுதலை விடாத தமிழன் வேறு என்ன செய்திருக்க முடியும்!

அந்தோ!

ஆ! என்ன வீரம்! என்ன ஆண்மை! எண்ணவும் முடியாத துணிவு! கயிற்றைக் கழுத்திலே பிணைத்துக் கொண்டான்!

மண்ணுலகிலே சுதந்திரமாக வாழ முடியாத அந்த வீரனின் ஆவி விண்ணுலகிலே சுதந்திரமாக விரைந்து சென்றது; முடிவில்லாமல் சென்று கொண்டே யிருந்தது!

## 5

உள்ளம் உழல, தோளிலே துப்பாக்கியைச் சுமந்து கொண்டு ரோவினாவின் வீட்டை அடைந்தான் சார்லஸ். வீடு களையிழந்திருந்தது. ரோவினாவைக் காணவில்லை!

அவன் அறையை நோக்கிச் சென்றான், தயங்கியவாறே. அறைக் கதவுகள் மூடப்பட்டுக் கிடந்தன!

ஒரு கண நேரம் கதவருகே நின்றான். அந்தக் கண நேரத்தில் அவன் கேட்ட அரவம் அவனைத் திடுக்கிடச் செய்தது!

அறைக் கதவுகளைத் திறந்தான்.

அப்பா! அவன் அங்கு கண்ட காட்சி!...ஆம்; ரோமங்களைக் குத்திடச் செய்தது! இதயத்தை இரண்டாகப் பிளந்து கசக்கிப் பிழிந்து உயிரை வதைத்தது!

ஆம்! ரோவினா — ஆங்கிலேய மாதர்களின் மாணிக்கம் தரையிலே வீழ்ந்து கிடந்தாள். வலது கரத்திலே சிறிய கைத்துப்பாக்கி துலங்கியது!

சார்லஸைப் பார்த்தாள் ரோவினா. அதுவும் ஒரு நிமிடம்! வறண்ட புன்னகை வெளிப்பட்டது! கண்கள் வெறுப்பைக் கக்கின!

அவள் வாய் "நன்றி கெட்டவனே!" என்று முணுமுணுத்தது.

அடுத்த கணம்......

உடலும் உயிரும் வேறாயின...! சற்றே மலர்ந்த அவள் வதனம் வாடியது! அமைதி நிலவியது!

"ரோஸீனா! நான் நன்றி கெட்டவன்!" என்று உரக்கக் கத்தினான் சார்லஸ்! சட்டென்று மண்டியிட்டு அவளருகே கிடந்த ஒரு கடிதத்தை எடுத்த போது அவன் கரம் நடுங்கியது. படிக்க ஆரம்பித்த போது ஊற்றெனக் கண்ணீர் சுரந்தது!

"என் அன்புக்கு அருகதையற்ற சார்லஸுக்கு,

'சிறைக் கூடச் சாவியைப் பயன்படுத்தி அந்தத் தமிழனுக்கு நன்றி தெரிவி என்றேன். கடமை என்று கூறிக் கண்டிப்பாக மறுத்தாய்!

'உன் இதய நன்றி எங்கே? நீயும் ஒரு மனிதன்தானா?

'எந்த ரோஸீனாவை நீ காதலித்தாயோ, அவளுக்காக நீ வருந்த வேண்டும்; துடிக்க வேண்டும்! அதற்காகவே துப்பாக்கி கொண்டு என் உயிரை மாய்த்துக் கொள்கிறேன்.

'மன்னிப்பு என்பது உன் வாழ்வில் இனி கிடையாது! நீ என்றுமே வாழ்க்கை உள்ளளவும் குற்றவாளி!

'நீ அந்தத் தமிழனுக்குச் செய்த அபகாரத்திற்காக வருந்து; அழு; சுதறு!'

—ரோஸீனா."

கடிதத்தைப் படித்து முடித்த அவன் பயங்கரமாகச் சிரித்தான்!

"மன்னிப்பு என்பது உன் வாழ்வில் இனி கிடையாது! நீ என்றுமே வாழ்க்கை உள்ள அளவும் குற்றவாளி!"—என்று பல குரல்கள் தன் சிரிப்புக்கிடையே ஒலிப்பன போன்று உணர்ந்தான்!

குருதி சோர அமைதியாகப் படுத்திருந்த ரோஸீனாவின் வதனம் "என் வரையில் உன் காதல் செத்து விட்டது!" என்று பயங்கரமாகப் பறையடித்தது.

"ரோஸீனா! நான் துரோகி! நன்றி கெட்டவன்! உயிரை விட்டாகிலும் கடமைக் கட்டை அறுத்து நன்றி தெரிவித்திருக்க வேண்டியவன்! கடமை என்று கூறினேன்! ஆம்; அதை ஏற்படுத்திக் கொண்டவன் நான்தானே!

"பட்டத்தை விரும்பி நன்றி என்னும் சட்டத்தை மீறியவன்! பதவி மோகத்தால் ஒருவன் அளித்த உதவியை மறந்தவன்! உயிர்ப் பிச்சை அளித்த உத்தமனைக் கொன்றவன்!

"எனக்கு மன்னிப்பே இல்லை! உயிர் உள்ள அளவும் மன்னிப்பே இல்லை!" என்று பித்தனைப் போன்று கதறினான் சார்லஸ்! கண்கள் சிவந்து நீரைக் கக்கின! பலமாகப் பைத்தியக்காரனைப் போலச் சிரித்தவாறே உயிரற்ற ரோஸீனாவின் மீது விழுந்தான்.

தன் துப்பாக்கியை உற்று நோக்கினான்! மற்றொரு முறை பலமாகப் பயங்கரமாகச் சிரித்தான்!

அந்தத் துப்பாக்கியைத் தன் வஞ்சகமான நெஞ்சிலே — துரோகம் கொண்ட தொண்டைக்கு நேராகக் குறி வைத்தான்.

மறு கணம்!!!

நெஞ்சிலே உதிரம் பெருக அவனை அணைத்த அவள் உடல் அமைதி பெற்றது! அவன் ஆவி விண்ணுலகை நோக்கி விரைந்து சென்றது!

ஆம்; தன் குற்றத்தை உணர்ந்தால்கூட மன்னிப்பு அளிக்கும் அந்த வீர பாண்டியனின் ஆவியை நோக்கித்தான் சென்றிருக்க வேண்டும்!

வீர பாண்டியனின் ஆவி அவனை மன்னிக்கலாம். ஆனால் சார்லஸின் மனச்சாட்சி அவனை மன்னிக்குமா! மன்னிக்க நினைக்கவும்தான் செய்யுமா!



**சு**கபால் அப்படி திடுதிப்பென்று எழுந்து சென்ற சிறிது நேரம் கழித்துத்தான் குஸுமாவுக்குச் சுய உணர்வு வந்தது. 'சுகபால் நமக்கு முன்னாலேயே இங்கே வந்து உட்கார்ந்திருப்பானா அல்லது பின்னால் தான் வந்திருப்பானா?' என்ற யோசனையில் குஸுமா ஆழ்ந்து விட்டாள்.

முன்னாலேயே அவன் வந்து உட்கார்ந்திருந்து இவள் பின்னால் வந்திருந்தால், அவள் நடந்து கொண்ட விதம் அவனுக்கு எப்படிப் பட்டிருக்கும்? அவன் மனத்தில் என்ன எண்ணியிருப்பான்? அதுவும் இல்லாமல் அவன் சட்டென்று இங்கிருந்து எழுந்து சென்று விட்டானே? அதற்கு என்ன காரணமாயிருக்கலாம்?

அவளுக்கு அங்கே தனிமையில் உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. எனவே, எழுந்து 'கர்பா' நடனம் நடந்து கொண்டிருக்கும் இடத்துக்குத் தானும் சென்றாள்.

வழியில் சாந்திப் பிரியன் அவளைக் கூப்பிட்டு, "குஸுமா! உங்களைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறோம்!" என்றான்.

அப்பொழுது அங்கே சாந்திப் பிரியனும் ரமேஷும் நின்ற வண்ணம் ஏதோ பேசிக் கொண்டிருந்தார்கள். குஸுமா அவர்களுக்கு அருகில் சென்று நின்றாள்.

"இனி நீங்கள் குறுக்கிட்டுத் தடுக்கக் கூடாது!" என்றான் சாந்திப் பிரியன். அவன் என்ன சொல்கிறான், ஏது சொல்கிறான் என்று அவளுக்குப் பிடிபட்டால் தானே? எதைத் தடுக்கக் கூடாது? எதற்காகத் தடுக்கக் கூடாது? ஏன் தடுக்கக் கூடாது?— இந்தக் கேள்விகளை எல்லாம் பிரபல பத்திரிகாசிரியனை அவனிடம் கேட்பது உசிதமாகுமா? இந்த உலகத்தில் பத்திரிகை என்று ஒன்று இருக்கும் வரையில், முன்னேறுவதற்கான மார்க்கம் — அதுவும் ராஜமார்க்கம் என்று சொல்ல வேண்டும்—அதுவாகத்தான் இருக்கிறது என்பது ஐயந்திரிபுக்கு இடம் இன்றித் தீர்மானமாகியிருக்கிறதே!

"நான் இவரிடம் இன்றைய நிகழ்ச்சிகளைப்பற்றிய விவரங்களை நம் பத்திரிகையில் வெளியிடுவதற்காகக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். இன்றைய வெற்றிகரமான ஏற்பாட்டுக்காகத் தங்களுக்கு நன்றி தெரிவிப்பது பத்திரிகாசிரியனான என் கடமை அல்லவா? ஆனால் உங்கள் ரமேஷ் எனக்கு எந்த விஷயத்தையும் விவரமாகச் சொல்ல மறுக்கிறார்!" என்றான் சாந்திப் பிரியன்.

"நீங்கள் இங்கே பார்த்ததை எழுத வேண்டியதுதானே? இதைத் தவிர உங்களுக்கு வேறு என்ன தகவல் தெரிய வேண்டும்?" என்று கேட்டாள் குஸுமா.

பத்திரிகையில் தன் பெயர் அச்சாகிக் காண வேண்டும் என்ற ஆசை குஸுமாவின் மனத்தில் இலேசாக எழுந்தது. செய்தித் தாளில் உள்ள கவர்ச்சி அவளையும் ஆட்கொண்டதில் என்ன வியப்பு? பத்திரிகையின் ஒரு மூலையில் எங்கேயாவது தன் பெயரைக் காணும் பாக்கியம் எவனுக்காவது கிடைத்தால், அவனுக்கு அன்று சொர்ண மயமான சூரியன் தன் தங்கக் கிரணங்களை வீசிக் கொண்டு தகதகாயமாகப் பிரகாசிப்பது போலவே தோன்றத் தொடங்குகிறதே! அப்படியிருக்கும்பொழுது அவளுக்கு மட்டும் அத்தகைய ஆசை ஏற்படாதா, என்ன?

"உங்கள் புகைப்படம் ஒன்று எனக்கு வேண்டும் என்று இந்த ரமேஷைக் கேட்கிறேன். ஆனால் இவரோ என்னிடம் கேட்காதீர்கள் என்கிறார். அதனால் உங்களிடமே கேட்கிறேன். பிளாக்கு தயார் செய்து நான் என் பத்திரிகையில் வெளியிடப் போகிறேன். உங்களால் தர முடியும் அல்லவா?" என்று கேட்டான் சாந்திப் பிரியன்.




## 2. கர்ஜனையும் கிண்டலும்

"நான் அப்பாவைக் கேட்டுப் பார்க்கிறேன்!" என்று கூறிய குஸுமா 'கர்பா' நடனம் காண்போரின் கூட்டத்தில் தானும் ஒருத்தியாகக் கலந்து கொண்டு விட்டாள்.

**ந**டனம் முடியும் பொழுது இரவு வெகு நேரம் ஆகி விட்டது. விருந்தாளிகள் ஒவ்வொருவராக விடை பெற்றுக் கொண்டு தங்கள் தங்கள் வீட்டுக்குச் சென்றார்கள்.

குஸுமா தன் அறைக்குச் சென்று படுக்கையில் படுத்தாள். அவளுக்குத் தூக்கம் வந்தால்தானே? அவள் கண்களை மூடினால் உடனே மூன்று முகங்கள் அவள் கண்ணெதிரே நடனமாடத் தொடங்கின. அவை வேறு யாருடைய முகமும் அல்ல. சுகபால், சாந்திப் பிரியன், ரமேஷ் ஆகிய மூவருடைய முகங்களும்தான்!

அந்த அழகிய மூன்று முகங்களுமே கவர்ச்சிகரமானவையாக இல்லையா?

ஸர் பிஹாரிலாலின் அழகிய மாளிகையிலிருந்து கொஞ்ச தூரத்தில் அவருடைய தோட்டத்துக்குள்ளேயே மொட்டை மாடிக் கட்டிடம் ஒன்று இருந்தது. அதில்தான் ரமேஷ் வசித்து வந்தான்.

ஸர் பிஹாரிலாலுக்குப் படிப்பில் வெகு ஆர்வம். வியாபாரத்தையும் தொழிலையும் படித்து அதில் வெற்றியும் கண்ட பிறகு, எழுதப் படிக்கக் கற்றுக் கொள்வதென்றால் ஜனங்களுக்குப் பொதுவாகவே அநாவசியம் என்றும் வீண்கால விரயம் என்றும் தோன்றுவது சகஜம். ஆனால் பிஹாரிலாலுக்கு அப்படித் தோன்றவில்லை. செய்தித் தாள்கள் மாத, வாரப் பத்திரிகைகள் உயர்ந்த ரகமான நூல்கள் ஆகியவற்றைப் படிக்காமல் அவரால் இருக்க முடிவதில்லை. பொதுவாக வியாபாரம் ஒரு முறை நன்றாக வேரூன்றி விட்டால், அப்புறம் அதன் முதலாளிக்கு அது சம்பந்தமாக அதிகம் கண்காணித்துக் கவனிக்க வேண்டிய அவசியம் ஏற்படுவதில்லை. பிஹாரிலால் நேரம் கிடைக்கும் பொழுதெல்லாம் மற்ற பொழுது போக்குகளைக் குறைத்துக் கொண்டு படிப்பதில் அதிகக் கவனம் செலுத்தி வந்தார்.

அவர் எப்பொழுதுமே நல்ல படிக்கத் தகுந்த கட்டுரைகளைத் தேடிச் சேகரிப்பார். அவற்றிலிருந்து நல்ல உபயோககரமான விஷயங்களைப் பொறுக்கித் தனியாகக் குறிப்பில் எழுதியும் வைத்துக் கொள்வார். சிற்சில சமயம் நல்ல புஸ்தகங்களாகப் படிக்கக் கிடைத்து விட்டால் அவற்றைப் பற்றித் தம் ஆராய்ச்சிகளையும் அபிப்பிராயங்களையும் எழுதி வைத்துக் கொள்வார். ஆனால் தமது நோக்கங்களை அச்சிட்டு வெளியிட வேண்டும் என்றோ மக்களிடையே வழங்கி அவர்களுக்கு நலனையும் பலனையும் அளிக்க வேண்டும் என்றோ அவருக்கு அவா உண்டானதில்லை.

டாக்டர்கள் கண்களைப் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்று அவரை எச்சரித்திருந்தார்கள். அதை உத்தேசித்து அவர் தமக்கென்று ஒரு அந்தரங்கக் காரியதரிசியை ஏற்பாடு செய்து கொண்டார். அவருக்குச் செய்தித் தாள்கள், பத்திரிகைகள், புஸ்தகங்கள் ஆகியவற்றைப் படித்துக் காட்டுவது, அவருக்குப் பிடித்த விஷயங்களையும் அவர் உயர்ந்தது என்று எண்ணும் விஷயங்களையும் சேகரிப்பது, அவருடைய கடிதங்களை எழுதுவது, அவர் சார்பில் அவரைக் காண வருபவர்களிடம் சாதாரண விஷயங்களாக இருந்தால் அவற்றைப் பற்றிப் பேசுவது போன்றவைதான் அவருடைய காரியதரிசியின் முக்கியமான அலுவல்கள்.

அவர் தம்மிடம் அந்தரங்கக் காரியதரிசியாக வேலை பார்ப்பவர்களை முன்னுக்குக் கொண்டு வருவதற்கான சந்தர்ப்பங்கள் ஏதாவது கிட்டும்பொழுது அவர்களது வருங்காலத்தை உத்தேசித்துத் தம்மால் இயன்ற அளவு உதவி செய்து நல்ல இடத்தில் உத்தியோகம் செய்து வைப்பார். அவன் இருந்த ஸ்தானத்தில் வேறு ஒரு புதிய ஆசாமியைத் தேடிப் பிடித்து வைத்துக் கொள்வார். பெரும்பாலும் அவர் கல்லூரியின் கல் ஏறிப் பட்டம் பெற்று வந்த மாணவர்களையே தம் காரியதரிசியாக வைத்துக் கொள்ளப் பெரிதும் விரும்புவார். இரண்டு மூன்று வருஷங்கள் அவனைத் தம்மிடம் வைத்துக் கொண்டு, சமயம் வாய்க்கும் பொழுது நல்ல உத்தியோகமாகச் செய்தும் வைத்துவிடுவார். அப்படியிருக்கும்பொழுது யாரும் அவரை நாடி வருவது இயல்புதானே?

முன்பிருந்த காரியதரிசிகள் நல்ல உத்தியோகம் பெற்றுச் சென்றதும் அவருடைய கருணைக் கண் பார்வை ரமேஷின் மீது விழுந்தது. ரமேஷுக்கும் அந்தக் காரியதரிசி வேலை பிடித்துப் போய்விட்டது. அதேபோல் அவன் படித்துச் சொல்லும்முறை பிஹாரிலாலுக்கும் பிடித்து விட்டது. ரமேஷ் நல்லவன், நேர்மையானவன். தான் உண்டு, தன் காரியம் உண்டு என்று இருப்பவன். தனக்கு ஒப்படைத்த வேலையைச் செய்வதைக் காட்டிலும் அதிகமான காரியங்களை இழுத்துப் போட்டுக் கொள்வதிலோ, அதிகப்பிரசங்கித்தனமாகப் பெரிய இடத்துப் பொல்லாப்புகளில் ஈடுபடுவதிலோ அவன் மனம் செல்வதில்லை. அம்மாதிரிக் காரியங்கள் அவனுக்குப் பிடிக்கவும் பிடிக்காது. அம்மாதிரி ஆர்வம் அனர்த்தமாக முடியக்கூடும் என்றே அவன் வெகு சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொண்டான்.

பிஹாரிலாலின் வீட்டுக்கு யார் யார் வருகிறார்கள்? யார் யார் போகிறார்கள்? பிஹாரி



மாது:— நான் வேண்டுமானால் உன்னுடைய விளையாட்டுச் சாமான்களைத் தூக்கிக் கொண்டு வரட்டுமா?

பையன்:— உங்களுக்கு அவ்வளவு சிரமம் வேண்டாம். நீங்கள் என்னைத் தூக்கிக் கொண்டு வாருங்கள், நான் சாமான்களைத் தூக்கிக் கொண்டு வருகிறேன்.

லால் என்ன செய்கிறார்? என்ன செய்வதில்லை? அவருக்கு வரவு என்ன, செலவு என்ன? அவருக்குக் குழந்தைகள் எத்தனை? உற்றார் உறவினர்கள் யார், யார்? அவருடைய பெண்ணுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா, இல்லையா? இது போன்ற விஷயங்களைத் தெரிந்து கொள்ள அவன் ஒரு பொழுதும் விரும்பியதே இல்லை. அவர் எப்படியிருந்தால் நமக்கு என்ன? நமக்குக் கொடுக்கும் காரியத்தை நாம் சரியாகச் செய்ய வேண்டும் என்று எண்ணி எப்பொழுதுமே தண்ணீரில் தாமரை இலையாக ஒதுங்கியே இருந்து வந்தான்.

அவன் பிஹாரிலாலின் வீட்டில் வேலைக்கு வந்து இரண்டு இரண்டரை வருஷங்களுக்கு மேலாகிவிட்டது. அப்படியிருந்தும் அவன் ஆர்வத்தோடு குஸுமாவுடன் வார்த்தையாடினதில்லை; வார்த்தையாட விரும்பியதும் இல்லை. அம்மாதிரிச் சந்தர்ப்பங்களுக்கு இடம் கொடாமலே நடந்து வந்தான். இளம் பிராயத்தினர்களான ஆணும் பெண்ணும் சந்திக்க நேர்ந்தால் பேச வேண்டும் என்ற துடிப்பும் ஆவலும் ஏற்படுமே! அந்த ஆவலுக்கு அவன் அடி பணிந்ததும் இல்லை; இடம் கொடுத்ததும் இல்லை. அம்மாதிரி ஏதாவது புதிய சந்தர்ப்பங்கள் ஏற்படும் போலிருந்தால், ரமேஷ் முந்திக் கொண்டு வெள்ளம் வருவதற்கு முன் அணை கோலிவிடுவான்.

இருட்டுவதற்குக் கொஞ்ச நேரம் முன்னால் பிஹாரிலாலும் குஸுமாவும் உலாவிவர வெளியே புறப்பட்டுப் போய் விட்டார்கள். அவ்வேளையில்தான் 'கர்ஜனை' பத்திரிகையின் புதிய இதழ் ரமேஷிடம் வந்து சேர்ந்தது. இயல்பாக எழுந்த ஆவலில் அதைப் பிரித்துப் படிக்கலானான். சாந்திப்பிரியன், தான் சொன்ன சொல்லை இம்மியளவு கூடப் பிசகாமல் காப்பாற்றி இருந்தான். 'ஏழையின் கண்ணீர்' என்ற தலைப்பில் பிஹாரிலாலும் ஆசிரியனை அவனும் சந்தித்த விவரம் பத்திரிகையில் பிரசுரமாகியிருந்தது. எந்த எந்தப் பிரமுகர்கள் விருந்தாளிகளாக வந்திருந்தார்கள்? அவர்கள் என்ன என்ன செய்தார்கள்? பிஹாரிலால் வந்திருந்த விருந்தினர்களை மகிழ்விப்பதற்காக என்ன என்ன கேளிக்கைகளுக்கு ஏற்பாடு செய்திருந்தார்? இவற்றைப் பற்றியெல்லாம் குத்தலும் கேலியுமாகச் செய்திருந்த வர்ணனைகளைப் படித்த ரமேஷுக்குக் கோபம் கோபமாக வந்தது. 'விருந்துக்கு அழைத்து உபசரித்துக் கௌரவித்து அனுப்பியதற்கு இதுவா பிரதியுபகாரம்? உண்ட வீட்டுக்கு இரண்டகம் நினைப்பதா?' என்று எண்ணி மனம் குமைந்தான் ரமேஷ்.

கடைசிப் பத்தியில் உள்ளத்தை உலுக்கும் வகையில் நிலைமை கீழ்க் குறித்தவாறு வர்ணிக்கப் பட்டிருந்தது. "நம் நாடு முன்னேற்றமடைந்திருந்தால் இந்தச் சந்திப்புக்கு நாம் அளிக்கும் மகத்துவமே வேறாயிருந்திருக்கும். ஆனால் பிஹாரிலால் அவர்கள் 'ஸர்' என்னும் கண்ணை மறைக்கும் கறுப்புக் கண்ணாடி அல்லவா அணிந்திருக்கிறார்! அப்படியிருக்கும்போது தமது அக்கம் பக்கத்தில் தாண்டவமாடும் பயங்கர தரித்திரத்தை அவர் எப்படிக் காண்பார்? ஒரு விருந்துக்காக எட்டாயிரம் பத்தாயிரம் என்று பணத்தைக் கரியாக்கும் இந்த முதலாளிகளிடம், அவர்கள் அளித்த தோட்ட விருந்துக்காகச் செலவழித்த பணத்தைக் கொண்டு குறைந்த பக்ஷம் ஐம்பதினாயிரம் ஏழைகளுக்காவது ஒரு வேளை உணவு அளித்திருக்க முடியும் என்பதை எப்படிச் சொல்வது? யார் சொல்வது? பூனையின் கழுத்தில் மணி கட்டுவது யார்? கல்வியறிவில் தேர்ந்த அவருடைய மகள் குஸுமா 'கர்பா' நடனத்துக்குச் சீரிய முறையில் ஏற்பாடு செய்திருந்தாள். நாளுக்கு நாள் நசித்து வரும் பாரத நாட்டின் பழம் பெருங் கலைக்குப் புத்துயிர் அளித்துப் பாலை வனத்தைச் சோலைவனமாக்கும் முயற்சியில் அவள் ஈடுபட்டது பாராட்டத் தக்கது. அவளுடைய அந்த யோசனை மிகவும் வரவேற்க வேண்டிய விஷயம்தான். இருந்தாலும் இந்த ஒரு விஷயத்தைத் தவிர மற்றவிஷயங்களில் எல்லாம் அவளும் மிகப் பிற்போக்காகவேதான் நடந்து கொண்டாள். அதுமட்டும் அல்ல; அவளுடைய ஆடம்பரமும் பகட்டும் நிறைந்த ஆடையலங்காரங்களில் ஏழைகளின் கண்ணீர் பளிச்சென்று ஒளியிட்டு மின்னுவதைத்தான் காண முடிந்தது. சனியன் பிடித்த இந்த 'ஸர்'களிடமிருந்து பகவான்தான் இந்தப் பாரத புண்ணிய பூமியைப் பாதுகாக்க வேண்டும்!"

ரமேஷ் பத்திரிகையை மேஜையின்மேல் தூக்கி விட்டெறிந்தான். இந்த வாசகங்கள் எத்தனை பேர் மனத்தில் எத்தனை விதமான



"உங்களுடைய தாத்தாவுக்குக் கால் தேவலையா? நடக்கிறாரா?"

"தாத்தா நடக்கவில்லை......வைத்தியம் தான் நடந்து கொண்டிருக்கிறது!"

எண்ணங்களை ஏற்படுத்தியிருக்கும்? இம் மாதிரி எத்தனை திட்டுகள் எந்த எந்த மாதிரியாக 'ஸர்' பட்டம் பெற்றவர்களுக்குக் கிடைக்கும் அல்லது கிடைத்திருக்கும்? அறியாத எத்தனை வாசக நேயர்கள் இந்தியாவின் இந்த 'ஸர்'களைக் காட்டிலும் தங்கள் மேன்மையை எண்ணி மகிழ்வடைந்திருப்பார்கள்? இதையெல்லாம் எண்ணிப் பார்த்த ரமேஷுக்கு மனம் பொறுக்கவில்லை. எதற்காகத்தான் இம்மாதிரியெல்லாம் மனத்தைக் களங்கப்படுத்தக் கூடிய விமரிசனங்களைச் செய்கிறார்களோ என்றுதான் எண்ணினான்.

இம்மாதிரி அவன் யோசனையில் ஆழ்ந்திருந்த பொழுது வெளியிலிருந்து யாரோ வருவது போலத் தோன்றியது. அவன் நிமிர்ந்து பார்த்த மாத்திரத்தில் வருபவனை அடையாளம் கண்டு கொண்டு விட்டான். நல்ல ஆஜானுபாகுவான கட்டு அமைந்த தேகம். நிறம் மாநிறம். ஆனால் முகத்தில் உள்ளத்தை அள்ளும் கவர்ச்சி தாண்டவமாடிக் கொண்டிருந்தது. அத்தகைய லட்சணங்களுடன் உள்ளே நுழைந்தவன் வேறு யாரும் இல்லை. அவனுடைய உயிர் நண்பனான ஜகதீஷ் தான்.



ரமேஷுக்கு அப்பொழுது அவனை என்ன கேட்பது, அவனிடம் என்ன பேசுவதென்றே ஒன்றும் புரியவில்லை. ஜகதீஷ் தன் அருகில் வந்து உட்கார்ந்ததும், "ஏன் அப்பா! உன் பத்திரிகை மக்களின் உள்ளத்தைப் பிரதிபலிப்பது தானா அல்லது நஞ்சைக் கக்குவதா?" என்று கேட்டான்.

"இரண்டும்தான்!" ஜகதீஷ் அமைதியாகப் பதில் அளித்தான். "உள்ளத் துடிப்பின் வேகத்தை அதிகரிக்கக் கூடிய அளவுக்கு அதில் விஷம் தோய்ந்திருக்கிறது. ஏன்? எதற்காகக் கேட்கிறாய்?" என்று கேட்டான்.

"வேகம் தாளாமல் உள்ளத் துடிப்பே நின்று விட்டால் என்ன ஆவது?"

"அதற்காக விஷம் வீணில் ஏன் கவலைப் பட வேண்டும்? தன் காரியத்தைச் சரிவரச் செய்யும். அதற்கு ஏன் இந்த அநாவசியக் கவலையெல்லாம்?" என்றான் ஜகதீஷ்.

"வாஸ்தவம்!"—ரமேஷ் பேசிய முறையிலிருந்து அவனுக்கு அந்தப் பேச்சை வளர்த்தப் பிடிக்கவில்லை என்பது நன்றாகத் தெரிந்தது. அதற்கேற்றாற் போல் அவன் பேச்சை மாற்றி, "ஜகதீஷ்! வெகு நாட்களுக்கப்புறம் அல்லவா வந்திருக்கிறாய்? ஏன் இந்தப் பக்கம் ஆளையே காணோம்!" என்று ஆரம்பித்தான்.

"பேச்சை மாற்றி விட்டாயே! ஏன்? உனக்கு மேலும் இந்தப் பேச்சைத் தொடர வெட்கமாயிருக்கிறதா, என்ன?" என்று கேட்டான் ஜகதீஷ்.

"இல்லை. உன் கண்களுக்கே உன் பத்திரிகை இவ்வளவு கேவலமாகத் தோன்றுகிறதே! அதை எண்ணித்தான் வியந்து கொண்டிருந்தேன்."

"இன்றிலிருந்து எனக்கும் 'கர்ஜனை' காரியாலயத்துக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் கிடையாது. அதிலிருந்து நான் விலகி விட்டேன்!" என்றான் ஜகதீஷ்.

"என்ன? விலகி விட்டாயா?" - ரமேஷுக்கு ஏற்பட்ட ஆச்சரியத்துக்கு ஓர் கங்கு கரை இல்லை. "ஏன் விலகி விட்டாய்? இப்படித் திடுதிப்பென்று விலகக் காரணம் என்ன?" என்று கேட்டான்.

"அந்தப் பத்திரிகை நஞ்சைக் கக்கும் பத்திரிகை"யென்று இப்பொழுதுதானே நீ சொன்னாய்? அதிலேயே இன்னும் கொஞ்ச நாட்கள் இருந்தால் நானே நஞ்சுள்ள நாகமாக மாறி விடுவேனோ என்று எனக்குப் பயமாயிருந்தது. கடைசியில் நஞ்சின் வேகம் அதிகரித்து நானே இறந்து விட்டால்...? அதனால் தான்......!"

"அப்படியானால் இனி மேலே என்ன செய்வதாக உத்தேசம்? ஏதாவது ஒரு இடத்தில் நிலைத்து நிற்கப் பார்க்க வேண்டாமா? இது வரை எத்தனை இடங்கள் மாறி விட்டாய்!" என்றான் ரமேஷ்.

"கிட்டத்தட்டப் பன்னிரண்டு இடங்கள் மாறிவிட்டேன் என்று எண்ணுகிறேன்!" ரமேஷ் கேட்ட அந்த அநுதாபக் கேள்விக்கு ஜகதீஷ் சொன்ன பதில் கடுமையும் கிண்டலும் கலந்ததாக ஒலித்தது.

"அதுதான் கேட்கிறேன். இப்பொழுது என்ன செய்வதாக உத்தேசம்?"

"வயிற்றுப் பாட்டைத் தீர்த்துக் கொள்ள வேறு வழி தேடித்தான் ஆகவேண்டும்!"

"உன் வாழ்வு முழுவதும்தான் இந்த மாதிரி முயற்சிகளிலேயே கழிந்து விட்டதே!"

"வாழ்வு முழுவதுமா? என்னை நீயே அதிக நாள் உயிர் வாழ விட மாட்டாய் போலிருக்கிறதே! எனக்கு வயது இருபத்தைந்து தானே ஆகிறது? இருபத்தைந்து என்பது ஒரு வயதா? உயிரை விடுவதற்கு இன்னும் எத்தனையோ நாட்கள் இருக்கிறதப்பா!"

"அது கிடக்கட்டும், அப்பா! இந்த இடத்தை நீ இப்படித் திடீரென்று விட வேண்டிய காரணம்? எத்தனை உழைப்புக்கும் முயற்சிக்கும் பிறகு இந்த இடம் கிடைத்



திருக்கிறது? அதற்குள் அதை மறந்து இப்படித் திடுதிப்பென்று வேலையை விட்டு விட்டாயே!" என்றான் ரமேஷ்.

அதைக் கேட்ட ஜகதீஷ் சற்றுத் தயங்கினான். ரமேஷ் சொன்ன குற்றச் சாட்டுகளைப் பற்றிய சிந்தனை அவன் மனத்தில் ஓடியது. பிறர் தன்னைப் பற்றிக் குறை கூறிப் பேசுவதை அவன் காணச் சகித்ததில்லை. அவன் சுபாவம் அப்படி. என்ன செய்வான் அவன்? ஆனால் அவன் அன்று கேட்டது தனது ஆப்த நண்பனான ரமேஷின் சொற்களையும் குற்றச் சாட்டுகளையும் தானே? அதை அவன் அதிகமாகப் பாராட்ட முடியுமா? எனவே, யோசித்தவாறே சற்றுத் தயங்கித் தயங்கி, "ரமேஷ்! இந்த உலகம் முழுவதுமே என்னை அசாவயமானவன் என்று எண்ணுகிறது. ஆனால் இந்த உலகத்தில் எனக்கு வேண்டியவர்கள் என்று மூன்று பேர்கள்தான் இருக்கிறார்கள். அவர்களுக்காக நான் என் உயிரைக் கூட விடத் தயார். அவர்கள் யார் என்று உனக்குத் தெரியுமா, ரமேஷ்!" என்று கேட்டான்.

"முதலாவது கோகிலா மன்னி!"-ரமேஷ் கொஞ்சம் கம்பீரமாக முகத்தை வைத்துக் கொண்டு கூறினான்.

"அவளை வைத்துக் கொண்டு அதிகக் கேலி செய்வது நன்றாயிராது. சரி, வேறு யார், சொல்லு?"

"அப்புறம்...! உன் மனித சாதி இருக்கிறதே, அது! அப்புறம்..."

"அதைத் தவிர வேறு...?"

"எனக்கு என்ன தெரியும்? நீதான் சொல்ல வேண்டும்!"

"சொல்லட்டுமா? உனக்கு நிஜமாகத் தெரியாதா? நிஜமாகத் தெரியாது?" என்று கேட்ட ஜகதீஷ், "நீதான்! வேறு யார்?" என்றான்.

"சரி! ஒப்புக் கொள்கிறேன். நானாகவே இருந்து விட்டுப் போகிறேன். ஆனால் எனக்காக நீ உயிரை விடவேண்டிய தருணம் வர இன்னும் எத்தனையோ காலம் இருக்கிறது! அதற்குள் அவசரப் படாதே!" என்றான் ரமேஷ்.

"சரி, முதலில் இதைப் படி!" என்று சொல்லி ஜகதீஷ் தன் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்தான். ஸர் பிஹாரிலாலுக்கும் சாந்திப் பிரியனுக்கும் நிகழ்ந்த சந்திப்பைப் பற்றிக் கையினால் எழுதப் பட்டிருந்த கட்டுரை அது. அதைச் சிறிது நேரத்துக்கு முன்புதான் ரமேஷ் 'கர்ஜனை' பத்திரிகையில் படித்திருந்தான். ஜகதீஷ் வர்ணப் பென்சிலினால் கோடிட்டு அடையாளம் செய்யப்பட்டிருந்த கடைசிப் பகுதியில் உள்ள ஒரு பத்தியின் விஷயத்தை ரமேஷுக்குச் சுட்டிக் காட்டினான்.

அந்தப் பத்தியில் எழுதியிருந்தது இது தான். "செருக்குடன் இங்கும் அங்கும் சுற்றிக் கொண்டிருந்த பிஹாரிலாலின் உதவியாளரான ரமேஷ் ஜனங்களுக்குத் தமது பகட்டைக் காட்டுவதோடு மட்டும் நிறுத்திக் கொள்ளாமல், வேறு ஒரு முக்கியமான காரியமும் செய்து கொண்டிருந்தார். ஆனால் அந்த விஷயம் அங்கு உள்ளவர்கள் யாருக்குமே தெரியாது. இவரைவிட நல்ல அநுபவம் வாய்ந்த அறிவாளியான உதவியாளர் பிஹாரிலாலுக்குக் கிடைக்கவில்லையா என்பதைப் பற்றி வந்திருந்த விருந்தினர்களிடையே பிரஸ்தாபம் எழுந்து பற்பல விதமான பேச்சுக்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. அழகிற் சிறந்த கல்யாணமாகாத யுவதிகளிடையே முன்பின் அறிமுகம் இல்லாத கட்டிளங் காளையான வாலிபனை எதேச்சையாகப் பழகவிடுவதில் உள்ள

தவறுகளையும், நம் நாட்டின் புராதனமான நாகரிகம் போய்க் கொண்டிருக்கும் சீரழிந்த போக்கையும் சுட்டிக் காட்டி இரண்டொரு நண்பர்கள் ஸர் பிஹாரிலாலின் கவனத்தைக் கவர்ந்தனர். ஆனால் இவ்வளவு தூரம் முற்ற விட்ட பின் அவரால் என்ன செய்ய முடியும்? ஸர் பிஹாரிலாலின் பெண் குஸுமாவும் கல்யாணம் ஆகாதவள். அநாயாசமாக யாரையும் அறிமுகம் செய்து கொண்டு கலகலவென்று பேசிப் பழகி மகிழ்விக்கும் ரமேஷும் கல்யாணம் ஆகாதவர். நெருப்பையும் பஞ்சையும் அருகில் அருகில் வைத்தால் என்ன ஆகும்?''

அதைப் படித்த ரமேஷ் கவலையில் ஆழ்ந்தான். கனவிலும் கருதாத ஒரு காரியத்தைக் கண்ணால் கண்டு விட்டதாகக் காட்டுவதில் இந்தப் பத்திரிகைகள் எவ்வளவு கை தேர்ந்தவைகள் என்னும் விஷயம் அவனுக்கு அப்பொழுது தான் நினைவு வந்தது.

துவேஷமும் நிந்தனையும் தான் புது விரோதத்துக்கு விஷயமாகின்றன. இந்தக் காலத்துப் பத்திரிகைகள் இந்த நோக்கத்துடன் பார்த்தால் எவ்வளவு பயங்கரமானவை என்று விளங்கவில்லையா?



'' எப்படி நின்று பார்த்தாலும் இரண்டு பேரும் ஒரே நிறை தான் இருக்கிறோம்!''

''ஏன்? ஏதோ பெரிய யோசனையில் ஆழ்ந்து விட்டாயே! படித்துப் பாரேன்!'' என்றான் ஜகதீஷ்.

''படித்துப் பார்த்து விட்டேன்! இந்தச் செய்தி 'கர்ஜனை'யில் படித்ததாகத் தெரியவில்லையே!'' என்றான் ரமேஷ்.

''படித்திருக்க முடியாதுதான். இதற்காகத் தானே நான் வேலையைவிட நேர்ந்தது!''

''இதற்காகவா? அதெப்படி?''

''கட்டுரை அச்சாவதற்காக என்னிடம் வந்தது. கடைசித் திருத்தம் நான்தான் செய்வது வழக்கம். சாந்திப் பிரியரிடம் சென்று இந்தப் பத்தியை எடுக்கச் சொல்வது வீண் பிரயாசை என்று எனக்குத் தோன்றியது. ஆனால் நான் என் உரிமையை உபயோகித்து இதை எடுத்து விட்டேன். பத்திரிகை அச்சாகி வெளி வந்த பின்னர்தான் சாந்திப் பிரியர் அதைப் படித்தார். அதில் அவர் எழுதிய இந்தப் பத்தி இல்லை. அப்புறம் நடந்ததுதான் இப்பொழுது உனக்குத் தெரிந்த விஷயம்!''

''அது சரி! அதற்காக நீ வேலையை விடுவானேன்?'' என்றான் ரமேஷ்.

ஜகதீஷ் சிரித்தான். அந்தச் சிரிப்பைக் கொண்டே அவன் பதில் சொல்லி விட்டதாகத் தோன்றியது. பேச்சு சுவாரஸ்யத்தில் வாசலில் யார் வந்து நிற்கிறார்கள் என்பதை ரமேஷ் கவனிக்கவில்லை. 'எவனுக்கு உத்தியோகம் தான் ஜீவாதாரமோ அவன் எதற்காக உத்தியோகத்தை விட வேண்டும்?' என்னும் விஷயத்தைப் பற்றி அப்பொழுது அவன் யோசித்துக் கொண்டிருந்தான். யோசிக்க யோசிக்க அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. வாசற்படியில் ஸர் பிஹாரிலாலும் அவர் பெண் குஸுமாவும் வந்து நின்று கொண்டிருந்தார்கள். அவர்கள் வந்த விவரம் யாருக்குமே தெரியவில்லை. பிஹாரிலால் ''ரமேஷ்!'' என்று வாசலில் நின்றவண்ணமே ரமேஷுக்குக் குரல் கொடுத்தார்.

ரமேஷ் துணுக்குற்று வாசப் புறம் பார்வையைத் திருப்பினான்.

''இன்று ஒன்றும் பத்திரிகை வரவில்லையே!'' என்று கேட்டார் பிஹாரிலால்.

'' 'கர்ஜனை' வந்திருக்கிறது. கொண்டு வருகிறேன்!'' என்று சொல்லி அவன் எழுந்தான்.

''உன் நண்பர் வந்திருந்தால் உட்கார்ந்திரு. குஸுமா எனக்குப் படித்துச் சொல்வாள்!'' என்றார் பிஹாரிலால் மரியாதைக்கு. ரமேஷ் தன் நண்பனுடன் உட்கார்ந்திருக்கிறான் என்பது அவருக்குத் தெரிந்து விட்டது. வெளியே உலாவப் போய்விட்டு வரும் பொழுதெல்லாம் அவர் ரமேஷின் வீட்டு வாசல் வழியாகத்தான் போக வேண்டும். அதனால் எத்தனையோ தடவை அவர் அவன் வீட்டு வாசலில் வந்து நின்று கொண்டு அவனை அழைத்திருக்கிறார். இன்றும் அந்த மாதிரித் தான் அழைத்தார்.

குஸுமா உள்ளே வந்து பத்திரிகையை எடுத்துக் கொண்டாள். ''பொழுதாகி விட்டது. நான் வருகிறேன்!'' என்றான் ஜகதீஷ்.

''அப்புறம் எப்பொழுது நாம் சந்திக்கலாம்?'' என்று கேட்டான் ரமேஷ்.

''நீதான் ஒருநாள் என் வீட்டுக்கு வாயேன்!'' என்றான் ஜகதீஷ்.

குஸுமா, ரமேஷ், ஜகதீஷ் மூவரும் அறையிலிருந்து வெளியே வந்தார்கள். மெதுவாக அவர்கள் முன்னால் போய்க் கொண்டிருந்த பிஹாரிலாலைச் சமீபித்து விட்டார்கள். ஜகதீஷ் அங்கிருந்து வீட்டுக்குப் போகத் திரும்பினான்.

போகும் பொழுதே அவன் காதில், ''நாம் ஒரு பத்திரிகை கட்டாயம் ஆரம்பித்தாக வேண்டும்'' என்று ரமேஷ் சொல்லிக் கொண்டிருந்தது விழுந்தது.

ஆனால் பிஹாரிலாலோ குஸுமாவோ அதற்கு என்ன பதில் சொன்னார்கள் என்பது தான் அவன் காதில் விழவில்லை. (தொடரும்)



# அன்பில் அணைந்த குரோதம்

வசுமதி

மாலை நேரக் காட்சிகள் மலைநாட்டின் அழகைப் பன்மடங்கு அதிகரிக்கச் செய்கிறது. அன்று அருவியின் கரையில் எங்கள் குடும்பம் இன்ப நினைவில் அமிழ்ந்திருந்தது. குழந்தைகள் சிறு சிறு கற்களை அருவியில் எறிந்துவிட்டுக் கையைத் தட்டிக் குதித்தார்கள். அடிக்கடி மழை பெய்து கொண்டிருந்ததால் அருவி பொங்கிப் பூரித்து 'சோ'வென்று விழுந்து கொண்டிருந்தது. அருவி விழும் வேகத்தில் தெறிக்கும் நீர்த் திவலைகள் நவரத்தினமென நினைக்கும்படி இருந்தது.

நகரத்தில் வேளைக்கு ஒரு வாசனையுடன் வரும் குழாய்த் தண்ணீரைக் குடிக்கும் எங்களுக்குக் கைலையில் வாழும் பரமசிவனின் பாத தீர்த்தமென அருவி நீர் தோன்றியது. தண்ணீருக்குச் செத்த செடிகளைப் பார்த்த எங்கள் கண்களுக்குக் கண்ணுக்கெட்டும் தூரம் பச்சைக் கம்பளங்கள் விரித்தது போன்ற காட்சிகள் இனிமையாக இருந்தன. சலசலவென்று விழும் தண்ணீரின் சத்தம் 'ஓம்' 'ஓம்' என்ற பிரணவ மந்திரத்தை ஓயாமல் ஒலிப்பது போல் இருந்தது.

குழந்தை மணி இன்று பிஸ்கெட் மாமா கடைக்குப் போக வேணுமென்றான். சின்னக் குழந்தை லதா "இப்பொழுதே போவோம்" என்று சுருதி சேர்க்க ஆரம்பித்தாள்.

பிஸ்கெட் மாமாவைப் பற்றி எங்கள் பேச்சு திரும்பியது. "அவர் ஒரு பஞ்சாபியாம்; ஹிந்து முஸ்லிம் கலகத்தில் கஷ்டப்பட்டவராம். பணம் நிறைய இருக்கிறது. குழந்தைகளுடன் விளையாடிப் பொழுதைப் போக்குகிறார்" என்றேன்.

"ஒரு வேளை மற்றவர்கள் பொருளைக் கொள்ளை அடித்துக் கொண்டு இங்கு வந்திருக்கலாம். மனச் சாந்தி அற்றுப் போகவே இம்மாதிரி கடை வைத்துக் குறைந்த விலையில் குழந்தைகளுக்குத் தின்பண்டம் விற்கிறார் போலும்" என்று ஏதோ மாதிரி சொன்னார் என் கணவர்.

"அவருடன் ஒரு பெண் இருக்கிறாள். அவள் யாரோ தெரியவில்லை!"

"ஏன், அவருடைய மனைவியாக இருக்கலாம். அல்லது மனைவி இறந்திருப்பாள். இவளை மறு மணம் செய்து கொண்டிருந்தாலுமிருக்கலாம்."

"சேச்சே, அந்த மனிதர் குடும்பமே வகுப்புக் கலவரத்தில் அழிந்து விட்டதாம். கலகத்தில் குறை போன சொத்துக்களில் எஞ்சிய பொருளைக்கொண்டு இப்படி மனத்தைத் தேற்றிக் கொள்ளுகிறார். அவர் முகத்தில் சோகத் திரை படர்ந்திருக்கிறது. கண்களில் இனம் தெரியாத ஏக்கம், சதா கவிழ்ந்து கிடக்கும் தலை. ஆனால் குழந்தைகளைக் காணும்போது மட்டும் வாயை விட்டுக் கலகலவென்று சிரிக்கிறார். எட்டணா பெறுமான பிஸ்கட்டுகளை நாலு அணாவுக்கு விற்கிறார். சில சமயம் சிறு குழந்தைகள் காசு கொடுக்காமல் போனாலும் அதைப்பற்றி ஒன்றும் கேட்காமல் பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறார். அவர் வாழ்க்கை ஒரு புதிராக இருக்கிறது."

"நீ இப்படித்தான் கற்பனையில் யாரையாவது ஆகாயத்தில் தூக்கி வைத்து விடுவாய். அல்லது யாரையாவது அதல பாதாளத்தில் தள்ளிவிடுவாய். ஓடி வந்த அகதியைப் பற்றி என்ன கற்பனைக் கோட்டை வேண்டிக் கிடக்கிறது! அந்தப் பஞ்சாபி என்னவோ மொத்தத்தில் நல்ல மனிதர்" என்றார் என்னுடைய கணவர்.

குழந்தைகள் சாக்கில் பிஸ்கெட் கடைக்குப் போனோம். நாங்கள் போன சமயம் கடைக்காரர் வேலைக்காரர்களைப் பார்த்துக் கோபமாகப் பேசிக் கொண்டிருந்தார். எனக்கு அரைகுறையாகத் தெரிந்த ஹிந்துஸ்தானியில் அவர் குழந்தைகளுக்குக் கொடுக்கும் தின்பண்டங்களைச் சரியாகச் செய்யவில்லையென்ற கோபம் என்பதைப் புரிந்து கொண்டேன். கோபத்துடன் இருந்தவர் ஒருவாறு குழந்தைகளைக் கண்டதும் மலர்ந்த முகத்துடன் அவர்களுக்கு என்ன வேண்டுமென்று கேட்டார். குழந்தைகள் இஷ்டப்படி சாப்பிட்டார்கள். சாப்பிடும்பொழுதே குழந்தைகளுக்குப் பேசும் படங்கள் வேறு காட்டப்பட்டன. எல்லாம் சேர்த்து நான்கு ரூபாயாவது ஆயிருக்குமென்று நினைத்தேன். ஆனால் விலைப் பட்டியில் இரண்டு ரூபாய் நான்கு அணா போட்டு வந்தது.

அந்தப் பஞ்சாபியின் அருமைத் தோழனைப் பார்த்து, "அந்த ஆசாமி யார்? அவர் பூர்வோத்திரம் என்ன!" என்று என் கணவர் கேட்டார்.

"அது ஒரு பெரிய கதை. அதை இப்பொழுது சொல்வதற்கில்லை" என்று சொல்லி விட்டான். வேறு வழியின்றித் திரும்பி விட்டோம். அந்தப்

பஞ்சாபியின் வாழ்க்கையைப் பற்றித் தெரிந்துகொள்ளும் ஆவல் எனக்கு அதிகமாய் விட்டது. பிறகு இரண்டு மூன்று தரம் கடைக்குப் போனோம். எங்களால் ஒன்றும் புரிந்துகொள்ள முடியவில்லை. பஞ்சாபியின் வாழ்க்கையை நினைக்க எனக்குப் பரிதாபமா யிருந்தது.

"அந்தப் பஞ்சாபியைப் பற்றித் தெரிந்துகொண்டு என்ன ஆக வேண்டுமோ!" என்று என் கணவர் கையாண்டி செய்துகொண்டிருந்தார்.

இரண்டணாகூடப் பெறாத சாமானை ஒரு ரூபாய் என்று விற்கும் இந்த உலகில் இவருடைய விநோத வியாபாரம் அதிசயமாக இருந்தது. ஆயிரம் கற்பனைகளை எழுப்பியது. உண்மையை அறிய முடியவில்லை. போன வருஷமும் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை. இந்த வருஷமும் இன்னும் இரண்டு நாட்களில் ஊருக்குக் கிளம்ப வேணுமென்று நினைக்கும்போது என் மனத்தை என்னவோ செய்தது. அந்தப் பஞ்சாபியைப் பற்றிய விவரம் தெரிந்து கொள்ளாமலேயே போகிறோமே என்று கவலையாகவே இருந்தது.

மறுநாள் என் மகள் லதாவுக்குப் பிறந்த நாள். குழந்தைகளின் பிறந்த நாளை அவர்கள் குதூகலத்துடன் இருப்பதற்காக வேண்டிச் சிறப்பாகக் கொண்டாடுவது என் வழக்கம்.

"நாளை லதாவின் பிறந்த நாள்" என்றேன்.

"அருவிக்கரையில் போய் ஆனந்தமாகச் சாப்பிடுவோமா!" என்றார் கணவர்.

எனக்கு எப்பொழுதுமே வீட்டில் சாப்பிடாமல் வேறு எங்கேயாவது சாப்பிடுவது திருப்தி தான். நான் சந்தோஷமாகத் தலையை அசைத்தேன். தன்னைப் பற்றிப் பேச ஆரம்பித்ததும் லதா துள்ளிக் குதித்து ஓடி வந்தாள்.

"என் பிறந்த நாளைக்குப் பிஸ்கெட் மாமாவைக் கூப்பிடுங்களேன் அம்மா" என்றாள்.

எனக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. என் கணவரைப் பார்த்தேன். அவர் அதை வரவேற்கவில்லை.

"குழந்தை சொல்லுகிறபடி கூப்பிடுங்கோ. பேச்சு வாக்கில் அந்த மனிதரின் கதையையும் அறிந்து கொள்ளலாம்" என்றேன்.

"முன்பின் தெரியாதவரை எப்படிச் சாப்பிட அழைப்பது! இன்னொரு சமயம் அவரைப் பற்றித் தெரிந்து கொண்டால் போகிறது" என்றார்.

"நம் ஊரில் குழந்தைகளுக்குப் பிறந்த நாள் வந்தால் எவ்வளவு பேரை விருந்துக்கு அழைக்கிறோம்! தெரியாதவரென்ன! பாவம் குழந்தைகளிடம் பிரியமாக இருக்கிறார். பிறந்த நாள் விருந்துக்கு ஒருவரை அழைக்க மூன்று தலைமுறைகளாகத் தெரியணுமா என்ன! உங்கள் யோசனையே தனி" என்றேன். அவர் அதை அரை மனதுடன் ஒத்துக்கொண்டார். லதா சந்தோஷத்துடன் ஆர்ப்பரித்துக் குதித்தாள்.

மறுநாள் சாப்பாட்டு மூட்டையுடன் அருவிக் கரையில் உட்கார்ந்திருந்தோம். இவ்வளவு பிரயாசைப்பட்டு அந்த மனுஷர் வருவாரோ மாட்டாரோ என்று சந்தேகம். லதா பச்சை வர்ணப் பட்டுப் பாவாடையுடன் ஓடி ஆடிக் கொண்டிருந்தாள். சுதாவும் தங்கை பிறந்த நாளைக்குத் தனக்குப் புதுப் பாவாடைகள் வேணுமென்று உடுத்திக் கொண்டிருந்தாள். மணி வாயைத் திறந்து கேட்கவில்லை. நானாக அவனுக்குப் புது உடுப்புகள் போட்டிருந்தேன்.

சரியாக மணி பதினொன்றாயிற்று. பிஸ்கெட் மாமா வரவில்லை. சரி நாம் அழைப்பு அனுப்பியதற்கு வருவதாகத் தெரிவித்திருந்தது வெறும் மரியாதை தானென்று நினைக்கும் பொழுது செடி மறைவில் ஒரு கறுப்பு வர்ண மோட்டார் வண்டி வந்து நின்றது. அதிலிருந்து அந்தப் பஞ்சாபி இறங்கினார். பின்னோடு டிரைவர் நிறைய பிஸ்கெட், சாக்லேட், கேக் அடங்கிய பெட்டிகள், பொட்டணங்களைக் கொண்டு வைத்தான். குழந்தைகள் கண்களை அகல விழித்தார்கள்.

"உங்கள் மூன்று குழந்தைகளுக்குமே பிறந்த நாளா!" என்று அவர்கள் புது உடுப்புகளைப்



## என்று தணியுமோ?

நாள்தோறும் புற்றீசல்கள் போல் கிளம்பும் "குறுக்கெழுத்து"ப் போட்டிகளால் ஏற்படும் நாசங்கள் அனந்தம். இவைகளால் பல குடும்பங்கள் சீரழிகின்றன. எனக்குத் தெரிந்த ஒரு குடும்பத்தைச் சொல்கிறேன். குடும்பத்தின் தலைவருக்கு மூன்று பெண்கள்; இரண்டு பையன்கள். பெண்கள் மூவரும் கல்யாண வயதடைந்தவர்கள். அவருக்குச் சொற்ப சம்பளந்தான். இந்நிலையில் 'முதல் பெண்ணுக்காவது மணமுடிக்க வேண்டுமே. எப்படிச் செய்வது?' என்ற கவலை வேறு. 'கல்யாணச் செலவுக்குச் சிறிதாவது பயன் படட்டும்' என்று ஆயிரம் ரூபாய் சேர்த்து வைத்திருந்தார். ஒரு சோதிடர் "உங்களுக்குப் பெரும் தொகை கிடைக்க விருக்கிறது. ஏதாவது ஒரு 'குறுக்கெழுத்து'ப் போட்டிகளின் மூலம் கிடைத்தாலும் கிடைக்கலாம்" என்று சொன்னாராம். அது முதல், மனுஷனுக்குப் போட்டிப் பைத்தியம் பிடித்துக் கொண்டது. முதலில் இவ்வழியில் ஐந்து, பத்து என்று செலவழித்தவர் இப்போது முப்பது நாற்பது என்று பணத்தை வீணுக்கு இறைக்கிறார். சேர்த்து வைத்த பணத்தில் பாதிக்கு மேல் கரைத்தும் போட்டிப் பைத்தியம் அவரை விட்டு இன்னும் நீங்கினபாடில்லை. இவற்றைத் தடுக்க, அரசாங்கத்தார் நிச்சயம் ஒரு முடிவு செய்ய வேண்டும்.

சிந்தாதிரிப்பேட்டை
10—5—54 டி. ராஜேஸ்வரி

பார்த்துக் கேட்டுவிட்டுச் சிரித்தார். தொடர்ந்து அவரே "ஆம்! குழந்தைகள் உலகில் அவர்களுக்கு ஒவ்வொரு நாளும் பிறந்த நாள் வைபவம்தான். தினம் இன்ப வருஷம் தானே!" என்று ஒரு நீண்ட பெருமூச்சுடன் சொன்னார்.

என் கணவர் அவரைச் சரியாக வரவேற்காமல் இருந்துவிடப் போகிறாரே என்று எனக்குக் கவலையாக இருந்தது. ஆனால் எப்பொழுதும் முன்னால் ஆட்சேபணை செய்வார். நான் ஒரு காரியத்தை ஆரம்பித்து விட்டால் பிறகு முகம் கோணாமல் ஒத்துழைப்பார். அதுபோலவே அன்றும் அந்தப் பஞ்சாபியை உற்சாகமாக வரவேற்றார்.

"இம்மாதிரி குழந்தைகளுடன் சாப்பிட்டு எட்டு வருஷங்கள் ஆகின்றன" என்றார் அப் பஞ்சாபி.

"ஏன் உங்கள் மனைவி, குழந்தைகள் எல்லாம் எங்கே! அதைப்பற்றிச் சொல்வதில் தங்களுக்கு ஆட்சேபனை யில்லை யென்றால் சொல்லுங்கள்" என்றார் என் கணவர்.

அந்த இளகிய மனம் படைத்த பஞ்சாபி பின் வருமாறு தம்முடைய கதையைச் சொன்னார்:

* * *

கராச்சிக்குப் பக்கத்தில் ஒரு கிராமம். செல்வமும் செல்வாக்கும் நிறைந்த குடும்பத்தில் பூஷன் பிறந்தான். சிறு வயது முதல் பக்கத்து வீட்டில் வசிக்கும் ரஹீமும் பூஷனும், சேர்ந்தே படித்தார்கள். பள்ளியிலும், வெளியிலும் பூஷன், ரஹீம் இருவரையும் ஒன்றாகத்தான் பார்க்கலாம். தெரிந்தவர்களுக்கு மட்டும் இவர்கள் ஹிந்து முஸ்லிம் என்று தெரியும். புதியவர்கள் இருவரும் ஒரு தாயின் புதல்வர்கள்தான் என நினைப்பார்கள். இருவரும் அன்பில் ஒன்றிப்போய் இருந்தார்கள். பூஷன் தாய்மட்டும் சிலசமயம் முகமதிய சிநேகம் ரொம்ப வைத்துக் கொள்ளாதே யென்று கண்டிப்பாள். அதெல்லாம் பலனில்லை. இவர்கள் சிநேகம் மலையாக வளர்ந்தது. கிராமப் படிப்பு முடிந்ததும் நகரத்தில் இருவரும் சேர்ந்து கல்லூரியில் படிக்க ஆரம்பித்தார்கள். பூஷன் இரவு தூங்கப் போன பிறகு அவனுக்குக் கொசுவலை கட்டி விட்டுத்தான் ரஹீம் தூங்கப் போவான். அவனுக்கு அவ்வளவு அன்பு தன் நண்பனிடம்.

படிப்பு முடிந்தது. கராச்சியில் பூஷன் துறைமுகத்தில் பெரிய வேலையில் அமர்ந்தான். சில வருஷங்களிலேயே பெரிய பதவிக்கு வந்துவிட்டான். ரஹீம் வெளிநாட்டு வியாபாரக் காரியாலயத்தில் வேலைக்கு அமர்ந்தான். பூஷன் செல்வவந்தனானதால் தனக்குச் சொந்தமாகக் கார் வைத்துக் கொண்டிருந்தான்.

இருவர் காரியாலயமும் ஒன்றுக்கொன்று சமீபமாக இருந்ததால் இருவரும் சேர்ந்தே காரியாலயத்துக்குப் போவார்கள். இருவருக்கும் அவர்கள் வேலையில் ப்சர்ந்த ஒரு மாதத்துக்கெல்லாம் சிறப்பாக விவாகமும் நடந்தது.

பூஷன் குடும்பம் நடத்த ஆரம்பித்தான். மனத்துக்கினிய அழகும், குணமும், கொண்ட சசிகலா அவன் மனைவி. வயதான பெற்றோர்கள் பிள்ளையின் வாழ்க்கை மலர்ச்சியைக் கண்டு மகிழ்ந்தார்கள். சந்தோஷத்தைத் தன் வரையில் நிரந்தரமாக்கிக் கொண்டு தந்தை மறைந்தார்.

ரஹீம் மனைவி பியாரி அவன் குடும்பத்துக்கு ஜோதியாக இருந்தாள். மக்கள் பேறுகூட இருவருக்கும் ஒன்றாக இருந்தது. ரமேஷ் சுசீலா, இருவரும் பூஷன் குழந்தைகள். எழில், ரோஜா இருவரும் ரஹீம் குழந்தைகள். இருவர் வீட்டுக் குழந்தைகளையும் ஒரு வீட்டில்தான் பார்க்கலாம். அவர்கள் குடும்ப விளையாட்டு, ரயில் விளையாட்டு, எல்லாம் அற்புதக் கற்பனையோடிருக்கும்.

"ஒரு சமயம் என் குழந்தை" என்று சொல்லிவிட்டு அந்தப் பஞ்சாபி கதையை நிறுத்தி விட்டு அப்படியே தலையைக் குனிந்துகொண்டார். அவர் குழந்தைகள் நினைவு அவர் சிந்தனையைச் சிதற அடித்து விட்டது போலும்.

சில நிமிஷத்துக்குள் சுதாரித்துக் கொண்டு "குழந்தைகள் விளையாட்டுகளையெல்லாம் சொல்லத் தோன்றுகிறது. இருந்தாலும் முக்கியமானதை மட்டும் சொல்லுகிறேன்" என்றார்.

பூஷன் தன்னுடைய முஸ்லிம் நண்பனிடம் அளவற்ற அன்பு வைத்திருந்தான். ரஹீமும் இந்து மத சம்பிரதாயத்தையே அன்ன ஆகாரங்களில் கூட மேற்கொள்வான்.

மாரிகாலத்தில் ஒரு சிறு கருமேகம் சஞ்சரிக்கும். கொஞ்ச நேரத்தில் பெரிய இருண்ட மேகங்களைக் கூட்டிக் கொண்டு பூமியைத் தாக்கும். அம்மாதிரி நிலை அந்தப் பிரதேசத்தில் ஆரம்பமாயிற்று. கத்தியின்றி ரத்தமின்றிப் பாரதநாடு பெற்ற சுதந்திரத்தை வகுப்பு வெறியான குருவளி வரவேற்க ஆரம்பித்தது. ஹிந்து முஸ்லிம் கலகம் பிரமாதமாகப் பரவியது. பாரதத் தாயின் சிரம் தன் மக்கள் கலகத்தைக் கண்டு சுற்றியது.

பூஷன் தினம் காரியாலயத்திலிருந்து திரும்பும் வரை தாய், மனைவி இருவருக்கும் உயிரே இருப்பதில்லை. ரஹீம், பூஷன் இருவரும் ஒன்றாகத்தான் போவார்கள். 'முஸ்லிம்களின் அக்கிரமத்தைப் பாரு. ஒரு கர்ப்பிணியைக் கொன்று விட்டானாம்' என்பான்" பூஷன். "ஹிந்துவும்தான் ஒரு முஸ்லிம் குழந்தையை இரண்டாக வெட்டி விட்டான்" என்பான் ரஹீம். இப்படி இவர்கள் பேச்சு தடிக்க ஆரம்பித்தது. அவரவர் வகுப்பை



சென்னை வன்னிய தேனாம்பேட்டையில் உள்ள ஸ்ரீ பாலசுப்ரமண்ய தேவஸ்தானத்தில் கடந்த நான்கு மாதங்களாக ஸ்ரீ ராதாகிருஷ்ண சாஸ்திரிகள் ராமாயண கதா காலக்ஷேபம் செய்து வருகிறார்கள். ஒவ்வொரு நாளும், ஏராளமான மக்கள் அதைக் கேட்டு மகிழ்கின்றனர். மேமீ 16உ. அன்று ஸ்ரீ ராஜாஜி அவர்கள் தலைமையில் ராமாயண காலட்சேபம் நடந்தது. காலட்சேப முடிவில் ஸ்ரீ ராஜாஜி அவர்கள் ராமாயண காலட்சேபத்தின் பலனைப் பற்றிப் பேசினார்.

---

விட்டுக் கொடுக்காமல் பேச ஆரம்பித்துச் சில தினங்களில் ஒருவருக்கொருவர் பேச்சு வார்த்தை நின்று விட்டது. பல நாளைய சிநேகம் முறிந்தது. இவர்கள் பேச்சு நின்றதும் காட்டுப் பூனைபோல் ஒருவரை ஒருவர் முறைக்க ஆரம்பித்தனர்.

ஒரு நாள் பகல் பதினொரு மணிக்குப் பூஷண் காரியாலயத்துக்குப் போய்க் கொண்டிருந்தான். வழியில் ஐந்து முஸ்லிம்கள் ஒரு இந்துப் பெண்ணை இழுத்துக் கொண்டு வந்தார்கள். அந்தப் பெண் மானத்துக்கு அஞ்சிக் கதறினாள். பூஷணுக்கு இதைக் கண்டதும் ரத்தம் கொதித்தது. அன்று வீட்டில் அவன் குழந்தை ரமேஷ் ஜுரத்தோடு படுத்துக் கிடந்தான். அந்த வேதனை, இந்தக் கொடூரம் எல்லாம் அவன் மனத்தைப் பேயாக்கியது. காரியாலயத்தில் தற்காப்புக்காகக் கொடுத்திருந்த துப்பாக்கியைப் பிரயோகம்செய்து அந்தப் பெண்ணைக் காப்பாற்றி விட்டான். அவனுக்கு இதைப்பற்றி யெல்லாம் சிந்திக்க நேரமில்லை. பின்னாலேயே வந்து கொண்டிருந்த ரஹீம் இந்தக் காட்சியைக் கண்டான். வெகுண்டு குதித்தான். அதற்குள் அந்தப் பெண்ணை அவள் வீட்டில் சேர்க்கப் பூஷண் தன் காரிலேயே அவளை அழைத்துக் கொண்டு போய் விட்டான். நடந்து வந்த ரஹீமால் காரில் பறக்கும் பூஷணை ஒன்றும் செய்ய முடியவில்லை. ஏதோ முடிவுக்கு வந்தவனாய் வீட்டுக்கு வந்து விட்டான்.

அன்று மாலையில் வீட்டுக்கு வந்ததும் பூஷண் தலையில் பேரிடி விழுந்தமாதிரி இருந்தது. வீட்டில் பெரிய பூகம்பம் வந்து ஓய்ந்த அமைதி, மரண அமைதியை அன்று தான் கண்டான். ஜுரத்துடன் போராடிக் கொண்டிருந்த குழந்தை மார்பில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்திருந்தது. மற்றவர்களும் இந்த உலகை விட்டுச் சாந்தியைத் தேடிச் சென்று விட்டார்கள். தாய் மட்டும் "ரஹீமுடன் சிநேகம் செய்யாதே என்றேனே. கேட்டாயா! அவனுடைய ஏவலால்தான் நாலைந்து முரடர்கள் எல்லாவற்றையும் நாசம் செய்து விட்டார்கள்" என்று முனகலுடன் தட்டுத் தடுமாறிச் சொல்லிவிட்டு உயிர் நீத்தாள்.

ஜுரத்துடன் இருந்த குழந்தை "மாலையில் பிஸ்கெட் வாங்கி வா அப்பா" என்று சொல்லியிருந்தது. அதற்காக வாங்கி வந்த பிஸ்கெட்களைப் பூஷண் விசிறி எறிந்தான். அன்பு உருவான மனைவி சசிகலாவைப் பார்த்தான். அதற்கு மேல் நிற்க முடியவில்லை. வீட்டைத் தாண்டி ஓடினான்.

வாசற்படியில் ரஹீம் அவனைத் தடுத்துக் கட்டிக் கொண்டான். பூஷண் வெறி தாங்காமல் தலையைப் பிய்த்துக் கொண்டு திமிறினான். "பூஷண்! நம்முடைய போதாக் காலத்தில் இப்படிச் சண்டை வந்தது. உன் அன்பை நான் சில விநாடி மறந்தேன். உன் தாய் மரணத் தறுவாயில் சொன்னவைகளைக் கேட்டேன். என்னால் உன் குடும்பம் அழியவில்லை. வெறிபிடித்த சில முரடர்களைப் பார்த்துக் கொண்டு பேசாமலிருக்கும் அளவு வஞ்சம், பேய்க் குணம் என் இதயத்தில் சில விநாடி இருந்தது. என்னை மன்னித்துவிடு" என்று வாய் விட்டுக் கதறினான்; துடித்தான்.

இந்த இடத்தில் பஞ்சாபி பொங்கி வந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு சற்று நேரம் மௌனமாக இருந்து விட்டுத் தொடர்ந்தார்:

பிறகு ரஹீம் இன்னும் என்னவோ சொல்லிப் புலம்பினான். பூஷண் காதில் ஒன்றும் விழவில்லை. இரண்டு நாட்கள் வரை வஞ்சம், பழிக்குப் பழி, குரோதம் இதுவே அவன் மனத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது.

நவகாளியில் மகாத்மா காந்தி கால்நடையாகப் பிரயாணம் செய்து வகுப்புக் கோரத்தை அடக்கி

வருகிறார் என்ற வார்த்தை மின்னல் போல் அவன் மனத்தில் பாய்ந்தது. திரும்பி இரவோடு இரவாக வீட்டுக்குச் சென்று கைகொண்ட பொருள்களை வாரிக் கட்டிக் கொண்டான். பித்துப் பிடித்தவன் போல நவகாளிக்குப் பிரயாணமானான் பூஷண்.

"குரோதத்தை அன்பால் வெல்ல வேணும். குரோதத்துக்குப் பழி வாங்குவது அக்கினியில் இட்ட நெய்மாதிரி. இந்த மூர்க்க வெறியை ஒழித்து மனித இதயத்துடன் மனிதனாக வாழ ஒரு கணம் யோசியுங்கள். மனச்சாந்தி விலையில்லா மாணிக்கம். உங்கள் குடும்பத்தை ஒருவன் அழித்து விட்டதற்காக அவன் குடும்பத்தை அழித்துப் பழி வாங்குவதில் உங்கள் கஷ்டம் நிவாரணமாகிறதா! மேலும், மேலும் மிருக உணர்ச்சியிலும், அசுரத் தன்மையிலும் ஒருவிதமான நன்மையில்லை. அன்பு செய்யுங்கள். ஆறுதலடையுங்கள்" என்றெல்லாம் தொண்டு கிழவர் உபதேசம் செய்வதும் கொதித்து எழுந்த மக்கள் அடங்குவதும் ஆச்சரியமாக இருந்தது. ரண தேவதை கொஞ்சம் கொஞ்சமாகத் தன் கோர நாக்குகளை உள் இழுத்துக் கொண்டாள்.

தெய்வத் தன்மை அன்புதான் என உணர்ந்தான் பூஷண். ஊர் ஊராகத் தன் பிரயாணத்தை ஆரம்பித்தான். ரஹீமும், தானும் அன்பாக வாழ்ந்த ஒவ்வொரு நாளும் அவன் நினைவுக்கு வரும். தன் அன்பு மனைவியுடன் ஆனந்தமாகக் கழித்த இன்ப நாட்கள் நினைவுக்கு வரும். இவைகளைப் பற்றி யெல்லாம் நினைத்துப் பார்க்கும் போது அவன் மனத்தில் அதிர்ச்சி உண்டாகும்.

நீண்ட பிரயாணத்தில் மற்றொரு பேரதிர்ச்சி. மகாத்மாஜியின் மறைவு. அந்தப் பாதகச் செயலில் தனக்கும் பெரும் பங்கு உண்டென நினைத்தான் பூஷண். ஆங்காங்கு பிரார்த்தனையில் கண்ணீர் பெருகச் செய்து தன் பாதக உணர்ச்சியைக் கழுவிக் கொண்டிருந்தார்கள் மக்கள். "ஈச்வர அல்லா தேரே நாம் ஸப்கோ ஸன்மதி தே பகவான்" என்ற அமர வாக்கியம் எங்கும் வானளாவியது. அந்தப் பிரார்த்தனையின் பலன் தனக்கு முதன் முதலில் வந்து விட்டதென்று உணர்ந்தான் பூஷண். ரஹீமை மீண்டும் நேசித்தான். அவன் மனத்தில் அன்பு தோன்றியது. தன் வாழ்க்கையில் பிறரிடம் அன்பு செலுத்துவதே தாங்கக் கூடாத தன் துக்கத்தை ஆற்றும் அருமருந்து என்று முடிவுக்கு வந்தான்.

அந்தக் கணம் முதல் ஊரில் உள்ள எல்லாக் குழந்தைகளும் தன் சொந்தக் குழந்தைகளாகவே தோன்றினார்கள் பூஷணுக்கு.

"குழந்தைகளைத்தான் என் நெஞ்சம் நேசிக்கிறது. என்னுடைய பிரயாணம் இந்த மலைப் பிரதேசத்தில் வந்ததும் முடிந்து விட்டது. நகர வாழ்க்கையை வெறுத்த எனக்கு இந்த இடம் மனச் சாந்தியை அளிக்கிறது. இந்த அமைதி என்னை ஆட்கொண்டது" என்று தம் சோகக் கதையை முடித்தார் அந்தப் பஞ்சாபி.

எங்கள் கண்களில் கண்ணீர் நிறைந்து ததும்பியது. அந்தப் பஞ்சாபியின் கதை எங்கள் மனத்தைக் கலக்கி விட்டது. தூரத்தில் அருவி 'சோ' வென்று விழுந்து கொண்டிருந்தது.

---

## பழகப் பழக...!

ஆபீஸ் சேவகன், வந்த புதிதில் உட்காருவதற்கு யோசனை செய்கிறான்....




..பழகின பிறகு எழுந்திருப்பதற்கு யோசனை செய்கிறான்!!

# 'கோடக்' பிலிமில்

## பிடிக்கப்படும் படங்கள் சிறந்த வைகளாகவே அமைகின்றன

ஜொலிக்கும் அதிப்பிரகாசத்தி லிருந்து ஆழ்ந்த நிழல்வரை ...இவை களுக்கிடையே நிலவும் ஆயிரக் கணக்கான நிழல் வித்தியாசங் களையும் ... ஒவ்வொரு சிறு பொருளைக்கூட விட்டு விடாமல், நன்றாக பதிவு செய்வதற்கு 'கோடக்' பிலிமே வேண்டும்.




வெரிக்ரோம் — பகல் வெளிச்சத்தில் பதிவு செய்யும் எந்தப்படங்களுக்கும் மிகப்பொருத்தமானது.




சூப்பர்-XX அற்புதமான செயல் காட்சிகளை (ஆக்ஷன் – பிக்சர்ஸ்) படம் பிடிப்பதற்கும் மங்கிய ஒளி யிலும் செயற்கை ஒளியிலும் படம் பிடிப்பதற்கும் இது உதவுகிறது.




ப்ளஸ்-X நிழல்களையும் அதேபோல் பிரகாசத்தையும் தெளிவாக பதிய வைத்து அழகான படங்களை தருகி றது. முக்கியமாக, பெரிய என்லார்ஜ் மெண்ட் செய்ய வேண்டிய படங் களுக்கு மிகவும் பொருந்தியது.

● போட்டோ உலகில் 'கோடக்' பிலிம் இணையற்றதென்று நிரூபித் துக்கொண்டு விட்டது. இன்றே இரண்டு ரோல்கள் ... ஒன்று உங் கள் காமிராவில் நிறைக்கவும் இன் னொன்று அதிகப்படியாக கையிருப் பிற்கும் — வாங்கி வைத்துக் கொள்ளுங்கள்

கோடக் லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் • கல்கத்தா
டில்லி • மதராஸ்

K. 9020

# விஜயலக்ஷ்மி



புஷ்யன்

—அன்று என் பெற்றோர்களுடன் போய்ப் பெண்ணைப் பார்த்துவிட்டு வந்ததிலிருந்து என் மனம் தீவிர சிந்தனையில் ஆழ்ந்து விட்டது. என்முன் ஒரு பெரிய பிரச்னை வந்து நின்றது.

உண்மையில் பார்த்தால் 'சம்மதம்' என்று கூறிவிட எனக்கு அதிகக் கஷ்டமில்லை. வேறு யாராயிருந்தாலும் அப்படித்தான் ஒரு விநாடியேனும் யோசியாமல் சம்மதம் கொடுத்து விடுவார்கள். அவளை அடைவது ஒரு பெரும் பாக்கியம் என்று எண்ணாதவன் இப்புவியில் இருக்க மாட்டான்.

மனச்சாட்சி என்று ஒன்று இருக்கிறதே, அது என்னை ஒரு முடிவுக்கு வர விடாமல் தடுத்தது.

என் பெற்றோர்களுக்கு அந்தப் பெண்ணின் அழகிலே மயக்கம். மிகச் சிறந்த அழகுள்ளவளும் சுறுசுறுப்புள்ளவளும், எல்லாக் காரியங்களிலும் மிகவும் கெட்டிக்காரியானவளுமான அவளை மருமகளாகப் பெறத் துடித்துக் கொண்டிருந்தாள் என் தாயார். அவளுடைய பெற்றோர்களுக்கோ பெரிய பணக்கார இடத்தில் சம்பந்தம், கிடைத்தற்கரிய இடம் என்று ஆத்திரம். அவர்களுடைய ஆவலைப் பேராசை என்று சொல்ல முடியாதுதான். அந்த அழகிய பெண் வறுமையில் உழலக் கூடாதுதான். வறுமையிலேயே அத்தனை அழகுடன் பிரகாசித்தால் செல்வம் குவிந்த இடத்தில் அவள் எப்படி ஒளியுடன் விளங்குவாள்!

ஆனால் நான் அவளை உடனே மணக்கச் சம்மதிக்க முடியவில்லை. தீவிரமாக யோசிக்க வேண்டி வந்து விட்டது. இதற்குக் காரணம்...?

அன்று நான் அவளைப் பார்த்தேன். மிக எளிமையான உடையைத்தான் அணிந்திருந்தாள். ஆனால் அது கன்னங்கரிய வானத்திலே முழு நிலவு பிரகாசித்துக் கொண்டிருப்பது போலிருந்தது. மேகவர்ணப் புடவை அவளுடைய ரோஜா நிற உடலைத் தழுவிக் கொண்டிருந்தது. நல்ல உயர்ந்த மேனி. கூந்தல் நீளமாய்க் கருநாகம்போல் நெளிந்து கொண்டிருந்தது. அவள் கண்கள்! அதைப் பற்றி நினைக்கும் போதுதான் நான் முடிவு காணாமல் தவிக்க வேண்டி வந்தது.

அந்தக் கண்களை நேருக்கு நேர் சந்தித்த எனக்கு ஏற்பட்ட உணர்ச்சியை அவ்வளவு எளிதில் என்னால் நிர்ணயிக்க முடியவில்லை

ஓர் அழகான பெண்ணைச் சந்திக்கும்போது, கண்களுடன் கண்கள், நேருக்கு நேர் பார்க்கும் போது உண்டாகும் காதலினால் ஏற்படும் புல்லரிப்பைப் பற்றி எவ்வளவோ கவிகள் பாடியிருப்பதை யெல்லாம் படித்திருக்கிறேன். அந்த விதமான உணர்ச்சிதானோ என்னவோ!

அவளைப் பார்த்தேன்; அவளுடைய முகத்தைப் பார்த்தேன்; அவளுடைய கூந்தல் சுருண்டு தொங்கியதைப் பார்த்தேன்; வளைந்த புருவங்களைப் பார்த்தேன். முழு உருவத்தையும் பார்த்தேன். அப்போதெல்லாம் ஏற்படாத உணர்ச்சி ஏற்பட்டது. அவளுடைய வேல் விழி கண்களைச் சந்தித்த அதே நேரத்தில் அவளும் என்னைப் பார்த்தாள். கண் இமைக்காமல் பார்த்தாள். பிறகு தலைகுனிந்து கொண்டாள். ஆனால் அந்த இரு கண்களும் தங்கள் கூர்மையான பார்வையால் என் இதயத்தைத் தாக்கிவிட்டன. அவள் கண்களை மீண்டும் சந்திக்க முடியாதபடி என் கண்கள் சக்தியை இழந்து விட்டிருந்தன.

ஆனால் எனக்கேற்பட்ட உணர்ச்சி ஆசையை அடிப்படையாகக் கொண்டதா? இல்லை, அவளைப் பற்றி நினைக்கும் போது என் மனம் என்னையுமறியாமல் பெருமிதம் கொண்டது. இந்த உலகத்தைப் பற்றிய எண்ணங்கள் மறைந்து ஏதோ ஓர் தெய்வீக எண்ணம் குடிகொண்டது.

அவளிடம் குடிகொண்டிருந்த பணிவு, அடக்கம், பொறுமை சாந்த சுபாவம், இவ்வளவுக்கும் மேலாக அந்த ஒரு தெய்வீகக் காந்தி யெல்லாம் பளிச்சென அவளுடைய முகத்தில் விளங்குவதைக் கண்டு என் மனம் சிந்திக்க ஆரம்பித்து விட்டது. அவளுக்கு ஏற்ற கணவனாக நான் ஆக முடியுமா என்று என் மனம் சிந்தித்தது. நான் 'சரி'யென்று சொன்னால் அடுத்த முகூர்த்தத்திலேயே அவள் என் மனைவியாகி விடுவாள்.

ஆனால் பின் ஏன் நான் தயங்குகிறேன்? அவள் ஏழை என்று யோசனையா? பணக்காரனை

நான் பணக்கார இடமாக வேண்டும் என்று பேராசை பிடித்தலைகிறேனா!—ஒன்றும் புரியவில்லை. அவளுடைய அந்த அழகுக்கும், அறிவுக்கும் இந்த உலகம் முழுவதும்கூட ஈடாகாது என்பது என் எண்ணம். ஆகவே பணத்துக்காக அல்ல, நான் அவளை மணப்பதற்கு யோசிப்பது.

நான் அவளை மணக்கத் தகுதியற்றவன்தான். நிலவின் தண்மை பொருந்திய, அறிவுப் பிழம்பான, அழகின் இருப்பிடமான விஜயலக்ஷ்மிக்கு அவலட்சண உருவம் பெற்ற, இருளின் பிரதிபிம்பமான நானா கணவனாக வாய்ப்பது! என்னதான் எனக்கு அளவற்ற செல்வம் இருந்து விட்டாலும் அவள் ஏழ்மையில் வாடிக் கொண்டிருக்கிறாள் என்பதைச் சாதகமாக உபயோகப் படுத்திக் கொண்டு அவளை மணந்து கொள்ள என் மனச்சாட்சி ஒப்புக் கொள்ள வில்லை.

என்னால் என் மனதார அவளுக்கு அநீதி இழைக்க முடிய வில்லை. கிடைத்தற்கரிய செல்வம் கிடைக்கக் காத்துக் கொண்டிருக்கிறது. ஆனால் அதை வைத்துக் காப்பாற்றச் சக்தியில்லாதவனுக்குக் கிடைத்து என்ன பிரயோசனம்! அவனவனுக்கு எவ்வளவு யோக்கியதையோ அவ்வளவுக்குத்தானே ஆசைப் படவேண்டும்! கரிய திருமேனி உடைய நான் விஜயலக்ஷ்மியை மணக்க எப்படி ஆவல் கொள்ள முடியும்!



என் மனத்தில் இருந்த கொஞ்ச நஞ்சம் ஆவலையும் மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டேன். அவ்வளவு அழகான விஜயலக்ஷ்மியை மணந்தால் எனக்கு எவ்வளவு பெருமை என்று யோசித்துப் பார்த்தேன். என் அதிர்ஷ்டத்தைக் கண்டு எல்லோரும் எவ்வளவு பொறாமைப்படுவார்கள் என்றும் எண்ணிப் பார்த்தேன். ஆனால் அவளைவிட எனக்கும் அவளுக்கும் இடையில் இருந்த மாபெரும் வேற்றுமைதான் பெரியதாகத் தெரிந்தது.

அவளை நான் மணக்க முடியாது என்று கூறினேன், கடைசியில் என் பெற்றோர்களிடம். அவர்கள் அதிசயத்தால் ஸ்தம்பித்தனர். என் மறுதளிப்புக்குக் காரணத்தைக் கேட்டறிந்ததும், "அட, பைத்தியக்காரா! வலிய வரும் ஸ்ரீதேவியை வேண்டாம் என்று உதறித் தள்ளுகிறாயே... உனக்குச் சித்தப் பிரமை ஒன்றும் இல்லையே!" என்று கேட்டனர்.

"என் அழகுக்கு ஏற்ற ஒரு பெண்ணை, ஒரு சாதாரண அழகுடைய பெண்ணை, அவள் பணக்காரக் குடும்பத்திலிருந்துதான் வர வேண்டும் என்பதில்லை; விஜயலக்ஷ்மியை விட பரம ஏழையாக இருந்தாலும் மணக்கச் சித்தமாயிருக்கிறேன். நமக்கிருக்கும் செல்வம் இன்னும் இரண்டு தலைமுறைக்குப் போதும். அதனால் பணம் பிரமாதமில்லை. பணத்தினால் எல்லாவற்றையும் மறைத்து விட முடியாது. பணம் வயதுப் பொருத்தங்களுடன் அழகுப் பொருத்தம் கூடத்தான் பார்க்க வேண்டும். பணத்தினால் அழகை விலை கொடுத்து வாங்கி விடப் பிரியப்பட வில்லை நான்" என்று கூறினேன்.

"உம், நம் அதிர்ஷ்டம் அவ்வளவுதான். அந்த அதிர்ஷ்டலக்ஷ்மி இந்த வீட்டில் காலடி எடுத்து வைக்க வில்லை" என்று பெரிதாக அங்கலாய்த்தாள் என்னுடைய தாயார்.

"ஆமாம். அந்தச் சௌந்தர்ய லக்ஷ்மி இந்த வீட்டில் நுழையும்படியான தகுதி நமக்கு இருக்கிறதா என்பதை நாம் முதலில் சிந்தித்துப் பார்க்க வேண்டும்" என்றேன்.

என் முடிவைக் கேட்டு விஜயலக்ஷ்மியின் பெற்றோர்கள் மிகவும் வருத்தப்பட்டார்கள். விஜயலக்ஷ்மியின் அதீத அழகும் சாதுர்யமும் கூட அவளுக்கு எதிராக இருக்கிறதே என்று கவலைப் பட்டார்கள் என்று கேள்விப் பட்டேன். ஆகவே அவர்களுக்கு ஓர் நீண்ட கடிதம் எழுதினேன்.

"உங்கள் பெண்ணை நான் மணக்க முடியாது என்று கூறியதற்கு நீங்கள் மிகவும் வருத்தப்படுவதாக அறிந்தேன். சிறிதும் கவலைப்பட வேண்டாம். உங்கள் பெண்ணின் அழகுக்கு நான் சிறிதும் பொருத்தமில்லை. அவளுடைய சௌந்தர்யத்துக்கு ஏற்ற கணவன் கண்டிப்பாய்க் கிடைப்பான். நானே ஒரு சிறந்த வரனைத் தேடித் தருகிறேன். அந்தக் கவலையை நீங்கள் விட்டு விடுங்கள்" என்று எழுதினேன்.

"ஆமாம், அந்தக் கணத்திலிருந்து அவளுக்கு இணையான அழகும், அறிவும் உடையவனும், அவளைச் சீரும் சிறப்புமாய் வைத்துக் காப்பாற்றக் கூடிய வனுமான ஒரு வரனைத் தேடி அவளுக்கு மணம் செய்து வைக்க வேண்டும் என்று தேட ஆரம்பித்தேன்.

"இதென்னடா இது, உனக்குக் கல்யாணம் பண்ணுவதற்காக முயன்றால் அது முடியக் காணோம். நீ மாப்பிள்ளை தேட ஆரம்பித்து விட்டாயே!" என்றனர் என் பெற்றோர்கள்.

"அவள் தகுதியான இடத்தில் வாழ்க்கைப்பட வேண்டும் என்ற சிரத்தை எல்லோரையும் விட எனக்கு அதிகமாகி விட்டது. அவள் உண்மையில் ஒரு தெய்வப் பிறவியாகத்தான் இருக்க வேண்டும். அப்பேர்ப்பட்டவள் அநியாயமாகத் தாரதம்மிய மில்லாத இடத்தில் வாழ்க்கைப் படக் கூடாது. எல்லா விஷயங்களையும் நன்கு ஆராய்ந்து மாப்பிள்ளை தேட வேண்டும்" என்று என்னையும் அடக்க மாட்டாமல் உணர்ச்சி வசப் பட்டுக் கூறினேன்.

"உன் இஷ்டம்!" என்று மிகுந்த சலிப்புடன் கூறினாள் என் தாயார்.

ஒரு பெண்ணை மணப்பதற்காகப் போய்ப் பார்த்து விட்டு. அவளுக்கு வேறோர் இடத்தில் கல்

யாணம் செய்து வைக்க இவ்வளவு பிரயாசையா! என்று அதிசயம் உண்டாகும் எல்லோருக்கும். ஆனால் அவளை ஒரு தடவை பார்த்தால் போதும். அவளை மணப்பதற்காக எந்தத் தியாகத்தையும் செய்ய ஒருவன் சித்தமாக இருப்பான்.

விஜயலக்ஷ்மிக்கு ஏற்ற வரன் அமைவது அவ்வளவு சுலபமான காரியமில்லை. எனக்குத் தெரிந்த அனேக பணக்காரப் பிள்ளைகள் அழகில் உயர்ந்தவர்களா யிருந்தாலும்—விஜயலக்ஷ்மியை விட அழகிலும், குணத்திலும் சிறுத்திருந்தனர். குணத்தில் உயர்ந்தவர்கள் ஒன்று அழகில் குறைந்திருந்தனர். அல்லது செல்வத்தில் குறைந்தவர்களா யிருந்தனர். பணம் படைத்தவர்கள் விஜயலக்ஷ்மியின் அழகில் மயங்கினாலும் பணத்தாசை பிடித்தவர்களா யிருந்தனர். பணத்துடன் மேலும் பணம் சேர்ப்பதிலேயே கண்ணா யிருந்தனர். லாபமில்லாத இடத்தில் வார்த்தைகளைக்கூட அதிகம் நஷ்டப்படுத்த விரும்பாதவர்களாய் இருந்தனர்.

ஒரு சிலர் அவள் அழகில் மயங்கி மணம் செய்து கொள்வதற்கு முன் வந்தார்கள். அவர்களோ அவளை அடைய யோக்யதை யற்றவர்களா யிருந்தனர். அவள் அழகில்தான் மனத்தைப் பறி கொடுத்தவர்களாக இருந்தார்களே யொழிய, அவளை உரிய ஸ்தானத்தில் வைத்துக் காப்பாற்றக் கூடியவர்களாகத் தென்படவில்லை.

எவ்வாவிதத்திலும் அவளுக்கு ஏற்ற கணவனைத் தேடுவதில் நான் சளைக்கவில்லை. அப்பேர்ப்பட்ட ஒரு பெண்ணைப் படைத்த கடவுள் அவளுக்கு ஏற்ற ஒரு கணவனைப் படைக்காமலா இருப்பார்! எத்தனை காலமானாலும் அவளுக்கென்று பிறந்திருக்கக் கூடியவனைக் கண்டு பிடித்தே விடுவது என்று பிடிவாதமாக இருந்தேன். விஜயலக்ஷ்மியின் பெற்றோர்களிடமும் கூறி அவர்கள் கவலையைப் போக்கினேன்.

**   **   **

அன்று ஏதோ காரியமாக அவசரமாகக் காரில் போய்க் கொண்டிருந்தபோது கார் சடக்கென்று நின்றது. "என்ன டிரைவர்!" என்று நான் கேட்டுக் கொண்டிருக்கும்போதே, "என்ன ஐயா, சாலையில் பார்த்து நடக்க வேண்டாமா! கொஞ்சம் மிஞ்சி யிருந்தால் உயிர் பறந்திருக்குமே" என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தான். காரில் அகப்பட விருந்தவனைப் பார்த்து ஆச்சரியப் பட்டேன். அவன் வேறு யாருமல்ல. என்னுடன் பால்ய வயதில் படித்த குமாரன்தான்.

"குமார் நீயா!" என்று என்னையும் அடக்க மாட்டாமல் கூவினேன்.

"அட, வசந்தா!" என்று மகிழ்ச்சியும் வியப்பும் கொண்டு அவனும் கூவினான்.

"ஆமாம், வா. வந்து ஏறிக்கொள்" என்று கூறி அவனைக் காரில் ஏற்றிக் கொண்டேன்.

அவனைக் கண்டவுடனே என் மனம் ஆனந்தக் களிப்பு கொண்டது. 'இவன்தான் விஜயலக்ஷ்மிக்கு ஏற்றவன்' என்று என் உள்ளம் அடித்துக் கூறியது. அவன் முகத்தில் தோன்றிய காம்பீர்யமும், அழகும் விஜயாவின் கணவன் இவன்தான் என்று தீர்மானம் கொள்ளச் செய்தன.

"டிரைவர், காரை உடனே வீட்டுக்குத் திருப்பு" என்று உத்தரவிட்டேன்.

"குமார், உனக்குப் பெரிய அதிர்ஷ்டம் காத்துக் கிடக்கிறது" என்றேன்.

குமாரன் பெயருக்கேற்ற அழகன். பள்ளிக்கூடத்தில் அவனிடம் எல்லோருக்குமே ஒரு தனிப் பிரியம். நான் அவனுடைய கவர்ச்சியின் வசீகரப் பட்டு நெருங்கிப் பழகினேன். ஆனால் அவன் ஒரு ஏழை. எஸ். எஸ். எல். ஸி. படித்து முடித்ததும் படிப்பை நிறுத்தி விட்டான். அவனைப் பார்த்து ஆறு வருடங்களாகின்றன. ஆனால் இன்று அவனைப் பார்க்கும்போது முன்பு காணப்படாத ஒரு தனி வசீகரம், காம்பீர்யம் எல்லாம் குடி கொண்டிருந்தன. எந்த ஒரு அசாதாரணமான கவர்ச்சியை விஜயலக்ஷ்மியிடம் கண்டேனோ, அதே கவர்ச்சியைக் குமாரனிடமும் இருந்ததை உணர்ந்தேன். 'இவனைவிட அவளுக்கு வேறு யார் தகுந்த கணவனாக வாய்க்க முடியும்!' என்று தோன்றிற்று.

அவனை விஜயலக்ஷ்மியின் வீட்டுக்கு அழைத்துச் சென்றேன். "மாமா, நம் விஜயாவுக்கு ஏற்ற கணவனைக் கண்டு பிடித்து, அழைத்துக் கொண்டு வந்து விட்டேன்" என்று கூறினேன்.



விஜயா வந்து அவனை நமஸ்கரித்தாள். இருவரும் ஒருவரை யொருவர் பார்த்தனர். அடுத்த கணம் அவள் என்னைப் பார்த்தாள். அதில்தான் எத்தனை நன்றி யுணர்ச்சி!

அங்கிருந்து இருவரும் வெளியே வந்ததும் குமாரனைப் பார்த்தேன். இதென்ன நான் காண்பது! அவன் முகம் ஏன் அப்படி வாடிப் போயிருக்கிறது! நான் கண்டது கனவா!

"வசந்தா" என்றான் குமாரன். அது எணற்றிலிருந்து கூப்பிடுவதுபோல் இருந்தது.

"விஜய லக்ஷ்மி அழகிதான். அவளைப் பற்றிக் குறை கூற முடியாது. ஆனால் நான் அவளை மணக்க முடியாமலிருக்கிறேன்" என்றான்.

எனக்கு இது ஒரு புதிராக இருந்தது. "என்ன குமார். அவளை மணம் செய்து கொள்வதில் தடை என்ன!" என்று கேட்டேன்.

"வசந்தா, நான் ஒரு ஏழைக் குமாஸ்தா. என்னைவிட மேலும் ஏழ்மை நிலையில் இவர்கள் இருக்கிறார்கள். விஜய லக்ஷ்மியை நான் மணந்து

★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★

## வள்ளல் பாரி

பழந் தமிழ் நாட்டின் வள்ளன்மையைப் பற்றிப் பேசுங்கால், வள்ளல் பாரியின் பெயர் முன்னணியில் வந்து நிற்கும். பெரும்புலவரான கபிலரும், பெண் குலத்துக்குப் பெருமையளித்த ஒளவையாரும் பாரி வள்ளலைப் பற்றி அழகாகக் கூறியிருக்கின்றனர்.

பண்டைக்காலத்துச் செய்யுள் நூல்களை அடிப்படையாகக் கொண்டு இந்நூல் புனையப்பட்டிருக்கிறது. பாரி வள்ளலைப் பற்றி இதுவரை வெளிவந்துள்ள சில கருத்துக்களை மறுத்து இந்நூலாசிரியர் தம் அரிய ஆராய்ச்சியின் பலனாகச் சில புதிய கருத்துக்களைப் புலமையோடு வெளியிட்டிருக்கிறார்.

பாரி வள்ளலுக்குப் பெரும் பகைவராக விளங்கியவர்கள் சேர, சோழ, பாண்டியர்களாகிய மூவேந்தர்கள் என்னும் கருத்து நம் தமிழகத்தில் நிலவி வருகிறது. அதற்கு ஆதாரம் இல்லை என்கிறார் இந்நூலாசிரியர். "முடியுடை மூவர்" என்று கபிலர் கூறுவது குறுநில மன்னரையே என்கிறார். "வஞ்சனையா, வாளாண்மையா!" என்னும் பகுதியில், "பாரி வஞ்சனையால் கொல்லப்பட்டான்" என்னும் பழங்கூற்றையும் இந்நூலாசிரியர் சான்றுகளோடு, வன்மையாகக் கண்டிக்கிறார். போர்க்களத்தில் இறந்து பட்டான் என்று கொள்ளவே தகும் என்கிறார். பாரியின் காலத்து ஒளவையாரும், பிற்காலத்தில் பாரியின் வாழ்க்கை வரலாற்றைக் கதையாக்கிப் பாடிய ஒளவையாரும் வேறு வேறானவர் என்று அறுதியிட்டுக் கூறுகிறார் ஆசிரியர்.

தமிழ் இலக்கியத் துறையில் இத்தகைய ஆராய்ச்சி நூல்கள் பல வெளிவரல் வேண்டும்.

பாரியின் அவையகத்துப் புலவர் பெருந்தகையாக எழுந்தருளியிருந்து தமிழுக்குப் பெருமை தந்த கபிலரின் பாடல்கள் இந்நூல் ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கின்றன.

எழுதியவர்: கு. இராஜவேலு; பிரசுரம்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1; விலை. ரூ. 2.

★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★ ○ ★

கொண்டு இன்னொரு ஏழைக் குடும்பத்தை என்னால் தாங்க முடியாது" என்றான்.

"கல்யாணச் செலவெல்லாம் நானே செய்கிறேன், உனக்கு எவ்வளவு வரதட்சணை வேண்டுமானாலும் தருகிறேன்."

"என்னை அப்படி மானம் மரியாதை இழந்தவனாக மதித்து விடாதே வசந்தா. எனக்கும் சுயமரியாதை உண்டு" என்று முகத்தில் அறைந்தாற் போல் பதில் கூறி விட்டான்.

நான் மனம் உடைந்து வீட்டுக்கு வந்து விட்டேன். என்னுடைய நிலையைக் கண்டு என் பெற்றோர்கள் மிகவும் மனம் கலங்கினார்கள். அவர்களுடைய உள்ளம் படும் வேதனையைக் கண்டு நானும் மிகுந்த கவலைப்பட்டேன். இப்படியே சில நாட்கள் கவலையில் கழிந்தன.

அன்று எனக்கு வந்த கடிதங்களையெல்லாம் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தேன். ஒரு கடிதம் என்னை அதிர்ச்சிக்கு உள்ளாக்கி விட்டது. என் வாழ்க்கையைத் திருப்பி அமைத்து விட்டது. என் வீட்டுக்கு விஜயலக்ஷ்மியைக் குடிபுகச் செய்து விட்டது! அந்தக் கடிதம், சாட்சாத் விஜயலக்ஷ்மியிடமிருந்தே வந்த கடிதம்தான்.

கடிதத்தைப் படித்தேன்; பலமுறை படித்தேன். கடைசியில் என் பெற்றோர்கள் காதில் விழும்படி சற்று இரைந்தே படித்தேன்.

அன்பரே!

தங்களை என்று நான் பார்த்தேனோ, அன்றே தங்களை என் கணவராக நினைத்து விட்டேன். தங்களைப் பற்றி அழகற்றவராகத் தாங்கள் நினைத்துக் கொள்ளலாம். கருப்பு நிறம் உடையவராக நினைக்கலாம். கருப்பில் தானே அழகிருக்கிறது. மகாவிஷ்ணு கரிய திருமேனி படைத்தவர்தான். ஆனால் அவர்தானே அழகும் காம்பீர்யமும் உள்ளவர். அந்த அழகையும் காம்பீர்யத்தையும் தாங்கள் பெற்றிருக்கிறீர்கள். ஆனால் தங்கள் முகத்திலே இருக்கும் அன்பு ஒளியை தாங்கள் எப்படிக் காண முடியும்? நான் உங்கள் பணத்துக்காக உங்களைக் கணவராக ஏற்கவில்லை. உங்கள் அன்புள்ளம் என்னை உங்கள் அடிமையாக்கி விட்டது. தாங்கள் எனக்கு ஏற்ற கணவரைத் தேடினீர்கள். மிகச் சிரத்தையுடன் தேடினீர்கள். ஆனால் அவரை நான் ஏற்றுக் கொள்வேன் என்று தாங்கள் எப்படி நம்பினீர்கள் என்பதுதான் எனக்கு விளங்கவில்லை. இருந்தாலும் தங்கள் அன்பை எண்ணித்தான் நான் எல்லாவற்றுக்கும் பொறுமையாக இருந்தேன். கடைசியாகத் தங்கள் தாள்பணிந்து கேட்டுக் கொள்ளுகிறேன். என் மீது தாங்கள் அன்பு கொண்டது உண்மையானால் தயவு செய்து என்னை ஏற்றுக் கொள்ளுங்கள். தங்கள் மனம் கோணாது நான் தங்கள் வாழ்க்கையில் பணியாற்றுவேன். இந்த ஏழையின் பிரார்த்தனைக்குச் செவி சாய்ப்பீர்கள் என்று நம்புகிறேன். அந்த நம்பிக்கை வீண் போகாது என்ற நம்பிக்கையில்தான் இக் கடிதத்தை என் பெற்றோர்களுக்கும் தெரியாமல் எழுதுகிறேன். தங்கள் அன்புள்ள

விஜயலட்சுமி

இந்தக் கடிதத்தைப் படித்துக் கேட்ட என் பெற்றோர்கள், "அடாடா! பெண் என்றால் அவள் அல்லவா பெண்!" என்று வியந்தார்கள். மேலும் "அடுத்த முகூர்த்தத்திலேயே கலியாணத்தை வைத்துக் கொள்ளுங்கள் என்று தந்தி கொடுத்துவிடு" என்றும் சொன்னார்கள்.

உணர்ச்சி உத்வேகத்தினாலோ அல்லது வேறு எந்தக் காரணத்தினாலோ தெரியவில்லை, நான் வாய் பேசாமல் "ஆகட்டும், தந்தி கொடுத்து விடுகிறேன்" என்றேன். என் மனக் கண்ணில் விஜயலட்சுமி வெற்றிப் புன்னகை புரிந்து காட்சியளித்துக் கொண்டிருந்தாள். அந்த மோகனச் சிரிப்பிலே நான் இந்த உலகத்தையே மறந்தேன்.

•• •• ••

விஜயலக்ஷ்மி இன்று என் வீட்டின் கிரகலக்ஷ்மியாக இருக்கிறாள். அவளுடைய அன்பில் நான் புது வாழ்வு பெற்று விட்டேன். ஊரில் உண்மையிலேயே என் மதிப்பு உயர்ந்து விட்டது. என் தொழிலில் எனக்கு ஏற்பட்டிருக்கும் உற்சாகம் காரணமாகத் தொழில் உயர்ந்து விட்டது. இதனால் நான் மிகுந்த மகிழ்ச்சியுள்ளவனாக இருந்தேன். மகிழ்ச்சி நிறைந்த என் முகத்தைப் பார்த்த என் பெற்றோர்கள் மகிழ்ந்து போனார்கள். அவர்களுடைய தேவைகளை எல்லாம் மிகுந்த கவலையுடன் கவனித்துக் கொண்டாள் என் மனைவி. அவர்கள் விஜயலக்ஷ்மியின் அன்பை வியந்து பாராட்டிக் கொண்டாடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் திருமுகத்திலே ஆனந்த லக்ஷ்மி விஜயம் செய்திருந்தாள் என்றால் அதெல்லாம் என் வீட்டுக்கு விஜயம் செய்திருந்த விஜயலக்ஷ்மியின் முக விலாசம்தான்!

**DEPENDABLE**

# SERVICE



அநேக மயர்ஸ் பம்புகள் சென்ற 25 வருஷங்களுக்கு மேலாகத் திறம்பட சேவை செய்து வருகின்றன. உயர்ந்த முறையில் மயர்ஸ் பம்புகள் தயாரிக்கப் படுவதாலும், விற்பனைக்குப் பிறகு உடனுக்குடன் நம்பகமான முறையில் சேவை அளிக்கப்படுவதாலும் சிறந்து விளங்குகின்றன.

**MYERS**
**AUTOMATIC**
**ELECTRIC PUMPS**



**வாட்டர் சப்ளை**
**ஸ்பெஷலிஸ்ட்ஸ் லிமிடெட்**
**45, தம்பு செட்டி தெரு, சென்னை-1**

---

## தாயின் அன்புக்குரியது

*வின்கோலா கர்ப்பிணிகளுக்கும், பிரசவித்த பிறகும் சாப்பிடச் சிறந்தது.*

*நீடித்த நோய்களுக்குப் பின் சீக்கிரமாக ஆரோக்கியத்தைப் பெற ஏற்ற டானிக். சாப்பிட இனிமையான இது பசியையும் ஜீரண சக்தியையும் உண்டாக்கி எடையை அதிகப் படுத்துகிறது.*

**வின்கோலா**
தேர்ந்தெடுத்த
டானிக்





**ஸ்டாண்டர்ட் பார்மசூடிகல் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா**



இதன் ரகசியம் 'கோலினஸ்' நுரைதான். அது க்ளோரோபில்லை வாயில் பிரஷ் நுழைய முடியாத இடங்களுக்கும் எடுத்துச் செல்கிறது. உங்கள் சுவாஸம் மணிக்கணக்கில் நறுமணம் கமழ விளங்குகிறது!



# பெருமதிக்கு முதன்மையானது –ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினஸ்'

**ஏனெனில் அது உங்கள் பற்களை சுத்தம் செய்வது தவிர, மேற்கொண்டும் உதவுகிறது!**

உங்கள் பணத்திற்கு சிறந்த பயன் தருவது கூட! ஈரமில்லாத பிரஷில் அரையங்குலமே தேவை — எனவே 'கோலினஸ்' உங்களுக்கு அதிகநாள் வருகிறது.



க்ளோரோபில் சேர்ந்த 'கோலினஸ்' பல்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, உங்கள் ஈறுகளை திடாரோக்கியமாக வைத்திருக்க உதவுகிறது!




'கோலினஸ்' புன்னகையில்
ஆரோக்கியம் ததும்புகிறது

## குழந்தைகளுக்கு இலவசம்

'நகைமுகனும் அவனுடைய பிராணி நண்பர்களும்' என்ற அழகான சித்திரக்கதைக்கு இப்பொழுதே எழுதுங்கள். உங்கள் பெயர் மற்றும் விலாசத்தை மட்டும் அனுப்பினால் போதும்:
நகைமுகன், டிபார்ட்மெண்ட் 38
த. பெ. 541, பம்பாய்



நகைமுகன 'கோலினஸ்' சிறுவன்

GK. 9375

# கவலை தீர்ந்தது!

கடகம்

அன்று காலை வேலைக்குப் போனபோது இருந்த உற்சாகம் சாயந்திரம் வீடு திரும்பும் போது சீதாராமனிடம் இல்லை. எதிர்காலம் பயங்கரம் நிறைந்ததாகவே அவனுக்குத் தோன்றியது. என்றுமில்லாத ஒரு பெரும் கவலை அவன் மனத்தை அழுத்தியது.

சீதாராமன் ஒருவன் மட்டும் இவ்வுலகில் தனித்து விடப்பட்டிருந்தால், அவன் அவ்வளவு தூரம் வேதனை யடைந்திருக்க மாட்டான். எப்படியோ காலத்தைக் கடத்தி விடுவான். ஆனால் அவன் அந்த நிலைமையில் இருக்கவில்லை.

காலமெல்லாம் உழைத்து, கடைசிக் காலத்தில் ஓய்ந்து போய், சொற்ப ஓய்வு ஊதியம் பெற்றுக் கொண்டிருந்தார் அவன் தந்தை. இளமை சொட்டும் பருவ காலத்து அழகு மங்கையாய், கல்யாணத்துக்குக் காத்துக்கொண்டிருந்தாள் அவன் தங்கை. இவ்விருவருமே சீதாராமன் பொறுப்பில் இருந்தார்கள்.

அவன் அன்னை பாக்கியம் செய்தவள். கஷ்டங்களை அனுபவிக்கும் துரதிர்ஷ்டம் இல்லாது, மஞ்சள் குங்குமத்தோடு, இறந்து போய்ப் பத்து வருஷங்கள் ஆகியிருந்தன.

தந்தையைப் பற்றிக் கூட அவன் கவலைப்படவில்லை. தன் தங்கையின் கல்யாணத்தை நிச்சயித்து, ஒருவன் கையில் ஒப்படைத்து விட்டால் அல்லவா அவனுக்கு நிம்மதி ஏற்படும்!

தன்னுடைய வேலையைச் சீதாராமன் அக்கறையோடு, கடமை உணர்ச்சி தவறாமல் செய்து வந்தான். அதிகப் பிரயாசையுடன் உழைத்தான். உண்மையாக உழைக்கும்போது, உத்தியோகத்தில் பதவி உயர்வு கிட்டும் என்று நிச்சயமாக நம்பியிருந்தான். அவன் இப்படி எண்ணியதற்கு மாறாக, வேலையே போய்விடுவதென்றால், அவன் அடைந்த வேதனையைச் சொல்லி முடியாது. இந்த உத்தியோகத்தை நம்பி, சம்பாதிப்பதில் மீதம் பிடித்து, தங்கையின் கல்யாணத்தை நடத்தி விட வேண்டும் என்று நினைத்திருந்தான். வெண்ணெய் திரண்டு வரும்போது, தாழி உடைந்ததுபோல அவன் வேலையே போய் விட்டது. அவன் எண்ணம் சரிந்து விழுந்த மணல் வீடாய் உருக்குலைந்து போய் விட்டது.

மாலை நான்கு மணிக்கு, மானேஜர் கூப்பிடுகிறார் என்று சீதாராமன் போனான். அவர் கையிலேயே உத்தரவைக் கொடுத்து விட்டார்.

"கம்பெனியில் ஆள் குறைப்புத் திட்டத்தை அமுல் நடத்துவதினால், உங்களை வேலையிலிருந்து நீக்குகிறோம். பாக்கிச் சம்பளத்தை இன்றே வாங்கிக் கொண்டு போகலாம்" என்று படித்த சீதாராமனின் தலை சுழன்றது.

பாக்கிச் சம்பளம் எழுபத்தாறு ரூபாயை அவன் பெற்றுக் கொண்டான். அந்தக் கம்பெனியைப் பொறுத்த வரையில் அவன் பெறும் கடைசிச் சம்பளம் அதுதான். அடுத்தபடியாக அவன் எங்கு வேலை செய்ய நேருமோ! வேலை கிடைக்குமோ! கிடைக்காதோ!

சீதாராமன் என்னென்னதெல்லாம் எண்ணினான். அதே சமயம் அவன் நினைவு அவன் அண்ணன் ராஜாராமனைத் துரத்திக் கொண்டு ஓடியது.

அண்ணனா அவன்! துரோகி! அவன் செய்த காரியம் அந்தக் குடும்பம் சீர் குலைந்து, ஏழைமை நிலைக்கு வந்து விட்டது. ராஜாராமன் நன்றாய்ப் படித்திருந்தும், சகவாச தோஷத்தினால் தறுதலையாய் வேலை வெட்டி யின்றித் திரிந்தான். குடும்பத்தில் அவனுக்குப் பொறுப்பு இருக்கவில்லை. அக்கறையில்லை. அதோடு மட்டுமாகிலும் அவன் நின்றிருக்கலாம். அவன் தந்தை விநாயகம் பிள்ளை, லலிதாவின் கல்யாணத்துக்கென்று வைத்திருந்த பணத்தையும், லலிதாவுக்குப் பயன்படக் கூடிய அம்மாவின் நகைகளோடும் ஒருநாள் ராஜாராமன் கம்பி நீட்டி விட்டான். பிறகு அவனைப் பற்றித் தகவலே யில்லை.

ஒரு நிமிஷம் அண்ணன் பேரில் சீதாராமனுக்குக் கோபம் வந்தது. உடனே யாரையும் நொந்து கொள்வதில் பயனில்லை என்று பட்டது.

சீதாராமன் வீட்டை நெருங்கியபோது மாலை மறைந்து நன்றாக இருட்டி விட்டது.

வெளித் திண்ணையில் அமர்ந்திருந்த அவன் தந்தை விநாயகம் பிள்ளை கவலையோடு காணப்பட்டார். சோர்ந்து போயிருந்தார். அவர் முகம் வாடி வதங்கித் தொங்கிப் போயிருந்தது.

"அப்பா! ஏன் இப்படி இருக்கிறீர்கள்! என்ன விசேஷம்! நடந்ததைச் சொல்லுங்கள் உடனே" என்று தந்தையைப் பார்த்துக் கேட்டான். அவரை இதற்கு முன் அவன் இப்படிப் பார்த்தவன் அல்ல. சொந்த மகன் இருந்த செல்வத்தை அபகரித்துப் போன போதுகூட அவர் முகம் இத்தகைய வாட்டத்தை அடையவில்லை. வெகு அலட்சியமாக அதைச் சட்டை செய்யாதவராக யிருந்து விட்டார். ஆனால் இப்பொழுது அவர் முகத்தில் மலர்ச்சி யில்லை. இந்தக் காட்சி அவனை அணு அணுவாகத் துளைத்து விட்டது.



"மூச்சே விட முடியவில்லை!"

"உடம்பில் ஒன்றும் தப்பு இல்லை. மீசையை மட்டும் எடுத்து விடுங்கள். அப்புறம் சரியாக மூச்சுவிட முடியும்!"

மகனின் ஆர்வம் மிகுந்த கேள்விக்கு மௌனம் சாதித்தார் விநாயகம்பிள்ளை. அவன் ஆவலைத் தணிக்க அவர் பதில் சொல்லவில்லை.

'விடு விடு' என்று அவன் உள்ளே போனான். லலிதா சமையல் வேலைகளை முடித்து, அவனுக்காகக் கவலையோடு காத்துக் கொண்டிருந்தாள்.

"லலிதா! என்ன விசேஷம்! நீ ஒரு மாதிரி யிருக்கிறாய்! அப்பா ஒரு மாதிரி யிருக்கிறார்!"

"அண்ணா! இன்றைக்குச் சாயந்திரம் வீட்டுக்காரன் வந்திருந்தான். எண்ணெயில் விழுந்த பணியாரம் மாதிரி குதித்தான். கூச்சல் போட்டான். வாடகை பாக்கி யிருக்கிறதாம் மூன்று மாசத்துக்கு நாற்பத்தைந்து ரூபாய் தரவேண்டுமாம். இனிமேல் பொறுக்க முடியாதாம். சூடு சுரணையிருந்தால், பணத்தைக் கொடுத்து விட்டுப் பானம் பண்ணுங்கள் என்று பேசி விட்டுப் போனான். வீட்டையும் மரியாதையாகக் காலி பண்ணிவிட வேணுமாம். அப்பாவுக்கு மனசு செத்துப் போய்விட்டது, அவமானம் பொறுக்க மாட்டாது போய் உட்கார்ந்து விட்டார்...நமக்கு ஏன் அண்ணா இத்தனை கஷ்டம்! பெரிய அண்ணா மட்டும் சரியாக இருந்திருந்தால், நமக்கு இதெல்லாம் ஏற்பட்டிருக்காதே" என்று கூறும் போது லலிதா கண் கலங்கினாள்.

'சீச்சீ! இதற்காகவா நீயும் அழுகிறாய்! கவலை வேண்டாம்! வாடகைப் பாக்கியைக் கொடுத்து விடலாம். பணம் என்னிடமிருக்கு. இந்த ஊரை விட்டே போய்விடலாம்" என்று சீதாராமன் லலிதாவுக்குக் கம்பெனியிலிருந்து வாங்கி வந்த பணத்தைக் காண்பித்தான்.

அதற்குள் விநாயகம் பிள்ளை அங்கு வந்தார்.

சீதாராமன் அவரிடம் பணத்தைக் கொடுத்தான். வேலை போன சங்கதியைச் சொன்னான். வெளியூருக்குப் போக வேணும் என்ற தன் நோக்கத்தையும் சொன்னான்.

அப்பொழுது அவர்கள் தஞ்சையில் இருந்தனர். மகனுக்கு வேலை போனது இடிமேல் இடியாகத் தோன்றியது விநாயகம் பிள்ளைக்கு.

வீட்டுக்காரனுக்கு வாடகைப் பாக்கி சேர்ந்தது. அடுத்தது அவர்கள் அந்த ஊரை விட்டே போக வேண்டியதுதான் பாக்கி.

அதற்குள் சீதாராமன் பத்திரிகையில் வந்திருந்த விளம்பரம் ஒன்றைக் கண்டான். உடனே சந்தோஷம் தாங்க முடியாமல் துள்ளிக் குதித்தான்.

அந்த விளம்பரம் இது தான்.

"மதுரையில் புதுப் பஞ்சாலை உதயம். எல்லா விதமான வேலைகளுக்கும் ஏராளமான ஆட்கள் தேவை. நேரிலும் தபால் மூலமாகவும் விண்ணப்பித்துக் கொள்ளலாம். மானேஜர்

மனோகரா பஞ்சாலை."

"அப்பா, நமக்கு நல்ல காலம் பிறந்து விட்டது. மதுரைக்குப் போனால் எனக்கு நிச்சயம் வேலை கிடைக்கும். நம் கஷ்டமும் நீங்கும்" என்றான் சீதாராமன். விநாயகம் பிள்ளையும் அவனுடைய பிரயாண யோசனையை ஒப்புக் கொண்டார்.

* * *

வேலை தேடி வந்திருப்பவர்களில் வேண்டியவர்களை மட்டும் தேர்ந்தெடுக்க அங்கு அமர்ந்திருந்த இருவரைப் பார்த்ததும் சீதாராமனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. அவர்களில் ஒருவன் அவன் அண்ணன்; ராஜாராமன். ராஜாராமனும் தன் தம்பியைக் கண்டு கொண்டான்.

"அண்ணா! நீயா! இப்பொழுதாவது இந்தத் துர்ப்பாக்கியசாலியை உன்னால் அடையாளம் கண்டு கொள்ள முடிகிறதா!" என்று தம்பி அண்ணனைப் போய் ஆர்வத்தோடு அணைத்துக் கொண்டான்; கண்ணீர் வடித்தான்.

"தம்பி! வா, இப்படி வந்து உட்காரு. அப்பா எங்கே! தங்கை எங்கே! இப்பொழுது எல்லாரும் எங்கே யிருக்கிறார்கள்!"

"என்கூடத்தான் வந்திருக்கிறார்கள். சத்திரத்தில் தங்கியிருக்கிறார்கள். அண்ணா, நீ போன பின் எவ்வளவோ கஷ்டங்கள், சொல்லி முடியாது."

"தம்பி, தவறு என்னுடையதே! கொஞ்சம் பொறுத்துக் கொள். வந்திருப்பவர்களை அனுப்பி விட்டு, நிறையப் பேசுவோம்."

ராஜாராமன் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு, வேலையில் ஈடுபட்டான். சீதாராமன் பொறுமையோடு உட்கார்ந்திருந்தான் ஒரு வழியாக ஆள் தேர்ந்தெடுப்பு வேலையும் முடிந்தது.

பிறகு ராஜாராமனும், சீதாராமனும் சத்திரத்துக்குச் சென்றார்கள். அவர்களுடன் மூன்றாவது ஆசாமியாக ராஜாராமன்கூட இருந்த சேகரன் என்ற அந்த வாலிபனும் போனான்.

கவர்ச்சியும் கம்பீரமும் பொருந்திய அழகன் சேகரன். கட்டிளம் சிங்கம். சிவந்த மேனி. துருதுருப்பான இளைஞன். அன்புக்கும் பொறுமைக்கும் பூஷணமாக அவன் விளங்கினான்.

ராஜாராமன் தந்தையின் காலில் விழுந்தான்.

"அப்பா, என்னை மன்னித்து விடுங்கள், அப்பா! நான் உங்களை மோசம் செய்து விட்டேன். என் நீச புத்தியினால் உங்களை இப்படி அவஸ்தைக் குள்ளாக்கி விட்டேன்."

"தம்பி! போனதைப் பற்றி ஏன் பேசுகிறாய்! பழங் கணக்கைப் பார்க்க இது நேரமில்லை. உன்மீது எனக்குக் கோபமில்லை" என்றார்.

"அப்பா! உங்களைப் பிரிந்து வந்த பின், எங்கெங்கோ போய்ச் சுற்றினேன். பணம் கரைந்தது. கடைசியாக இலங்கைக்குப் போனேன். பாடுபட்டு உழைத்தேன். என் உழைப்பைப் பார்த்து முதலாளி என் மீது அன்பு செலுத்தி ஆதரவு காட்டினார். அவர் மகளை எனக்குக் கல்யாணம் செய்து கொடுத்தார். அவர் மகன், இதோ இருக்கும் இந்தச் சேகரனும் என்னிடம் பிரியமாக இருந்து வருகிறான். அவர் இறந்ததும், சொத்துக்களை விற்று எடுத்துக்கொண்டு நாங்கள் இங்கு வந்து விட்டோம். வந்து ஒரு வாரம்தான் ஆகிறது. இங்கு பஞ்சாலையை ஆரம்பிக்க ஏற்பாடுகள் செய்து வருகிறோம். ஏற்கெனவே இயந்திரங்கள் வாங்கி, வந்து சேர்ந்து விட்டன. இந்த வேலை முடிந்தபின் நாங்களே உங்களிடம் வர இருந்தோம். அதற்குள் உங்களைச் சந்திக்கும் படி நேர்ந்து விட்டது. அப்பா! என்னை மன்னித்தேன் என்று சொல்லுங்கள் அப்பா!"

ராஜாராமன் தந்தையின் கால்களை மீண்டும் பிடித்துக் கொண்டான்.

"ராஜாராம்! எழுந்திரு. உன்னிடத்தில் எனக்குக் கோபமில்லை; நீ என் மகன் அல்லவா! உன் தம்பி சீதாராமன் வாழ்க்கையில் சீர்படவேணும். லலிதாவுக்குக் கல்யாணம் ஆகவேணும். என் பெற்ற மனம் இதையே விரும்புகிறது. எல்லாம் முடிந்து விட்டால் நிம்மதியாக என் மீதி நாட்களைக் கழிப்பேன்" என்றார் தந்தை.

"அப்பா, அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன். என் மைத்துனன் சேகரனுக்கு லலிதாவைக் கொடுக்கப் போகிறேன். எல்லா ஏற்பாடுகளையும் செய்ய நானும் சேகரனும் உங்களிடம் வர இருந்தோம்."

அந்த நிமிஷமே விநாயகம் பிள்ளை கவலையை மறந்தார். எல்லாருடைய கவலையும் தீர்ந்தது!

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki Press, No. 20. Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.




# வாரம் ஒரு அணா செலவிற்கு பற்களுக்கு முழுப் பாதுகாப்பளிக்கிறது!

சாம்பல், கரிபோன்ற கரகரப்பான பொருள்கள் பற்களில் கீரல் விழச் செய்கின்றன. இந்த கீரல் வழியாக பாக்டீரியா புகுந்து கெடுதல் விளைவிக்கிறது. பற்கள் பூரண ஆரோக்கியத்தோடு இருக்க விஞ்ஞான முறையில் தயாரித்த ஒரு பல் துலக்கும் வஸ்து உங்களுக்குத் தேவை. ஆகையால் கிப்ஸ் டென்டிபிரிஸ் வாங்குங்கள். பற்களுக்கு பூரண ஆரோக்கியத்தைத்தரும் எல்லா பொருள்களையும் ஒன்று சேர்த்து கெட்டியாகச் செய்தது தான் கிப்ஸ். அன்றியும் ஒரு டூத்பேஸ்ட் செய்யும் எல்லா வேலைகளையும் அதன் பாதி விலைக்குச் செய்கிறது. இதை உபயோகிப்பது மிகவும் சுலபம். விரலையோ அல்லது பிரஷையோ தண்ணீரில் நனைத்துக் கொண்டு கட்டியின்மேல் தேய்க்கவும். அதன் சுவையை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள் அன்றியும் அதன் மிருதுவான ஊடுருவிப் பாயும் நுரை உங்கள் பற்களை பளிச்சென்று வெண்மையாக இருக்கச் செய்யும்!




உங்களுக்குப் பிரியமான கிப்ஸில் க்ளோரோபில் சேர்ந்திருக்க விரும்பினால் கிப்ஸ் க்ளோரோபில் டென்டிபிரிஸ் கேளுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படும் வெள்ளை டப்பாவில் பெயரைக் கவனித்து வாங்குங்கள்.

நீலம், சிவப்பு, பச்சை டப்பிகளில்

# கிப்ஸ் டென்டிபிரிஸ்

GD. 36-50 TM — டி. அன்டு டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது

**Regd. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*










# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமி
களிலிருந்து உங்களைப்
பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 248-50 TM